கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்

ஸ்ரீ பட்டனார் அருளிச் செய்த

# பகவத் கீதை






**கோவிலூர் மடாலயம்**

கோவிலூர் - 630 307

(காரைக்குடி அருகில்)

8-6




உ
சிவமயம்

# கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்

ஸ்ரீ பட்டனார் அருளிச் செய்த

# பகவத் கீதை



விலை ரூ. 125/-

வெளியீடு:
**கோவிலூர் ஆதீனம்**
**சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**
**கோவிலூர் மடாலயம், கோவிலூர் - 630 307.**
**(காரைக்குடி அருகில்)**

**மே - 2014**



உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலஉ லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

வானவ ரசமாந் தொடர்பினால் உலகோர் வழுத்துறும் வன்னி ஐங்கரனை
வானவ ரதன மணியறு முகனை மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன் வணங்குநற் றிருநெலை மாதை
வானவ ரதனா முத்திரா மேச வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.

தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும் - எந்தம்உயிர்
தான்ஆகு வானும் சரணாகு வானும்அருட்
கோனாகு வானுங் குரு.

8-6

## ஆசியுரை

நம் சற்குருநாதர் தெய்வத்திரு. நாச்சியப்பர் பட்டம் ஏற்றுப் பத்தாம் ஆண்டு நிறைவு விழா 2005ம் ஆண்டு ஜூலை மாதம் நடத்தினோம். அப்போது நம் "கோவிலூர் வேதாந்த மரபு நூல்களை" வெளியிடத் துவங்கினார்கள். நம் மரபு நூல்களான 16 நூல்களில் குருநாதர் காலத்திலே 12 நூல்கள் நான்கு தொகுதிகளாக தொடர்ந்து வெளியிடப்பட்டுள்ளன. மீதம் உள்ள "பகவத்கீதை", "பிரம்மகீதை", "பஞ்சதசி", "ஞானவாசிட்டம்" ஆகிய நான்கு நூல்களும் அதிகமான பாடல்கள் உள்ளவை. ஆகையால் அவற்றைத் தனித்தனியே வெளியிட வேண்டிய அவசியம் நேர்ந்துள்ளது.

தற்போது பகவத்கீதை நீண்ட இடைவெளிக்குப்பின், ஏறக்குறைய ஐந்து ஆண்டுகள் கடந்து வெளியிடப்படுகின்றது. இதற்குக் காரணம் மடாலயத்திற்கும், நம் அறநிலைக்கும் ஏற்பட்டுள்ள பணிச் சுமையே.

தமிழ் பகவத்கீதை மொழிபெயர்ப்பு நூல் அல்ல. முதல் நூல் கருத்துக்களை மனதில் ஏற்றுத் தீந்தமிழ் செய்யுள்களாக படைக்கப்பட்ட நூல். பட்டனார் எனும் சிறந்த ஞானி அரிய எளிய தமிழில் இந்நூலைச் செய்துள்ளார். இதனை நாம் வெளியிடும் எளிய தமிழ் உரையுடன் கற்றால் அன்பர்களுக்குத் தெளிவான முறையில் பகவத்கீதையின் நுணுக்கங்கள் புரியும்.

அடுத்த மூன்று நூல்களும் தொடர்ந்து வெளியிட முயற்சிகள் மேற்கொள்ளப்படும்.

இந்நூலிற்கு மிகச் செம்மையாகவும், எளிமையாகவும் கருத்துரை எழுதித் தந்த ஆதீனத்தின் அன்பர் காப்பியக் கவிஞர் மீனவன் அவர்கட்கு வாழ்த்துக்கள், பாராட்டுகள். இவ்வுரையை ஆராய்ந்து திருத்தம் செய்து தந்த ஸ்வாமி ப்ரம்ஹ வித்யானந்த சரஸ்வதிசாமி அவர்களுக்கு நன்றி.

இந்நூல் ஆதி குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடிகட்கும், குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் மலர்ப்பாதங்கட்கும் சமர்பிக்கப்படுகின்றது.

ஸ்ரீ சற்குருநாதன் துணை

மே – 2014

ஸ்ரீலஸ்ரீ மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள்
கோவிலூர் ஆதீனம்



உ

சிவமயம்

# பகவத் கீதையின் பெருமைச் சுருக்கம்

1. அனைத்து உபநிடதங்களும் பசுக்கள். கண்ணபிரான் பால் கறக்கின்றவர். அருச்சுனனே கன்று. ஞான விருப்பம் உடைய புத்திசாலியே அனுபவிக்கின்றவன். கீதை என்னும் அமிர்தம் ஒப்பற்ற பால் ஆகிறது.

2. எவன் ஒருவன் கொடுமையான பிறப்பு இறப்பின் வடிவாகிய சமுசாரக் கடலைக் கடப்பதற்கு விரும்புவானோ, அவனே கீதை என்ற தோணியின் மீது ஏறி எளிதாக அதன் கரையை அடைவான்.

3. மனிதர்களுக்குத் தினந்தோறும் நீர்க்குளியல் உடல் அழுக்கைப்போக்கக் காரணமாய் இருக்கின்றது. ஆனால் கீதா சாத்திரம் என்கின்ற நீர்க்குளியல் பிறப்பு இறப்பின் வடிவமான சம்சார அழுக்கைப் போக்குவதாய் இருக்கின்றது.

4. கண்ணபிரான் அருச்சுனனை நோக்கி, வாராய் பார்த்தா, எங்கு கீதையின் ஆராய்ச்சியும், படித்தலும், படிக்கச் செய்தலும் நடக்கின்றதோ, அந்த இடத்தில் எப்போதும் நான் வாசம் செய்கின்றேன், இது உறுதி என்று சொன்னார்.

ஆசியுரை

# கோவிலூர் ஆதீனம்

# ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள்

பாரதநாட்டின் தலையாய பெருமை நமது ஆன்மீக உயர்வு பற்றியதாக உள்ளது. ஆன்மீகத்தில் தலையாயது வேதாந்தம். நாமனைவரும் 'இன்பம் எங்கே உள்ளது' எனத் தேடுகிறோம். 'அது உனக்குள்ளேயேதான் இருக்கிறது' என்பது வேதாந்தம். இன்பமும் மன அமைதியும் பெற்று, அவற்றை நிரந்தரமாக்கிக் கொள்வதில் தொடங்கி, உண்மையான தேடுதல் யாது என அறிவுறுத்தி, 'உயிருடன் உள்ள போதே முத்தி' என்பதற்கான வழிகாட்டலை அருளுவது வேதாந்தம் மட்டுமே. இவற்றையெல்லாம் வாழ்வில் நடைமுறைப்படுத்த உதவுவன வேதாந்த சாத்திர நூல்கள்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வேதாந்த நூல்கள் சமஸ்கிருத மொழியில் கற்றுக் கொடுக்கப்பட்டன. வேதாந்த விருப்பமுடையவர்கள், தமிழ் மட்டுமே அறிந்தோர், சமஸ்கிருதம் பயிலுவதில் உச்சரிப்பு இடர்ப்பாடுகள் உண்டு. சாமான்ய மக்களும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற உயரிய நோக்கோடு, இக்கருத்துகளை எளிமையாக்கிக் கொடுத்த பல பெரியோர்களும் உண்டு. சுமார் 700 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தவத்திரு தத்துவராய சுவாமிகள் இத்தகையவர். தமிழ் மற்றும் சமஸ்கிருத மொழிகளில் வல்லவரான சுவாமிகள், அவரது குருவை மகிழச் செய்ய, சங்கரரின் அத்வைத வேதாந்தக் கருத்துக்களையெல்லாம் திரட்டி, அவற்றைத் தமிழ்ச் செய்யுட்களாக உருவாக்கினார். இவ்வாறு பல ஞான நூல்கள் சுவாமிகளால் இயற்றப்பட்டன. இந்நூல்களைக் கற்றவர்கள், பின்னர், தமிழ் வழி வேதாந்த மரபு ஒன்றை உருவாக்கினர்.

சுமார் 200 ஆண்டுகளுக்கு முன், நகரத்தாரான முக்திராமலிங்கர், தமிழ் வழியில் வேதாந்தம் முழுமையும் பயின்று, அதனை மற்றோருக்குக் கற்றுக்கொடுக்க விரும்பி இத்திருமடத்தினை உருவாக்கினார். வேதாந்தக் கருத்துக்களனைத்தையும் உள்ளடக்கிய தமிழ் நூல்களைத் தேர்வு செய்து கோவிலூரில் கற்பித்து வந்தார். 'கற்க வேண்டியவை அனைத்தையும் தாய் மொழியிலேயே கற்க வேண்டும்' எனவும், 'கற்க விரும்புவனுக்கு, ஏழ்மை, சாதி வேறுபாடுகள் தடையாகாது' என்பதையும் வற்புறுத்தும் இக்காலத்தவருக்கு முன்னோடியாகத் திகழ்ந்து, இதற்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தவர் முக்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் ஆவார்.

இத்திருமடத்தில் கடந்த 190 ஆண்டுகளாகக் கற்பிக்கப்பட்டு வருவது 16 வேதாந்த நூல்கள் ஆகும். இந்நூல்களெல்லாம் மொழிபெயர்ப்பாக அமையாது, தமிழ்ச் செய்யுட்களாக இயற்றப்பட்டதால், இவை மூலத்திற்கு இணையெனப் போற்றப்படுகின்றன.

உண்மைப் பொருளான பிரம்மத்தைப் பற்றி நூல்கள் மூலமாகப் படித்தறிந்து கொள்வதற்கும் மேலாக, பிரம்மத்தையே உணர்வதற்குப் பயன்படுமாறு இந்நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இங்கு கற்பிக்கப்படும் தமிழ்வழி வேதாந்தப் பாடத்திட்டம் கல்லூரிப் படிப்பிற்கு இணையானது. 'கோவிலூர் மரபு' எனப் பெயர் பெற்றது. வேதாந்தம் மிகுதியாகக் கற்பிக்கப்படும் வடமாநிலங்களிலேயே, இப்பாடத்திட்டம் மற்றும் மரபுகளை அங்குள்ள முறைக்கு ஒப்பாகக் கருதப்பட்டு, 'கோவிலூர் மண்டலி' எனப் பெருமைப்படுத்தப்பட்டுள்ளது.

இந்நூல்களைத் துறவியார் மட்டுமின்றி, குடும்பத்தவரும் கற்கலாம். இலவச உணவு, உடை, இருப்பிடத்துடன், உலகியல் கவலைகளற்ற சூழலில் இந்நூல்களைக் கற்றுப் பயனடைய விரும்புவோர் வரவேற்கப்படுகிறார்கள்.

இதை நமது திருமடத்தை நிறுவிய ஸ்ரீ ல ஸ்ரீ முக்திராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் திருப்பாதக் கமலங்களில் சமர்ப்பித்து அவரது பேரருளை நம் அனைவருக்கும் அருளப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் சத்

நவம்பர், 2005

ஸ்ரீ சற்குருநாதன் துணை



உ

சிவமயம்

# அணிந்துரை

அயன் படைப்பாம் இவ்வுலகில் ஏழு வகைப் பிறப்புச் சீவர்கள் உள்ளனர். இவர்களுள் மனித சரீரம் படைத்த சீவர்களே மேலோர் ஆவார்கள்.

மனித சரீரத்தில் தான் இகலோக பரலோக அறிவு உள்ளது. இந்த அறிவினால், இறைவனால் செய்யப்பட்ட சுருதி(வேத)ப் பிராமாணம் உண்டாகிறது. இப்படிப் பல பிறவிகள் அடைந்தும், சுவர்க்காதிப் பதவிகளும் இவ்வுலகில் போக பாக்கியம் பெற்றும் மனித சீவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. அவன் இலட்சியமான மாறாத பெரிய, துக்கக் கலப்பில்லாத பேரின்பம் கிடைக்கவில்லையே என்று ஏமாற்றம் கொள்கிறான். சுருதியை ஆராய்கிறான். அதில் கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்று பிரிவுகளில் தத்துவ ஞானமே சர்வதுர்க்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தி ரூப முத்தியைக் கொடுக்குமே அல்லாது, வேறு எதுவும் கொடுக்காது என்று தெரிந்து கொள்கிறான். அப்படித் தெரிந்து விவேகம் உடையவர்கள் சற்குருவைத் தேடிச் செல்கின்றனர். இவர்களைத்தான் ஜிஞ்ஞாசு (ஞான விருப்பம் உடையவன்) முமூட்சு (மோட்ச இச்சையுடையவன்) என்று சாத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. இத்தகைய முமூட்சுகளைத்தான் காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் வருக! வருக! என வரவேற்கிறது.

காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் சுமார் 180 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகளால் திருநெல்லை அம்மையின் பேரருள் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது. இம்மடத்தில் தமிழ் வழி வேதாந்தப் பாடங்கள் நடத்தப்படுகின்றன. அந்தச் சாத்திரங்களின் வரிசை வருமாறு:-

1. நாநா சீவ வாதக் கட்டளை
2. கீதாசாரத் தாலாட்டு
3. சசிவன்ன போதம்
4. மகாராஜா துறவு
5. வைராக்கிய சதகம்
6. வைராக்கிய தீபம்
7. இலட்சணா விருத்தி
8. வேதாந்த சூடாமணி
9. கைவல்லிய நவநீதம்
10. விவேக சூடாமணி
11. அஞ்ஞவதைப் பரணி
12. பஞ்ச தசி
13. ஈசுவர கீதை
14. பிரம்ம கீதை
15. பகவத் கீதை
16. ஞான வாசிட்டம்

மேற்படி நூல்களுக்கு ஆதாரமாக முதலில் படிக்க வேண்டிய நூல்கள், குட்டித் திருவாசகம், சீடாச்சாரம், கோவிலூர் குசுமாஞ்சலி, பட்டினத்தார் பாடல்கள் ஆகும். இக்கிரம நூல்களைக் குருமுகமாகக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற முறையில் முமூட்சுகளின் வாழ்க்கை அமையும்.

இந்நூல்களைக் கற்க வரும் முமுட்சுகளுக்கு விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் ஆகிய நான்கு சாதனங்கள் வேண்டும். இவைகளே தகுதியாகும். ஆனால் மேற்படி சாதனங்கள் முழுதும் பெற்றிருக்கவில்லை என்றாலும் எட்டில் ஒரு பாகம், அதாவது 1/8 பாகமாவது, பெற்றிருந்தால் கூட அவரைப் பரிசீலனை செய்து சேர்த்துக்கொண்டு முழுமை பெறச் செய்வர். மற்றபடி கல்வி, வயது, திருமணம் ஆனவரா அல்லது ஆகாதவரா என்ற தகுதிகளைக் கொள்வதில்லை. இன்னும் இந்து மதத்தின் உட்பிரிவுகளான சைவம் முதலிய சமய, ஜாதி, இனம் இவைகளையும் தகுதிகளாகக் கொள்வதில்லை. மேற்படி சாதனங்கள் பெற்றவர்கள், இல்லறத்திலும் உள்ளனர். அவர்களும் இங்கு பாடங்களைக் கேட்டு ஞானம் பெற்றிருக்கின்றனர். இனியும் பெறலாம்.

நமது சந்நிதானம் அவர்கள் மேற்படி நமது கோவிலூர் சம்பிரதாய நூல்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். அதாவது, இப்போது முதல் ஆறு நூல்கள் மட்டும் இரண்டு பாகங்களாக வெளிவருகின்றன. பிறகு மற்ற நூல்களும் வெளிவரத் தீவிரமான ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

இந்த நூல்களில் நாநாசீவவாதக் கட்டளைக்கு விளக்கமான முன்னுரை எழுதப்பட்டுள்ளது. அப்படியே மற்ற ஐந்து நூல்களுக்கும் அமைக்கப்பட்டுள்ளது. இதில் முதல் நூல் நமது அத்வைதக் கொள்கைக்கு ஆதாரமானது. அதனை மனனம் செய்வது நல்லது. இல்லையேல் தினசரி பாராயணம் செய்வது போலத் தொடர்ந்து படித்து வரலாம். அவ்வாறு செய்தால் மேல் சாத்திரங்கள் படிக்கும்போது விளக்கம் பெறப் பெரிதும் உதவும்.

முதல் மூன்று நூல்கள் பிரம்ம ஞானத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பவைகளாகும். நான்காவது, ஐந்தாவது, ஆறாவது ஆகிய நூல்கள் வைராக்கியத்தைத் திடப்படுத்தப் பெரிதும் உதவும் அற்புத நூல்கள் ஆகும்.

ஆக இந்த ஆறு நூல்களும் மூலமும் பொழிப்புரையுமாக அமைக்கப்பட்டுள்ளன. இதைப் படிப்பவர்கள் வேதாந்தக் கருத்துக்களை நன்கு அறிய முடியும். இப்படிப்பட்ட நூல்கள் வெளிவர உதவுமாறு, அமரர் கல்கியின் மகளான திருமதி ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கு நமது சந்நிதானம் அவர்கள் அருளாணை பிறப்பித்தார்கள். அதற்கு அவ்வம்மையார் தமக்கு உதவியாக யாரை அனுப்புவீர்கள் என வினவ, தமது சீடரும் குமாரபாளையம் ஆனந்த ஆஸ்ரமத்தில் கோவிலூர் வேதாந்த மடம் சம்பிரதாயப் பாடங்களைக் கிரமமாக மனனம் செய்து பாடம் கேட்பவருமான திரு. குருநாதன் அவர்களை அனுப்புவோமெனக் கூறி அனுப்பினார்கள். ஆக மேற்படி இருவர் முயற்சியினால் மேற்படி ஆறு நூல்கள் வெளிவந்துள்ளன.

நமது 12-வது பட்டம் மகா சந்நிதானம், திருப்பெருந்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகளின் பத்தாண்டுகள் அருளாட்சியில் கோவிலூர் வேதாந்த மடம் கர்மம், பக்தி, ஞானம் என்று சொல்லப்படும் நமது வேதாந்தத்தின் மூன்று பிரிவுகளில் சீரும் சிறப்புமாக வளர்ச்சி அடைந்துள்ளது.

"அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்,"

என்ற திருக்குறளின்படி நிலையில்லாத நமது செல்வத்தை எல்லாம் நிலையான தரும காரியங்களைச் செய்வதற்கே சுவாமிகள் செலவிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இம்மனப்பரிபாகம் பெரிதும் பாராட்டுக்குரியதாகும். இந்த அணிந்துரையில் நமது சந்நிதானம் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பாராட்டுவதற்குச் சொற்கள் கிடைக்கவில்லை என்பது மிகையாகாது.

நமது மகா சந்நிதானம் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழவும், திடகாத்திரமாக இருக்கவும், எல்லாம் வல்ல மாயா விஷிட்ட காரணப் பிரம்மம் பேரருள் புரிவதாகுக.

திருமதி. ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கும், திரு. குருநாதன் அவர்களுக்கும், குமாரபாளையம் ஆனந்தாஸ்ரம முமுட்சுக்கள் சார்பாகப் பெரிதும் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமது மகா சந்நிதானம் அவர்கள் வாழ்க! வளம் பெறுக!

கோவிலூர் வேதாந்த மடம் வாழ்க! வளம் வளர்க!

மேற்படி மடத்துச் சம்பந்தப்பட்ட அனைவரும் வாழ்க! வளம்பெறுக!

இப்படி ஒரு அணிந்துரை எழுத வாய்ப்புக் கொடுத்த மகா சந்நிதானம் அவர்களுக்கும் திருவருளுக்கும், குருவருளுக்கும் நன்றி! வணக்கம்! வாழ்த்து!

**சுபம்**

**வேணும் ஸ்ரீ சற்குருநாதன் துணை**

**தவத்திரு. சோம. சச்சிதானந்த சுவாமி,**
**அத்வைத ஆசிரியர்,**
**குமாரபாளையம்.**

**20, நவம்பர், 2005**



# கோவிலூர் மரபில் பாடத்திட்டமாக உள்ள 16 வேதாந்த நூல்கள்

1. நாநாசீவ வாதக் கட்டளை
*(சேஷாத்திரி சிவனார் இயற்றியது)*
2. கீதாசாரத் தாலாட்டு
*(திருவேங்கட நாதர் இயற்றியது)*
3. சசிவன்ன போதம்
*(எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)*
4. மகாராஜா துறவு
*(விருத்தாசலம் குமார தேவர் இயற்றியது)*
5. வைராக்கிய சதகம்
*(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)*
6. வைராக்கிய தீபம்
*(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)*
7. இலட்சணா விருத்தி
*(கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)*
8. வேதாந்த சூடாமணி
*(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியது)*
9. கைவல்ய நவநீதம்
*(நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் இயற்றியது)*
10. விவேக சூடாமணி
*(திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகள் இயற்றியது)*
11. அஞ்ஞவதைப் பரணி
*(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)*
12. பஞ்ச தசி
*(நித்தியானந்த சுவாமிகள் வீர. சுப்பையா சுவாமிகள் இயற்றியது)*
13. ஈசுவர கீதை
*(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)*
14. பிரம்ம கீதை
*(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)*
15. பகவத் கீதை
*(பட்டனார் இயற்றியது)*
16. ஞான வாசிட்டம்
*(வீரை. ஆளவந்தார் இயற்றியது)*

உ

சிவமயம்

# பகவத் கீதை மூலமும், கூடார்த்த தீபிகை (உட்பொருள் விளக்கம்) என்னும் உரையும்

## பாயிரம்

*(இந்நூல் ஆசிரியர் தாம் எடுத்துக் கொண்ட இந்த நூல் எவ்விதக் குறையும் இன்றி நிறைவேறுவதற்காகத் தம் வழிபடு தெய்வத்தை இங்கே வணங்குகின்றார்.)*

ஐவகைப் பொருளும் நான்கு
கரணமும் குணங்கள் மூன்றும்
செய்வினை இரண்டும் ஒன்றி
யாவரும் திகைப்ப நின்ற
பொய்இருள் அகல ஞானப்
பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவளர் ஆழிச் செங்கண்
கண்ணனைக் கருத்துள் வைப்பாம். (1)

*ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி ஆகிய ஐந்து பூதங்களும்; வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் என்ற ஐந்து வாயுக்களும்; வாக்கு, பாணி, பாதம், பாயுறு, உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்கள் ஐந்தும்; சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்நுவை, கிராணம் என்ற ஞானேந்திரியங்கள் ஐந்தும்; சத்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து விஷயங்களும் ஐவகைப் பொருள்கள்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்கள் நான்கும்; சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய குணங்கள் மூன்றும்; நல்வினை, தீவினை ஆகிய இவை யாவும் ஒன்றி நான் எனது என்ற அகம்பாவத்தில் தோய்ந்து மயங்கி அனைவரும் திகைத்து நிற்கின்றனர். ஞான சூரியனாகக் கையில் சுதர்சனம் என்ற சக்கரத்தை ஏந்தி நிற்கும் செந்தாமரைக் கண்ணனை மனதினுள் வைத்து தியானம் செய்து அஞ்ஞான இருள் நீக்கம் பெறுவோம்.*

மன்னருள் விசயன் கேட்ப
வாள்அமர் அதன்மேல் இட்டு
மின்அவிர் படைக்கை மாயன்
உரைத்தமெய்ப் பொருளை எல்லாம்
பன்னரு மறைகள் கோத்த
பழமுனி பணித்த வண்ணம்
என்அறிவு அளவி னாலே
தமிழினால் இயம்பல் உற்றேன். (2)

வாள் முதலான படைக் கருவிகளைக் கொண்டு செய்யும் போர்க்களத்தில் அரசர்களுள் ஒருவன் ஆகிய அருச்சுனன் தன் துன்பம் நீங்கக் கருதிச் சிலவற்றைக் கேட்டான். உடனே மின்போல ஒளிவிடும் சக்கர ஆயுதத்தை திருக்கரத்தில் ஏந்திய கண்ணபெருமான் உபதேசித்து அருளிய கீதையின் உண்மையான பொருள் முழுவதையும் இவ்வளவு என்று வகுத்து உரைக்க இயலாத வேதங்களை எல்லாம் வகுத்து அளித்த தொன்மையான வியாச முனிவர் அருளிச் செய்தபடி என் அறிவுக்கு எட்டிய அளவு நான் செந்தமிழ் மொழியினால் சொல்லத் தொடங்கினேன்.

**விண்ணியல் மொழியினால் வியாதன் கூறிய**
**புண்ணிய கதையைநீ புகல்வது என்எனில்**
**எண்ணிய வகைபிறிது இல்லை யாரும்இந்**
**நுண்ணிய பொருளிலே நுழைய வேண்டியே. (3)**

சம்ஸ்கிருதமான தெய்வ மொழியில் வியாச முனிவன் அருளிச் செய்த புண்ணிய வடிவான கீதையை நீ செந்தமிழில் மொழிபெயர்க்கக் காரணம் என்ன எனில்? யாவரும் நுட்பமான கீதையின் பொருளை அறிந்து வீடுபேறு அடைவதற்காகவே அன்றி நான் வேறு ஒன்றும் கருதி மொழிபெயர்க்கவில்லை.

**உன்னு நான்மறை மால்வரை உச்சிமேல்**
**மன்னும் மேகம் முழக்கிய வாக்கினைப்**
**பன்னு சீர்ப்பர மார்த்த தரிசனம்**
**என்னும் நாமத்து இதனை இயம்புவாம். (4)**

பரமப் பிரமாணமாக கருதப்படும் நான்கு வேதங்கள் என்னும் பெருமை பொருந்திய மலையின் உச்சியில் நிலைபெற்று விளங்க நிற்கும் மேக வண்ணன் ஆகிய கண்ணபெருமான் வடமொழியில் அருளிச் செய்த பகவத் கீதையை, பரமார்த்த தரிசனம் என்ற பெயருடன் சொல்லத் தொடங்குகிறோம்.

**பாயிரம் நிறைவுற்றது.**



உ

சிவமயம்

# முதலாவது அருச்சுனன் சோக அத்தியாயம்

*(திருதராட்டிரன் போரில் சந்தேகம் கொண்டவராய்த் தனது நலம் விரும்பும் சஞ்சயனை வினவுகின்றார்)*

**புண்ணிய பூமிஎன்று புகழ்குரு பூமி தன்னில்**
**நண்ணிய பின்னை நண்ணா தவர்களும் நமரும் ஆங்குக்**
**கண்ணியது எதனை என்று கண்ணிலா அரசன் கேட்பத்**
**தண்ணிய இனிய சொல்லால் சஞ்சயன் உரைக்கல் உற்றான். (1)**

*சஞ்சயனே, புண்ணிய பூமி என்ற வேதங்களால் புகழப்படும் குரு பூமியில் பகைவர்களாகிய பாண்டவர்களும் நம்மவர்களும் யுத்தம் செய்ய விரும்பி ஒன்றாகக் கூடியவர்கள் அவ்விடத்தில் என்ன செய்தார்கள் என்று கண்ணில்லாத அரசன் திருதராஷ்டிரர் கேட்டதும், குளிர்ச்சி பொருந்திய இனிய மொழியால் சஞ்சயன் சொல்லத் தொடங்கினான்.*

## சஞ்சயன் கூறும் விடை

**போர்முகம் ஆகி நின்ற புல்லலர் படையைப் பார்த்துக்**
**கார்முக உழவன் ஆய கலைமறை யவனை நோக்கி**
**வார்முரசு அதிரும் தானை வாள்அரவு உயர்த்த தோன்றல்**
**ஏர்முகில் முழக்கம் என்ன இன்னணம் இயம்பும் அன்றே. (2)**

*போரிட அணிவகுத்து நின்ற பகைவர்களாகிய பாண்டவர் சேனைகளைப் பார்த்து, பின் வில் யுத்தத்தில் வீரனாகிய துரோண ஆசாரியரைப் பார்த்து, வாரால் வரிந்து கட்டிய முரசு முதலிய வாத்தியங்களை முழங்குகின்ற சேனைகளை உடையவனும், ஒளிபொருந்திய பாம்பைக் கொடியாகக் கொண்டவனும் ஆகிய துரியோதனன் அழகிய மேகம் முழங்குவதைப் போல இவ்வாறு சொல்லத் தொடங்கினான்.*

## துரோணரிடம் துரியோதனன் சொன்னவை

**வீமனையும் விசயனையும் நிகர்தருபோர் வில்லாள**
**ஏர்மருவு சிலைஅபிமன் உள்ளிட்டார் எனப்பலரும்**
**தார்மருவு தலைவர்களாய்த் தலைப்பெய்த தானையினை**
**மாமருவு பெருந்தேரோய் பார்என்று மறித்துஉரைப்பான். (3)**

*குதிரைகள் பூட்டப் பெற்ற பெரிய தேரில் இருக்கும் ஆசாரியரே, விற்போரில் வீமனுக்கும், விசயனுக்கும் ஒப்பானவர்கள் என்று சொல்லப் படுபவர்களான விராடன், துருபதன் முதலான வில்லாளர்களும், அழகிய வில்லை உடைய அபிமன்யு முதலான பல*

வீரர்களும், வெற்றி மாலை அணிந்த படைத் தலைவர்களாய்த் திரண்டிருக்கும் பாண்டவர் படைகளை நீர் கண்ணால் பாரும் என்று சொல்லி மேலும் சொல்லத் தொடங்கினான் துரியோதனன்.

### தன்படை வீரர்களைப் பற்றித் துரியோதனன் கூறுதல்

**கங்கை யாள்பெறு காதல னும்புகழ்**
**அங்கர் கோன்எனது ஆருயிர்த் தோழனும்**
**நங்கள் வாழ்துணை நம்பியும் நீயும்மற்று**
**இங்கு வாழ்சயத் திரதன் கிருபனும், (4)**

கங்கா புத்திரரான பீஷ்மரும், அனைவராலும் புகழப்படும் என் உயிர்த் தோழனும் அங்க தேசத்து அரசன் ஆகிய கர்ணனும், நமது செல்வத் துணைவனான அசுவத்தாமனும், துரோணாசாரியரான நீரும், இங்கு வாழ்கின்ற சயத்திரதனோடு கிருபரும் இருக்கின்றீர்கள்.

**அன்றி ஏயும் அரசர்அ நேகரால்**
**வென்றி யேதிரு அல்லது வேண்டலர்**
**ஒன்றி ஏதம் எமக்குஉறு மேல்உயிர்**
**பொன்றி யேஅது போக்குதல் மேற்கொண்டார். (5)**

அதுவும் அன்றி, எல்லா மன்னர்களும் வெற்றியையே செல்வமாக விரும்புகின்றனரே தவிர வேறு ஒன்றையும் விரும்ப மாட்டார். ஏதேனும் ஒரு குற்றம் எமக்கு ஏற்படும் என்றால் தம் உயிரை விடுத்தே எனக்கு ஏற்படும் குற்றத்தைப் போக்குதல் ஒன்றையே முக்கியமாகக் கருதி உள்ளனர்.

**எய்தும் எங்கள் பிதாமகன் ஏவலால்**
**கைகொள் கின்ற கடற்படை கண்ணுறில்**
**வெய்ய வீமன் வியப்பொடு காத்திடும்**
**ஐவர் தம்படைக்கு ஆற்றஅற்றா குமோ. (6)**

எம் படைத் தலைவராய் உள்ள எம் பாட்டனார் பீஷ்மர் ஏவலால், காக்கப்படும் எமது கடல் போன்ற படையைப் பார்க்கும் போது, கொடிய குணம் கொண்ட பீமனால் யாவரும் வியக்குமாறு காக்கப்படும் பாண்டவர் படைக்கு ஆற்றத்தக்கதோ?

**மேல்வ குத்துஇவர்க் காமின் விரைந்துஎனும்**
**ஏல்வை யில்திறல் யாதவர் சூழ்ந்திடும்**
**கால்வ ளைத்த சிலைக்கங்கை யாள்மகன்**
**வால்வ ளைத்திரள் தன்னையும் வாய்வைத்தான். (7)**

எந்த எந்தத் திசையில் எந்த எந்தப் படைகள் நிற்க வேண்டுமோ அவ்வத்திசைகளில் நின்று கொண்டு, விரைவாக நமது பிதாமகரான பீஷ்மரைக் காத்துக் கொள்ளுங்கள் என்று துரியோதனன் சொன்ன அளவில், வலிய யாதவர்களாலும், பிற படைகளாலும் சூழப்பட்ட வளைந்த வில் கொண்ட கங்கை மைந்தனான பீஷ்மரும் தன்னுடைய வெண்மையான சங்கினை வாயில் வைத்தான்.

**வஞ்சர் செய்த வினைமற லிக்குஉண**
**வெஞ்ச மம்விளைத் துன்னவும் வேந்தர்கோன்**
**நெஞ்சம் உள்மகிழ்வு எய்தவும் நேரலார்**
**அஞ்ச வும்கனன்று ஆர்த்தனன் ஆர்க்கவே, (8)**

வஞ்சகர்களான துரியோதனாதியர் பாண்டவர்க்குச் செய்த வஞ்சகச் செய்கையே அவர் உயிர் எமனுக்கு உணவாக உண்ணும்படி, கொடிய போர் விளைந்தது என்று யாவரும் சொல்லவும், மன்னர் மன்னனான துரியோதனன் மனமானது உள்ளே தற்காலிகமாக மகிழவும், பகைவர்கள் அஞ்சவும் சினந்தோன்ற ஆரவாரம் செய்திட,

**ஆர்த்தன வளைகள் எங்கும் அதிர்ந்தன பல்லி யங்கள்**
**போர்த்திரள் படைநின்று ஆர்ப்பப் புவனம்ஈர் ஏழும் பூத்த**
**தீர்த்தனும் தனது சங்கைச் செங்கையால் வாங்கிக் கொண்டு**
**கார்த்திரள் முழக்கம் என்னக் கடல்கிளர்ந்து ஆர்த்தது என்ன, (9)**

(துரியோதனன் படையில்) எங்கும் சங்குகள் முழங்கின. பலவகை வாத்தியங்கள் ஆர்த்தன. போர்முகத்தில் திரண்ட சேனைகள் ஆரவாரம் செய்தன. பதினான்கு உலகங்களையும் பெற்றெடுத்த புண்ணியன் ஆன கண்ண பெருமானும், பாஞ்ச சன்னியம் என்ற தனது சங்கைத் தன்னுடைய சிவந்த கையால் வாங்கிக் கொண்டு, மேகக் கூட்டங்கள் திரண்டு முழங்கினாற் போலவும், ஏழுகடல்களும் பொங்கி எழுந்து முழங்கினாற் போலவும்,

**வையம் அனைத்தையும் வாரிமுன் வைக்கும்**
**செய்ய திருப்பவ ளத்துஇடை வைத்தான்**
**ஐவர் எனக்குஉயிர் ஆதலி னாலே**
**உய்வது உமக்குஇலை என்பதை ஒத்த, (10)**

இந்த உலகம் முழுவதையும் முற் காலத்தில் வாரி உண்ட சிவந்த பவளம் போன்ற அழகிய இதழில் வைத்து முழக்கினார். அந்தப் பாண்டவர் எனக்கு உயிர் ஆதலினாலே இப்போரில் நீர் பிழைக்க மாட்டீர் என்று சொல்வதைப் போல அந்தச் சங்கின் ஒலி இருந்தது.

**தருமன்அடல் வீமன்அருச் சுனன்நகுல சகதேவன்**
**திருமருவு விசயம்பவுண்டரம்தே வதத்தம்எழில்**
**மருவுறுசு கோடம்மணி புட்பகம்என் றிடும்இவற்றின்**
**உரும்அனைய குரல்எதிர்ந்தார் செவிபுதைப்ப ஊதினார். (11)**

தருமனும், வலிமையுடைய வீமனும், அருச்சுனனும், நகுல சகதேவனும் முறையே மேன்மை பொருந்திய விசயம், பவுண்டரம், தேவதத்தம், அழகு பொருந்திய சுகோடம், மணி புட்பகம் என்று பெயர் இடப்பட்ட சங்கங்களின் இடி போன்ற குரலில் எதிர்த்தவர் காது செவிடு பட ஊதினார்.

**ஒன்றுஅ லாதுபல ஊதினார் கள்பலர்**
**ஊதும்வால் வளையின் ஓசைபோய்**
**நின்ற கௌரவர்கள் நெஞ்சை ஊடுருவி**
**அஞ்சவா னினும்நி ரம்பிமேல்**
**வென்றி சேர்அமர் தொடங்கும் வேலையினில்**
**வெள்ளைமா நடவுதே ரின்மேல்**
**நின்ற போர்விசயன் ஒன்றுமா யன்எதிர்**
**நில்லா மையொடு சொல்லுவான். (12)**

மன்னர் பலரும் ஒன்றல்லாமல் சங்குகள் பலவற்றையும் வேறு வேறாக ஊதினர். அவ்வாறு அவர்கள் ஊதும் வெண்சங்குகளின் ஓசையானது சென்று களத்தில் எதிரே

நின்ற கௌரவர்கள் நெஞ்சை ஊடுருவிக் குருகுல வேந்தர்களின் இதயங்கள் அஞ்சும்படி வானம் எங்கும் முழுமையாய் நிரம்பி, மேலும் வெற்றி தருகின்ற போரைத் தொடங்கும் வேளையில், வெள்ளை நிறக் குதிரைகள் பூட்டி நடத்தப் பெற்ற தேரின் மீது இருந்த போர் விசயன் கண்ணனின் எதிர் நின்று தளர்ச்சியுடன் ஒன்று சொல்லத் தொடங்கினான்.

யாவர் போர்கருதி எய்தினார்கள் எதிர்எய்தி
நின்ற இவர் தங்களில்
யாவரொடு அமர்தொடங் கலாம்என அறிந்துகொள்ளும்
அளவுயா வையும்
காவல் பேணி அவை தந்துபின் அவைகரந்து
கொண்டுஅருள் செய்கண்ணனே
மேவ நீகடவும் மாக்கொள் தேரினை
நிறுத்துவாய்என விளம்பினான். (13)

பீஷ்மர், துரோணர் முதலான வீரர்களுள் யாவர் எம்முடன் போர் செய்ய விரும்பி இங்கு வந்துள்ளனர்? எதிரே வந்து நிற்கும் இவ்வீரர்களுக்குள்ளே யாரோடு போர்த் தொழில் தொடங்கலாம் என்று அறிந்து கொள்ளும் அளவு எவ்வளவோ அவ்வளவு காலம் வரை, அனைத்துவகையும் படைத்து, காத்துப் பின் அவற்றை மறைத்துக் கொண்டு அருள் செய்கின்ற கண்ணபெருமானே, நீ நடத்தும் குதிரை பூட்டிய இத்தேரினை நான் விரும்புமாறு இரு படைகளுக்கும் எதிரே நிறுத்துவீர் என்று அருச்சுனன் கூறினான்.

### (அதன் பின்னர் நிகழ்ந்தது என்ன என்று வினவிய திருதராட்டிரனுக்குச் சஞ்சயன் கூறியன)

விளம்பும் அவ்வளவில் மேகவண் ணனும்அவ் வெள்ளைமா நடவுதேரினைக்
களங்கொ ளும்பரிசு நின்றதா னைநடுவே கடாவிஇது காண்எனா
வளங்கொள் கங்கைமகன் ஆதியாக முடிமன்னர் யாவரையும் முன்உறாத்
துளங்கு கின்றமொழி யோடுநெஞ்சி னொடும்வல்ல வாறுசில சொல்லினான்.(14)

இவ்வாறு கண்ணனை வணங்கி அருச்சுனன் சொன்னவுடன் மேக வண்ணன் ஆகிய கண்ணனும் வெள்ளைக் குதிரைகள் பூட்டியவாறு விளங்கும் அருச்சுனன் தேரை, போர்க்களத்தில் இருந்த இரு படைகளுக்கும் இடையில் நிறுத்தினான். பின் அருச்சுனா இந்தக் கௌரவப் படையை நன்றாகப் பார் என்று கூறியருளினான். அருச்சுனன் பெருமைக்கு உரிய கங்கை மகன் முதலான முடி மன்னர் அனைவரையும் சுற்றத்தாரையும் எதிரே நிற்கக் கண்டு, தழுதழுத்த சொல்லோடும், கலங்குகின்ற மனத்தோடும் தனது சக்திக்கேற்றவாறு கண்ணனிடம் சிலவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

தாவில்அரும் தந்தையரும் தந்தையர்தம் தந்தையரும்
மேவிஉடன் பிறந்தாரும் மெய்ஞ்ஞானம் அளித்தாரும்
ஆவிஎன நட்டாரும் ஆன்றோரும் அமர்க்களத்தே
மேவியஎம் பொருட்டாக வீடுவான் தொடங்கினார். (15)

குற்றம் இல்லாத தந்தையரும், தந்தையருக்குத் தந்தையரும், பொருந்தி உடன் பிறந்தவரும், உண்மை அறிவினை ஊட்டிய ஆச்சாரியரும், உயிரனைய நண்பர்களும், அறிவுடைய பெரியோரும், இந்தப் போர்க் களத்தில் எம்பொருட்டாகப் போர் செய்ய வந்து உயிர்களை விடத் தொடங்கினார்.

தீதுஅறு சிறுவர்மற் றவர்கள் சேய்களும்
மாதுலர் இவர்களோ மாய்கின் றார்எனக்
காதல்செய்து இடரினால் கலக்கம் உற்றவன்
மாதவன் எதிர்சில மறித்தும் கூறுவான். (16)

குற்றமற்ற இலக்குவன் முதலான புதல்வர்களும், அவர்களது சேய்களும், சல்லியன் சகுனி முதலான மாமன்மார்களும் ஆகிய உறவினர்களோ மாயப் போகின்றனர் என்று அவர்கள் பால் அன்பு கொண்டு, அதனால் உண்டாகும் துயரினால் கலக்கம் அடைந்த அருச்சுனன் மாதவனாகிய கண்ணன் எதிர் நின்று சில சொற்களை மீண்டும் சொல்லத் தொடங்கினான்.

வாயே அன்றி முகமலரா மனம்ஒன்று உணர மாட்டாது
தீயே என்ன உடல்வெதும்பும் செவ்வே நிற்க மாட்டுகிலேன்
வேயே தருதிண் காண்டீப வில்லும் நழுவி விழாநின்ற
தாயே அனையாய் போர்நின்ற தமரைக் காணும் தொறும்மன்னே. (17)

தாயைப் போன்ற பகவானே, இந்தப் போர்க் களத்தில் பீஷ்மர் முதலான என் உறவினரைப் பார்க்குந்தோறும் பேச வாய் வராமையோடு முகமும் மலர்ச்சி இன்றி வாடுகின்றது. மனமோ ஒன்றையும் உணர மாட்டாமல் சுழல்கிறது. நெருப்பு என்று சொல்லும்படி உடலும் வெப்பத்தால் வாடுகின்றது. நன்கு நிற்கும் திறன் இல்லாது இருக்கின்றேன். மூங்கிலால் செய்யப் பெற்ற வலிய காண்டீபம் என்னும் வில்லும் நழுவி விழுகின்றது.

ஓதல் ஆகா நிமித்தங்கள் ஒன்றே அல்ல பலஉளவாம்
காத லாரைக் கொன்றுபெறும் பயனோ ஒன்றும் காணேனான்
ஆத லால்இவ் வென்றியுடன் அரசின் உரிமை யான்அதனை
ஏய்தல் ஆவது என்கின்றது யாதின் பொருட்டோ இயம்பாயால். (18)

சொல்வதற்கு இயலாத விபரீதமான சகுணங்கள் ஒன்றல்ல, பலவற்றை நான் இங்கு உணர்கின்றேன். அன்பிற்கு உரிய உறவினர்களை அழித்து, அதனால் அடைகின்ற பயன் யாதோ? ஒன்றையும் கண்டிலேன். ஆதலால் பகைவரை வென்று பெறும் வெற்றியால் அரசாட்சியை அடைய வேண்டும் என்று சொல்வது எதன் பொருட்டு? அதனை எனக்குச் சொல்லி அருள்க.

அரசுஅவ் அரசால் வரும்போகம் அதனால் இன்பம் எய்தும்என
உரைசெய் பொருள்கள் யாவர்சிலர் பொருட்டால் உலகர் உழந்து அடைவர்
வரைசெய் புயனே மற்றவர்தம் பொருளும் தங்கள் வாழ்நாளும்
நிரைசெய்து ஒருவர் ஒருவரின்முன் நிற்க வந்து நின்றாரால். (19)

மலைபோன்ற தோளுடைய பகவானே, அரசு, அவ்வரசினால் வரும் செல்வம், அதனால் உண்டாகும் இன்பம் என்று சொல்லப்படும் செய்திகளை யாவர் சிலரின் பொருட்டாக உலகிலுள்ளோர் முயன்று அடைய நிற்பரோ, அவர்களே தமது பொருளையும், வாழ்நாளையும் முழுமையாகத் தியாகம் செய்ய முன்வந்து, வரிசையாக ஒருவர் முன் ஒருவர் வந்து முன்னே நிற்கின்றனரே.

ஆன பொருள்ஈது ஆதலினால் அவரைக் கொன்றால் அருள்சேராது
ஈனம் அன்றி எங்களுக்குஓர் இன்பம் எங்கும் இல்லையால்
கூன வரிவில் கொண்டுஎன்னைக் கொலினும் அவரை யான்கோறல்
வானம் பெறினும் மாட்டேன்நான் மண்ணின் பொருட்டால் வல்லேனோ. (20)

*உறவினர்களோடு யுத்தம் செய்வதால் உண்டாகும் பயன் இதுவே. ஆதலால் அருள் காட்டாது அவரைக் கொன்றால் எங்களுக்குக் குற்றம் உண்டாகுமே அன்றி ஒரு இன்பம் எங்கும் இல்லை. வளைத்து வரிந்து கட்டிய வில்லினைக் கொண்டு பீஷ்மர் முதலானோர் அரசாட்சியைக் கருதி என்னைக் கொன்றாலும், நான் சொர்க்கம் முதலான மூவுலகை அரசாளப் பெறினும் பீஷ்மர் முதலானோரைக் கொல்ல மாட்டேன். அப்படிப்பட்ட நான் பூமியின் காரணமாக அவர்களைக் கெல்வேனோ?*

**கொற்றவர்தம் குலம்கெடுத்தால் வருகின்ற குற்றமும்மெய்**
**உற்றவர்தம் திறம்பிழைத்தால் ஊறுகின்ற உயர்பழியும்**
**மற்றவர்கள் அறியாது மறந்திடுக மறந்தாலும்**
**குற்றம்என அறிந்தநான் குறிக்கொள்ளாது ஒழிவேனோ. (21)**

*அரசர்கள் தமது குலம் அழிந்துபோகும்படி செய்தால் வந்து அடையும் குற்றத்தையும், உண்மையான இயல்புடைய நண்பருக்குத் துரோகம் செய்தால் வருகின்ற பெரும்பழியையும் துரியோதனன் முதலானோர் அறியாது மறந்தாலும் மறந்திடுக. ஆனால் இவை குற்றம் என அறிந்த நான் இவற்றை மனங்கொள்ளாது இருப்பேனோ?*

**குலங்கெடவே வருகின்ற குலதருமம் கேடுஉறும்அந்**
**நலம்கெடவே குலம்பாவம் நண்ணும்அது நண்ணவே**
**இலங்குஇழையார் நெறிதிரிவர் இவர்கள்நெறி திரியவே**
**தலம்குலவு குலம்எல்லாம் தலைதடுமாறு ஆகுமால். (22)**

*குலம் அழிந்தால் பரம்பரையாகப் பழகி வருகின்ற குலத்தின் எல்லா தருமங்களும் அழிந்துபோகும். அந்தக் குலதருமம் அழிந்து போகவே குலமானது பாவத்தை அடையும். அவ்வாறு பாவமானது வந்து பொருந்தவே, ஆபரணம் அணிந்து விளங்குகின்ற குலப் பெண்கள் நெறிதவறி விலை மாதர் ஆவர். இவர்கள் நெறி தவறினால் உலகில் உள்ள எல்லாக் குலங்களும் ஒழுங்கு தவறி நெறியின்றிக் கலந்து கிடக்கும்.*

**தடுமாற்றம் அக்குலத்தே சார்ந்தவர்க்கும் சாராதே**
**கெடும்ஆற்றல் நினைந்தவர்க்கும் கெடாநிரயம் கிடைப்பிக்கும்**
**படுமாற்றம் என்உரைக்கேன் பண்டுஇறந்தோர் களும்தமக்குஒன்று**
**இடும்ஆற்றல் அவர்கள்பெறாது இருள்நரகத்து இழிவர்களால். (23)**

*ஒழுங்கு தவறிய அக்குலத்தில் தோன்றியவர்களுக்கும், குலதர்மங்களைப் பொருந்தாமல் குலம் கெடும்படியான செயலை எண்ணிச் செய்தோர்க்கும் அழியாத நரகத்தை உண்டாக்கும். இதனால் மேலும் உண்டாகின்ற துன்பங்களை என்னவென்று கூறுவேன். முன்னமே இறந்த அவர்களது முன்னோர்களைத் தமக்கு உரிய பிண்டம் நீர்க்கிரியை முதலிய செயல்களைப் பெறாது இருண்ட நரகத்தில் வீழ்வர்.*

**வாரா நின்ற குலம்மயங்கப் பண்ணி னார்க்கு மற்றதனைச்**
**சாரா நின்ற குலத்திற்கும் தருமம் தளர்ந்து சாயுமால்**
**சாரா நின்ற சாதிகுல தருமம் தளர்ந்து சாயவே**
**பேரா நிரயம் எய்தும்எனப் பெரியோர் எல்லாம் பேசுவரால். (24)**

*பரம்பரையாய் வருகின்ற குலமானது அழியும்படி செய்த குல நாசருக்கும், அழிவைப் பொருந்தி நிற்கும் குலத்தைச் சார்ந்தோர்க்கும் தர்மமானது குறைந்து கெடும். சார்ந்துள்ள சாதிகுல தர்மங்கள் குறைந்து கெடவே, மீளாத நரகம் கிடைக்கும் என்று பெரியோர் யாவரும் பேசுவர்.*

**மின்னே அனைய செல்வத்தை வேண்டித் தங்கள் மெய்உயிரைக்**
**கொன்னே கழிக்க நின்றவரைக் கொல்லத் துணிந்த கொடுவினையேன்**
**என்னே கொடிய பெரும்பாவம் எய்த நினைந்தேன் யானும்இவர்**
**முன்னே படைவிட்டு அமர்துறந்து நின்றால் இவர்கள் முனிவாரோ. (25)**

*மின்னலுக்கு நிகரான செல்வத்தை வேண்டி, தமது உடலின்கண் உள்ள உயிரை வீணாகக் கழிக்க நிற்கின்ற எனது உறவினராகிய துரியோதனன் முதலானோரைக் கொல்ல முடிவு செய்த கொடிய பாவியாகிய நான் கொடுமையான பெரும் பாவத்தை அடையக் கருதினேனே இது என்ன ஆச்சரியம். நானும் இவர் முன்னே படைக்கலன்களை எடுக்காமல் போரில் இருந்து விலகி நின்றால் இத்துரியோதனாதியர் என்னையும் கொல்வாரோ?*

**கொல்லினும் எனக்குஇது பொறுக்கைகுணம் என்றே**
**கல்லின்நிகர் தோள்விடலை கண்ணன்எதிர் கூறி**
**வில்லின்உடனேபகழி சோரவிழி சோரச்**
**செல்லும்மணி ஆழிஅணி தேர்மிசை இருந்தான். (26)**

*அப்படி என்னைக் கொன்றாலும் எனக்கு இச்செயலைப் பொறுத்துக் கொள்ளுதலே நன்மை தரும். மலையைப் போன்ற தோள்களை உடைய அருச்சுனன் கண்ணன் எதிரே நின்று இவ்வாறு சொல்லி, வில்லுடன் சேர்த்து அம்புகளும் நழுவிக் கீழே விழ, கண்களில் கண்ணீர் ததும்பி வர, ஓடும் மணிகள் பொருந்திய உருளைகளை உடைய தேரின் மீது இருந்தனன்.*

முதலாவது
அருச்சுனனின் சோக அத்தியாயம் நிறைவுற்றது.



# இரண்டாவது சாங்கிய யோக அத்தியாயம்

(அகிம்சையும், இரத்தலுமே பெரிய அறம் என்று கருதிய கொள்கையினால் அருச்சுனன் களத்தைப் பாராமுகம் ஆயினான் என்பதைச் சஞ்சயன் வாயிலாய்க் கேட்டு உணர்ந்த திருதராட்டிரன் தனது புதல்வர்களுக்கே அரசாட்சி நிலைத்து விடும் என்று எண்ணி மகிழ்ந்ததை அறிந்த சஞ்சயன் அவனது தவறான ஆசையை மாற்றும் பொருட்டுச் சொல்லத் தொடங்கினார்.)

**இவ்வண்ணம் அறிவுஒதுங்க எழுகின்ற இரக்கத்தால்**
**செய்வண்ணம் அறியாது திகைத்துஇருந்த தேர்விசயன்**
**உய்வண்ணம் அதுநாடி ஒருவண்ணம் உலகுஓதும்**
**கைவண்ண மலருடைய கார்வண்ணன் கட்டுரைப்பான். (1)**

மேலே சொல்லியவாறு மனம் கலங்கிய விசயன் தம் உறவினர்மேல் வைத்த இரக்கத்தால் தான் இனிச்செய்ய வேண்டிய செயல் என்ன என்பதை அறியாது திகைப்போடு தேரின் மேல் இருந்தான். விசயனை நோக்கி, அவனது உள்ளத்தில் இருந்த சோகம் நீங்கி அவன் ஈடேறும் வண்ணம் பல வழிகளை ஆராய்ந்து ஒரே தன்மையாக உலகு பாராட்டும் செந்தாமரை போன்ற கைகளோடு கார்மேக வண்ணனாக விளங்குகின்ற கண்ணன் உறுதியோடு சில சொல்லத் தொடங்கினார்.

### கண்ணன் அருச்சுனனை நோக்கிச் சொல்லுதல்

**ஆயா தவர்க்கும் அலிகட்கும் அடுப்பது அழியாப் பழிஉனது**
**தேயா அறிவைத் தேய்ப்பது அறச் சிறுமை களிலே சிறுமைஅது**
**சாயா நரகத்து இடைசாய்ப்பது உன்போல் பவர்க்குத் தகுதிஅன்றுஈது**
**ஏயா நிலத்தே உனைஐயா எவ்வாறு அடைந்தது எனஅறியேன். (2)**

அருச்சுனா இந்த மோகம் ஆனது ஆராய்ந்து அறியாதவர்க்கும், பேடிகளுக்கும் உண்டாவது. அழியாப் பழியைத் தந்து உன்னுடைய குறையாத ஞானத்தைக் குறைப்பது. துன்பம் தரத் தக்கவற்றுள் மிக்க துன்பம் தருவது. அழியா நரகத்தில் தள்ள வல்லது. உன்னைப் போன்ற சிறந்த வீரர்களுக்கு இது ஆகாதது. பொருந்தக் கூடாத இந்தப் போர்க் களத்தில் உன்னிடம் இது எவ்வாறு வந்தது என்பதை நான் அறிகிலேன்.

**ஒவ்வாதுஈது ஒழிந்துஅமர்மேல் ஒருப்படுகஎன்று உருக்கரிய**
**செவ்வாயன் திருமொழியத் தேர்விசயன் செப்புவான்**
**மெய்வாயி னொடுமனத்தான் மிகப்போற்றற்கு உரியாரை**
**எவ்வாறு கொலைபுரிவேன் என்றுஇவ்வாறு இயம்பினான். (3)**

மிக்க வீரம் உடைய அருச்சுனா உனக்கு இந்தச் செயல் கூடாது. அவ்வெண்ணத்தை நீக்கி விட்டுப் போர்செய்ய ஒப்புவாய் என்று கரிய வடிவுடன் செவ்வாயை உடைய கண்ணபெருமான் சொல்லக் கேட்ட தேர் விசயன் கண்ணனை நோக்கி, மனம், வாக்கு, உடல்

என்ற இம்மூன்றினாலும் போற்றுதற்கு உரிய தன்மை உடையரான பீஷ்ம துரோணாதியரை எவ்வாறு கொலை செய்வேன் என்று இவ்வாறு சொல்லத் தொடங்கினான்.

மாற்றலர்கள் என்றுஇவரைக் கொன்றுபெறும் பெருவாழ்வில்
ஏற்றம்உரைத்து யான்பிறர்பால் இரந்துஉண்கை இனிதுஅன்றோ
கூற்றுஅவர்கள் உயிர்உண்டால் அவர்குருதி யுரல்குழைத்த
சோற்றைஉணல் போன்மன்றோ யான்பின்னைத் துய்ப்பதுஎலாம். (4)

இவரைப் (பீஷ்ம துரோணாதியரை) பகைவர்கள் என்று கருதிக் கொன்று பெறுகின்ற பெரு வாழ்வாகிய அரச வாழ்வைக் காட்டிலும், இவர்களது பெருமையைப் பேசிக்கொண்டு நான் பிறரிடத்தில் இரந்து கிடைத்த உணவினை உண்டு வாழ்வது இனியது அல்லவா? இந்த யுத்தத்தில் அவர்கள் உயிரை யமன் உண்ணும்படி நான் அவர்களைக் கொலை செய்தால், பின்னர் நான் உண்ணும் உணவு அனைத்தும் அவர்களது இரத்தத்தால் சமைத்த சோற்றை உண்பது போலும் அல்லவா?

தவர்கொள்படை விடுகையோ தவிர்கையோ தகுவதுமற்று
அவர்கள்எனை வெல்வரோ யான்வெல்வ னோஅறியேன்
இவர்கள்சிலர் இறந்தக்கால் அதனாலே என்உயிர்போம்
அவர்கள்அமர் தொடங்குகஎன்று அடல்குறித்து நின்றாரால். (5)

வில்லில் அம்பைப் பூட்டி அவர்களுடன் போர் செய்வதோ? அல்லது போரினை விடுத்து இரந்து உண்ணுதலோ எனக்குப் பொருந்துவது, மற்று அவர்கள் என்னைப் போரிலே வெல்வரோ நான் வெல்வேனோ அறியேன். இவர்களிலே சிலர் இறந்தால் என்னுடைய உயிரானது போய் விடும். ஆனால் அந்தப் பீஷ்மரும் துரோணரும் போர் தொடங்குக என்று வெற்றியைக் கருதிக் கொண்டு எதிரே நிற்கின்றனர்.

ஆதலால் அறிவுஆய விழியினைமற்று ஆங்கவர்பால்
காதலாம் இருள்மறைப்ப நெறிஎங்கும் காணேன்நான்
ஆதலால் எனக்குஉறுவது அறிகிலேன் உரைத்துஅருள்வாய்
சாதல்ஆ னதும் பிறப்பும் இல்லாத தனிமுதலே. (6)

ஆதலினால் அறிவாகிய கண்ணினை, பீஷ்ம துரோணாதியர் இடத்துள்ள அன்பாகிய இருளானது மறைக்க நான் உய்கின்ற வழியை எவ்விடத்தும் கண்டிலேன். அதனால் நான் எனக்குத் தகுவது எது என்பதை அறிகிலேன். இறப்பும் பிறப்பும் இல்லாத தனி முதலே, அதனை எனக்கு உரைத்து அருள்க.

உஞ்சே போகும் நெறிவாளா உரைப்ப னோஎன்று உளம்கருதில்
தஞ்சே என்று உன் சரண்புகுந்தேன் தண்டில் பணிந்தேன் தாமரைக்கண்
மஞ்சே உன்தன் மாணாக்கன் ஆய்உன் பாத மலர்புனைந்தேன்
அஞ்சேல் என்றுஇங்கு அடியேன்செய் வினைகள் ஏவி அருள்புரிவாய். (7)

செந்தாமரையின்கண் கொண்ட மேக வண்ணா, இந்தத் துன்பத்தில் இருந்து பிழைத்திடும் வழியை நீ கேளாமல் சொல்வேனோ என்று நீர் உம் திருவுள்ளத்தில் கருதுவீர் ஆகில் எனக்குத் துணை நீர் என்று உம்மையேசரண் அடைந்தேன். தண்டனிட்டு வணங்குகின்றேன். உமது சீடனாய் உன் பாதமலர்களை என் தலையில் சூட்டிக் கொள்கின்றேன். அஞ்சேல் என்று எனக்கு அருளி, இங்கு நான் செய்யத் தக்க செயல்களில் என்னைச் செலுத்தி அருள்வீராக.

மண்ஆளும் பெருஞ்செல்வம் அன்றியே மாயாத
விண்நாடு பெற்றிடினும் என்னுடைய மெய்உணர்வு
நண்ணாமல் அடுதுயரம் நலியாமல் காப்பதனைக்
கண்ணாஇங்கு எவ்விடத்தும் காண்கிலேன் எனக்கலுழ்ந்தான். (8)

கண்ணனே இம்மண் உலகம் முழுவதையும் ஆளும் பெருஞ்செல்வத்தை அடையினும் அன்றி அழியாத விண் உலக ஆட்சியைப் பெற்றாலும் என்னுடைய உண்மையான நல்லறிவு வருத்தும் துயரமானது பொருந்தாமலும், நல்லறிவு பெறாமலும், காப்பாற்றத் தக்க வழியை, நான் எங்கும் காணவில்லை என்று அழுது மவுனமாய் இருந்தான்.

நெய்மார்பில் சொரிவதுஎன நெடுங்கண்க ள்நீர்சோர
விம்மாநின்று அவன்காதல் வெந்தீயால் வேவாமே
கைம்மாறுஒன்று இன்றிஉயிர் காப்பதே கடன்பூண்ட
அம்மாயன் திருவாய்மை அருள்மாரி யால்அவிப்பான். (9)

நெய்யை மார்பில் ஓட விடுவது போல் நெடிய கண்களில் இருந்து கண்ணீர் விழ அழுதான். அருச்சுனன் பீஷ்ம துரோணாதியர் மேல் கொண்ட அன்பினால் எழுந்த ஆசையாகிய கொடிய நெருப்பினால் வெந்து அழியாமல் கைமாறு ஏதும் இன்றி, உயிரைக் காப்பதே கடன் எனக்கொண்டே அம்மாயனான கண்ணன் அவ்வக்கினியைத் தணிக்கும் பொருட்டுத் தன்னுடைய திருவாக்கு ஆகிய அருள் மழையால் அவிப்பான் ஆயினன்.

மின்னை அனைய திருநகைகொண்டு அருளி விரைத்தா மரைநாறும்
பொன்னை அணியும் திருமார்பன் போகாத் துயர்போம் பரிசுஎண்ணி
முன்னை மறைகள் எடுத்துஉரைத்து முடியும் பொருளாய் முதற்பொருளாம்
தன்னை உள்ள பரிசுஅவற்குத் தானே சாற்றத் தொடங்கினான். (10)

மின்னல்போலப் புன்னகை காட்டி, மணம் பொருந்திய தாமரைப் பூவில் எழுந்தருளிய திருமகளைத் தாங்கி இருக்கும் அழகிய மார்பை உடைய கண்ணன், எவ்வழிகளாலும் நீங்காத சோகமானது நீங்கும்படியான வழியை முன்னைய வேதங்கள் எடுத்துச் சொல்லிய முடிந்த பொருளாகிய உலக முதற் பொருளாயும் பரமாத்மா ஆகவும் விளங்கும் தன்னைப் பற்றி உள்ளபடியே துயர் கொண்ட விசயனிடம் சொல்லத் தொடங்கினான்.

சாவதுஇலை யாவர்களும் நிற்கஅது தானே
மாய்வர்என நீகருதும் மாரதர்கள் எல்லாம்
தேய்வுஅரிய தீவினைசெய் யாதமையி னாலே
வீவதன்முன் வான்உலகம் மேவுவர்கள் மேன்மேல். (11)

எவரும் மரணம் அடைவது இல்லை. அது நிற்க, இப்பொழுது வேறு ஒன்று கேள். போரிலே இறப்பர் என்று நீ கருதும் பெரிய வீரர்கள் என மதிக்கும் பீஷ்ம துரோணாதியர் எவரும் கெடுதற்கு அரிய தீ வினைகளைச் செய்யாது புண்ணியச் செயல்களையே செய்து வந்தமையினாலே போரில் மரணம் அடையும் முன்பாகச் சொர்க்கத்தையே மேலும் மேலும் அடைவர்.

அன்னவர்கள் சோகிதர்ள ணாஅழுத லாலும்
பன்னஅரி யோர்கள்முறை யேபகர்த லாலும்
மன்னமயல் ஏறிஉள் மயங்கினைகொல் வாயாது
இன்னதொழில் ஆனதை மறந்திடுஇவை யும்கேள். (12)

துக்கப்படாத பீஷ்மர், துரோணர் முதலியோர் துக்கப்படுவர் என நீ கருதி அழுவதாலும், சொல்லுதற்கு அரிய பண்டிதர்கள் கூறி அருளியதைச் சொல்வதாலும் அருச்சுனா கலக்கம் அதிகரித்து உள்ளம் மயங்கினாயோ? இது உனக்குக் கூடாது. ஆதலால் இந்தச் சோகமான செயலை மறந்துவிடு. இனி நாம் கூறுபவற்றையும் கேட்பாயாக.

மாயும்அவ ராலும்உயிர் வாழும்அவ ராலும்
ஆயும்அறி வோர்கள்அழி யாமைஅறி யாயோ
நீயும்இவர் தாமும்நிகழ் நானும்நெறி தேரில்
ஏயும்வகை யால்உலகில் என்றும்உள மேகாண். (13)

ஆன்மாவின் இயல்பை ஆராய்ந்து அறிந்து இருக்கும் இயல்பினர் இறந்துபோன உறவினர்கள் பற்றியும் வாழுகின்ற உறவினர்கள் பற்றியும் சோகம் இல்லாது இருக்கின்ற தன்மையை நீ அறிய மாட்டாயோ. அருச்சுனா நீயும், பீஷ்மர் துரோணாதியர் ஆன இவ்வரசர்களும் நானும் சுருதி, யுக்தி அனுபவ வாயில்களால் ஆராய்ந்து பார்க்கும் போது உலகின்கண் உடல் அழிந்த பின்னும் நிலையான ஆன்ம வடிவமாக உள்ளோம்.

பொன்றுவது உடம்புஅதனுள் நின்றபொருள் பொன்றாது
என்றும்ஓர் இயற்கையொடு நிற்கும்இயல் பைக்கேள்
முன்தொடர் மகப்பருவம் விட்டுஇளமை மூப்போடு
ஒன்றும்உடல் ஆயினும் உயிர்க்குஇயல்பு அதுஅன்றால். (14)

மரணம் அடைவது உடல்தான். அவ்வுடலினுள் சாட்சியாய் நிற்கின்ற ஆன்மா மரணமடையாது. எப்போதும் ஒரே சுபாவத்துடனே நிற்கின்ற ஆன்மாவின் இயல்பைக் கேள். உடலானது முன்னே தான் அடைந்த மகப்பருவத்தை நீக்கி, பின் வருகின்ற இளமை, முதுமை என்னும் பருவங்களோடு பொருந்தும் ஆனாலும், சீவனுக்கு இயல்பு அது அன்று.

அன்னவகை யால்உரு அழிந்துவரும் ஆங்கே
என்உருவம் ஆம்அறிவு இறந்துபிற வாதால்
பின்னதுஅறி வான்உடல் அழிந்துபிரி போதும்
தன்னதுஎன ஏதும்ஓர் சலிப்பது அறி யானால். (15)

அப்படியே முன் உடலானது அழிந்து வேறு அந்நிய உடலைப் பெறும். அவ்விடத்தே பரமாத்மா வடிவமாகிய என் ஆன்மா இறந்து பிறவாது. அவ்வான்மாவின் நிலைத்த தன்மையை அறிந்த தீரன் பின்னர் உடல் அழிந்து பிரிந்த போதும் தன்னுடையது என்று சிறிதும் துன்பம் அடையான்.

இவ்வகையது ஆகில்அழல் சீதம்இடர் இன்பம்
செய்வகை இலாஅறிவு சேர்குவதுஎன் என்னின்
மெய்வகை யினால்இவை விளைந்துதர மேய
ஐவகையி னாயபுல னும்பொறியும் ஐயா. (16)

இப்படி ஆகுமானால் வெப்பம், குளிர், துன்பம், இன்பம் முதலியன செயல் இல்லாத ஆன்மாவை அடைவது எதனால் எனின்; அருச்சுனா உண்மையில் ஐந்து வகையான சத்தம் முதலிய விஷயங்களும் செவி முதலிய ஐம்பொறிகளும் ஒன்றோடு ஒன்று பொருந்துதலால் வெப்பம், குளிர், சுகதுக்கம் முதலியன உண்டாகின்றன.

சீதம்அழல் முதலவற்றின் செயல்கேட்கில் அநித்தியம்ஆய்ப்
போதலொடு வருவனவாய் இருக்கும்அவை பொறுநீயும்
ஆதலில்என் பயன்என்னில் அவைபொறுத்த பெரியோனை
ஏதம்அவை நிலைகலக்கா அவன்வீடே எய்துமால். (17)

குளிர்ச்சி, வெப்பம் இவற்றால் உண்டாகும் சுகதுக்கங்களின் தன்மைகளை நீ கேட்பாய் ஆகில், நிலையற்றதாய்ப் போவதும் வருவதுமாய் இருக்கும். அவற்றை நீயும் பொறுத்துக் கொள்வாய். அதனால் ஏற்படும் பயன் என்ன என்றால், அச்சுக துக்கங்களைப் பொறுத்துக் கொண்ட பெரியோனைக் குற்றங்களை உடைய அச்சுக துக்கங்கள் தன் நிலையில் நின்று கலங்கும்படி செய்யாவாம். இதனால் அவன் வீடுபேறு அடைவான்.

மண்ணின் ஆய விகாரமும்அம் மண்ணே அந்த மண்ஒழித்துப்
பண்ணி னாரும் பிறர்இல்லை பண்ணப் பட்ட பலபொருள்கள்
எண்ணின் ஆகு வதன்முன்பும் இறந்த பொழுது நிகழ்விடத்தும்
கண்ணின் நாடி மண்ணொழியக் கண்டார் உளரோ கட்டுஉரைப்பாய். (18)

மண்ணினால் உண்டான பல பொருள்கள் அனைத்திற்கும் அம் மண்ணே காரணம். அம்மண் இன்றி மண்பொருள்களைப் பண்ணினவர் இல்லை. எவரும் மண்ணினாற் செய்யப்பட்ட பல பொருள்கள் அனைத்தையும் ஆலோசித்துப் பார்க்கும் பொழுது, தோன்றுவதற்கு முன்னரும் நாசமான பின்னரும் நிகழும் போதும் கண்ணினால் நாடி மண்ணைத் தவிரக் கண்டவர் உண்டோ? உறுதிபடச் சொல்லுக.

வைஆர்அயில் உழவாஅதன் வகையேஇதன் வகைகேள்
மெய்ஆனது நசியாதுஇத னுடன்வேறுஎன விரவும்
பொய்ஆனது நிகழாதுஇவை புலன்ஆகிய பொருளே
ஐயாஎனை அறிவார்இவை அறிவார்பிறர் அறியார். (19)

கூரிய வேல் உடைய வீரனே, மேற்கூறிய உதாரணத்தின்படியே சத்து அசத்தின் தன்மைகளை விளக்கக் கேட்பாய். சத்தான ஆன்மா ஓர் காலத்தும், ஓர் தேசத்தும், ஓர் அவத்தையிலும் அழியாத இயல்புடையது. இந்த ஆன்மாவிற்கு வேறு என விளங்குகின்ற அசத்தான உடல் உலகங்கள் யாவும் அழியும் தன்மை உடையன. இதுவே விவேகம் என்பதன் பொருளாகும். நாசமற்றதாய் என்னை அறிந்தவர்கள் சத்து அசத்தின் தன்மையை அறிவார்கள். பிறர் அறிய மாட்டார்கள்.

யான்ஆம்வகை அதுகேள்எழும் ஒலியேமுத லியவும்
வான்ஆதியில் வருபூதமும் வருநாள்வரும் இடமாய்
ஆனாதுஎழும் அறிவுயாவையும் அறிகாரணம் அதுவாய்ப்
போநாளொடு வருநாள்வழி புணராததொர் பொருளே. (20)

யான் ஆன்மாவாக உள்ள தன்மையைக் கேள். எழுகின்ற ஒலி முதலியவற்றிலும், வான் முதலாகத் தொடங்கி வரும் பூதங்களிலும், அவை உண்டாவதற்கு இடமாகி, நீங்காது எழுகின்ற உட்கருவிகளின் அறிவு முழுவதையும் அறிந்து நிற்கும் காரணமாகவும் இருப்பதாயும், ஆனால் போகின்ற காலமொடு வருகின்ற காலமாகிய வழியைச் சேராமல் இருப்பதே ஆன்மாவின் தன்மையாம்.

அழியாதமெய் அஃதியாதுஎனில் அவிகாரதை உருவாய்
ஒழியாநிறை வொடுநீடியது எனதுயான்என உணரா
வழியாம்மதி இயல்பால்இது சிலமாறுகொள் குவதாய்
மொழியார்அவிய யமாம்இதை முயல்வால்கொல வலர்ஆர். (21)

காலதேச வர்த்தமானங்களால் அழியாத ஆன்மா இன்னும் எப்படிப் பட்டது என்று நீ கேட்கில், வேறுபாடற்ற வடிவமாய் நீங்காது நிறைவுடன் எங்கும் வியாபித்திருப்பது. எனது எனவும், யான் எனவும் அறியா நெறியாகிய ஞானத்தின் தன்மையால் இவ்வான்மாவைச்

*சில விபரீத குணம் உடையதாய்ப் பெரியோர் கூறமாட்டார். வடிவமற்ற இவ்வான்மாவைக் கொல்லும் படியான திறனுடையவர் யாவர்?*

**இல்லாமையின் இயல்கேள்எழு கழுதுஆழியின் இடையே**
**அல்லாதுஎழு புனல்போல்அறிவு உறவேஅழி குவதால்**
**எல்லாவகை யினும்மாய்வதுஇவ் உருவேஅறிவு அதுதான்**
**கொல்லாதுஅழி கொலையானது குறுகாதுஅதன் நெறிகேள்.** **(22)**

*அருச்சுனா, குளிர் வெப்பம், இன்ப துன்பம் ஆகிய இரு தன்மைகளை உடைய இத்தேகாதி பிரபஞ்ச வடிவமான அசத்தின் இலக்கணத்தை நீ கேட்பாய். சூரியனது வெப்பத்தால் உவர்ப் பூமியில் எழும் கானல் இடத்தே நீர் இல்லாமல் தோன்றும் கானல் நீர், நன்றாக ஆராய்ந்து பார்த்தால் அது ஒழிந்து போகும். அதுபோல எவ்வகையாலும் நாசமடைவது இந்தத் தேகாதி பிரபஞ்சமே. அறிவு வடிவான ஆன்மாவோ ஒன்றைக் கொல்லாது, ஒன்றால் கொல்லப்படுகிற விஷயமும் ஆகாது. அந்த ஆன்மாவின் தன்மையை இன்னும் கேட்பாய்.*

**ஊறுபட ஒன்றின்உளே பிறத்தல்பிறந்து உளஆதல்**
**வேறுபட வளர்தல்வளர்ந்து அயல்ஒன்றாய் விளைந்தமைதல்**
**மாறுபடத் தேய்தல்அற மாய்தல்என வருகின்ற**
**ஆறுஇயல்பும் உடம்புஅன்றி அறிவுஅடையா ஆதலினால்.** **(23)**

*அநேக விதமான இடையூறுகளுடன் ஒரு கர்ப்பத்தில் இருந்து பிறத்தல், பிறந்து இருத்தல், அதற்கு வேறாக வளர்தல், வளர்ச்சி அடைந்து வேறு ஒன்றாய் மாறுதல் அடைதல், அதற்கு முரணாக இளைத்தல், முழுவதுமாய் இறத்தல் என்று வருகின்ற ஆறு வித இயல்புகளும் உடலை அடையும். அன்றி அறிவு வடிவான ஆன்மாவை அடையாது. அக்காரணத்தினால்.*

**நில்லா உடற்கே நின்றேயும் நித்தியம் ஆகி அதுநாசம்**
**இல்லா ததுபொய்ப் பிறப்புஇறப்பு ஒன்று அறியா ததுமற்று அதுஅறிந்தோர்**
**கொல்லார் கொலைஏ வலும்செய்யார் குலம்மே லிட்டுக் குலமறைகள்**
**எல்லாம் விதித்த தொழிலினையும் இயம்பிற்று என்றே இதுதெளிநீ.** **(24)**

*இவ்வான்மாவானது நிலையற்ற உடலில் இருந்தும் நிலைத்தது, அழியாமை உடையது, பொய்யான பிறப்பு இறப்புக்களுள் ஒன்றையும் அறியாதது. அத்தன்மையான ஆன்மாவின் இயல்பை அறிந்த ஞானிகள் ஒருவரைக் கொலை செய்யவும் மாட்டார். அக்கொலைக்குக் காரணகர்த்தராக ஆகவும் மாட்டார். அவரவர்க்குக் குல தருமங்களைப் பற்றி விதிக்கும் சுருதிகள் எல்லாம் அவரவர்க்கு விதித்த தொழில்களையும் அவரவரது குலங்களை வைத்தே சித்த சுத்தியின் பொருட்டு விதித்தன என்பதை நீ அறிந்து தெளிவு பெறுவாய்.*

**பீறிய போர்வையைப் பெயர்த்துப் பின்னரே**
**வேறுஇயல் போர்வையை விரும்பு வார்என**
**ஊறிய உடம்பினில் உதித்த உண்மைதான்**
**மாறிஓர் உடம்பினை மருவும் மன்னனே.** **(25)**

*மன்னவனே அருச்சுனா, கிழிந்து போன உடையை அப்புறப்படுத்தி விட்டு, பின்னர் வேறு புதிய ஆடையை விரும்பி அணிபவர்கள் போல, வயதான உடலில் விளங்குகின்ற ஆன்மாவும், சிதைந்து போன இவ்வுடலை விட்டு விட்டு, வேறு ஒரு புதிய உடலை அடையும்.*

உருப்பான்மை மற்றுஅதனுக்கு ஒருநாளும் இன்மையால்
செருப்பால்வெம் படைக்கலங்கள் சேதிக்க மாட்டாவால்
நெருப்பால்வெந்து அழியாது நீரால்நெக்கு ஒழுகாது
மருத்தாலும் சலியாது மற்றுஅதன்தன் வகைகேளாய். (26)

உடலில் இருந்தும் வேறான அறிவு வடிவமான ஆன்மாவிற்கு உருவம் ஒரு காலத்தும் இல்லாமையால் யுத்தத்தால் கொடிய ஆயுதங்கள் ஆன்மாவை வெட்டாது. நெருப்பால் ஆன்மா வெந்து அழியாது. நீரினால் நனைக்கப்பட்டு இளகி ஒடாது. காற்றினாலும் அசையாது. மேலும் அதன் தன்மையைச் சொல்வேன் கேள்.

எல்லாப் பொருட்கும் பழையதனை எங்கும் தானாய் இருப்பதனை
நில்லாத் தன்மை இல்லதனை நித்திய த்துவத்தை நிலைபேற்றை
அல்லாப் புலன்கள் பதினாலும் அறியா அறிவை அறியாதே
இல்லாப் பொருள்போல் அழியும்என இரங்கு கின்றது என்கொண்டோ. (27)

எல்லாப் பொருளுக்கும் பழைமையானதும், எங்கும் தானாகப் பரந்து இருப்பதும், நிலையாத தன்மை இன்றி இருப்பதும் (நிலைத்து இருப்பது) அசையாத் தன்மை உடையதும், நித்தியமாய் இருப்பதும், நிலைபேறு உடையதும், ஆன்மா இல்லாத இந்திரியங்கள் பதினான்கில் எதனாலும் அறியாத தன்மை உடையதும் ஆன ஆன்மாவை அறியாமல், இல்லாத பொருள்களைப் போல அழிந்து போகும் என்று கருதி நீ வருந்துவது ஏனோ?

வீவர் எனக்கொடு மெய்தளர் வாயேல்
யாவர் பிறப்பவர் யாவர்க ளேனும்
சாவர் பெயர்த்தும்அவ் வாறு சனிப்பர்
காவல் இதற்குஉள தோகட னேகாண். (28)

அருச்சுனா, பீஷ்ம துரோணாதியர் முன் சொன்னவாறு (ஆன்ம வடிவமாய்) இல்லாமல், உடல் பிறக்கின்ற போது பிறக்கின்றவர்கள் எனவும், அது மரணம் ஆகின்ற போது மரணம் அடைகின்றவர்கள் என்றும் நீ கருதி உடல் தளர்வாயேல், அப்பொழுதும் அது உனக்குப் பொருந்தாது. பிறக்கின்றவர்கள் யாராய் இருப்பினும் அவர் முன்வினையினால் சாவர், மீண்டும் பிறப்பர். இது தொன்று தொட்டு வரும் முறையே அன்றி இதற்கு வேறு பரிகாரம் ஏதேனும் உண்டோ?

செறிந்ததுஇவ் வாறுஇவர் என்பதும் தேராய்
பிறிந்துஇவர் போம்இட மும்பெரிது ஓராய்
அறிந்தது நீநடு வேசில நாளே
எறிந்திடு வேல்அவர் பால்இடர் என்னோ. (29)

அருச்சுனா, இந்த பீஷ்ம துரோணாதியர் பிறப்பதற்கு முன்னர் இருந்தது இருந்தபடி என்பதையும் நீ அறியாய். இவர்கள் மரணம் அடைந்தபின் சென்று அடையும் இடத்தையும் அறிய மாட்டாய். நீ இவர்களைப் பற்றி அறிந்து கொண்டது அவர்களது பிறப்பிற்கும் இறப்பிற்கும் நடுவில் உள்ள சில நாட்களே. ஆதலால் படைக்கலன்களை உடைய இவர்களுக்குத் துன்பம் நேரிடப் போகின்றது என வீணாகத் துன்பம் அடைகின்றாய். அதனை விடுவாயாக.

ஒருவன்என்றும் கண்டுஅறியா ததுகண்டாற்போல் உணர்ந்து இருக்கும்
ஒருவன்என்றும் உரைத்துஅறியா ததனைஉரைத்தாற் போல்உரைக்கும்
ஒருவன்என்றும் கேட்டுஅறியா ததனைக்கேட் டாற்போல்உவக்கும்
ஒருவன்என்றும் கேட்டாலும் அறியான்இந்த உண்மையினை. (30)

ஒருவன் இந்த ஆன்மாவை என்றும் கண்டறியாத ஒன்றைக் கண்டாற் போலக் கண்டு வியப்போடு பார்க்கின்றான். வேறு ஒருவன் என்றும் உரைத்து அறியாத ஒன்று போல் இந்த ஆன்மாவைப் பற்றி மற்றவனுக்கு உரைக்கத் தொடங்குகின்றான். ஒருவன் என்றும் கேட்டு அறியாத ஒன்றுபோல் இந்த ஆன்மாவைப் பற்றிக் கேட்டு மகிழ்கின்றான். ஒருவன் இவ்வான்மா பற்றி எப்போது கேட்டாலும் அறியாமல் இருக்கின்றான்.

திதன்ஆய் எவரும் அறியாத பொருளைத் தெரிந்து கொண்டுநீ
இதனால் இவரை யான்கொன்றேன் என்பது ஒழிவாய் இன்னும்கேள்
விதம்நால் ஆய மறைமொழியும் வேந்தர் தருமம் வாள்அமர்என்
பதனால் அமரே தொடங்குஅதனை அறநன்று எனநீ ஐயுறேல். (31)

நிலையான தன்மை கொண்ட ஆன்மா அழிக்கப்படாதது என்னும் உறுதி உடையவனாய், எவராலும் அறியாத ஆன்மாவை நீ நன்கு தெரிந்து கொள். இந்த ஆன்ம அனுபூதியினால் இந்த பீஷ்ம துரோணாதியரை நான் கொன்றேன் என்று எண்ணுகின்ற சோகத்தைக் கை விடுவாய். இன்னும் கேள். நான்கு பகுதிகளான வேத வாக்கியங்களும் வாள் ஏந்திப் போர் செய்வதே வேந்தர் தருமம் என்று கூறுவதால், அரசன் ஆகிய நீ போர் தொடங்குவதே முறை. இது அறமற்றது என்று நீ சந்தேகம் கொள்ள வேண்டாம்.

செய்தி இன்றிஅத் தேவர்கள் வான்உலகு
எய்த நின்ற இதுபெறு கின்றவர்
வைதி கம்தரும் மாதவம் மேற்கொடு
மெய்தி ருந்திய வேந்தர்கள் அல்லரோ. (32)

வேறு முயற்சி இல்லாமலேயே தேவர்கள் வாழ்கின்ற உலகமான சொர்க்கத்தை அடையச் சாதனமாக நிற்கின்ற இத்தகைய போரை அடைகின்றவர் யாவர் என்னில், வேத மார்க்கத்தில் உளதாகும் தருமமாகிய பெரிய தவத்தினை மேலாகக் கொண்டு உண்மையை அறிந்த அரசர்கள் அல்லவா.

ஆவது ஆன அமர்தொடங் காய்எனில்
போவது ஆன புகழும் தருமமும்
பாவம் ஆம்பழி யாம்இப் பழியினில்
சாவது ஆனது வேதலை அல்லவோ. (33)

அரசர்களால் அடையத்தக்க அற வடிவான போரினைச் செய்யாய் ஆகில், தருமமும் புகழும் போய் உனக்குப் பாவமே உண்டாகும். மேலும் அருச்சுனன் போருக்கு அஞ்சிக் களத்தை விட்டு நீங்கினான் என்ற பழியும் உண்டாகும். இதனால் உண்டாகும் பழியைக் காட்டிலும் மரணம் அடைவதே பெருமை அல்லவா.

அன்றி யும்உனை அஞ்சினை என்பரால்
நின்று இயைந்து நிலத்துமுன் நீசெய்த
வென்றி யும்பழி யாய்நிற்கும் மேவலர்
ஒன்று இயம்பில் இன்னாங்குஇதன் மேல்உண்டோ. (34)

அருச்சுனா, உன்னை மகா வீரர்களான துரியோதனாதியர், கர்ணன் ஆகியோருக்கு அஞ்சிப் போர்க் களத்தில் இருந்து நீங்கினாய் என்பர். இப்பூமியிலே தர்மம், பராக்கிரமம், வீரம் முதலியவற்றோடு நீ முன் போர் செய்து பெற்ற வெற்றி கூடப் பழிக்கத் தக்கதாய் மாறி விடும். பகைவர்கள் சொல்லக் கூடாத சொற்களில் ஒன்றைச் சொன்னாலும் இதற்கு மேலான துன்பம் வேறு உண்டோ?

இன்று வாள்அமர் தன்னில் எதிர்ந்துநீ
பொன்றில் வானவர் போற்றவிண் காக்குவை
வென்றி சேரில்இவ் வேந்தர்எ லாம்தொழ
நின்று ஞாலம் அளிக்குவை நீயரோ. (35)

அருச்சுனா, நீ இன்று வாள் முதலிய படைகள் கொண்டு செய்யும் போரில், கர்ணன் முதலியோரை எதிர்த்து நின்று போரிட்டு மரணம் அடைவாய் ஆகில் தேவர்கள் வணங்க விண்ணுலகை ஆள்வாய். போரில் பகைவரைக் கொன்று வெற்றி அடைவாய் ஆனால், இவ்வேந்தர் எல்லோரும் உன்னை வணங்க நீ பேரரசனாய் இருந்து இம்மண்ணுலகை அரசாள்வாய்.

துற்ற இன்பமும் துன்பமும் தோல்வியும்
வெற்றி யும்இழ வும்மிகு பேறும்என்று
உற்ற இன்அவைக்கு ஒத்த மனத்தனாய்க்
கொற்ற வாசமர் செய்குற்றம் இல்லையால். (36)

வெற்றியே பெறும் அருச்சுனா, நிறைந்த இன்பமும், துன்பமும், மிகுந்த பேறும், இழப்பும், வெற்றியும் தோல்வியும் என்று சொல்லப்படும் இவைகளில் சமமான மனம் உடையவனாய், தர்ம யுத்தம் (அறப்போர்) நீ செய்தால் உனக்குப் பாவம் இல்லை.

கதுவிய பொருள்ஞானம் கரைஅறும் உரையாலே
பொதுவுறு வகைநீயும் புலன்அறி வகைஆனாய்
எதுஒரு வினையாலே இருவினை களும்வீடும்
அதுதனை அறியார்வீடு அணைபவர் அதுகேளாய். (37)

சம்சாரக் கடலில் இருந்து கரையேறப் பற்றுக் கோடாகப் பெரியோர் நீங்காது பற்றிய பரமாத்மா பற்றிய ஞானத்தை, "சாவதிலை யாவர்களும்" என்பது முதலான அளவிறந்த என்னுடைய வாக்கியங்களாலே பொது என்று பொருந்தும்படி நீயும் புத்தியின்கண் அறியும் தன்மையன் ஆனாய். எந்த ஒரு கர்ம வினையினாலே பாவ புண்ணியம் என்ற இருவினைகளும் நீங்குமோ அப்படிப்பட்ட கர்மங்களை அறிந்து கடைப்பிடிப்பவர் வீடுபேறு அடையத் தகுதி உடையவர். அதனை மேலும் கேட்பாயாக.

அரிதுஎனும் அறிஞோர்தம் செயல்அது அழிவுஆகா
விரிதரும் இடையூறும் வினைகளும் இடைகூடா
தெரிபொருள் சிறிதேனும் பெருமயல் தெறும்ஆனால்
உரியதுஇவ் உலகோர்பால் அதுஅலது உளதோதான். (38)

உலகில் அரிது என்று சொல்லப்படும் அறிஞர்களின் பற்றற்ற கர்மங்களின் பயன் ஒருபோதும் அழியாது. விரிவான துன்பங்களும் பாவங்களும் கர்மயோகத்தின் இடையில் வந்து பொருந்தாவாம். அறிந்து செய்த பற்றற்ற செயல் (கர்மயோகம்) சிறிதானாலும் மிகப் பெரிய பயம் அதனால் கெடும். ஆதலால் இவ்வுலகில் உள்ள அறிஞர்கள் தமக்கே உரியதாகக் கொள்ளத் தக்கது பற்றற்ற கர்ம யோகம் தவிர வேறு உண்டோ?

தெளிபவர் உணர்வுஒன்றே தெளிவுஇலர் உணர்வுஒதில்
தளிர்நிகர் பலஆகும் தருபயன் அதுமேவும்
ஒளிமறை நெறிமேலா உணர்பொருள் எனஓதும்
அளியவர் தெளியாதார் அவைஅலது அறியாரால். (39)

விவேகிகளின் புத்தி ஒன்றே ஆகும். அவிவேகிகளின் புத்தி மரத்தில் உள்ள தளிர், கிளை முதலியவற்றைப் போல் அநேகம் ஆகும். நன்மை தருகின்ற சொர்க்கம் முதலான பயன்களை மட்டும் விரும்பி உரைக்கின்ற ஒளி பொருந்திய வேத வாக்கியங்களை, மேலாக அறியத் தக்க பொருள் என்று தெளியாது சொல்கின்றவர். அவர்கள் அந்தச் சொர்க்காதிப் பயன்களை அன்றி, ஆத்மாவைப் பற்றி உரைக்கின்ற வேத வாக்கியங்களையும், அவற்றை அறிவதால் பெறும் புண்ணியச் சுகத்தையும் அறியார்.

புண்ணிய உலகத்தே பொருள்முடிவு எனவைப்பார்
மண்இயல் பிறவிக்கே வரும்வழி நெறிநிற்பார்
பண்ணிய வினைகட்கே பயன்நினை பவர்தம்பால்
நுண்ணிய பொருள்செப்பார் நுணுகிய அறிவுஉற்றோர். (40)

புண்ணிய உலகமான சுவர்க்கத்தை அடைவதே முடிவான பேறு என எண்ணுபவர்க்கும், அதன் பயனை அனுபவித்த பின் மீண்டும் இம் மண்ணுலகில் பிறப்பதற்கான வழி நிற்பவர்க்கும், தாம் செய்த செயல்களுக்குப் பலன்களைக் கருதுகின்றவருக்கும், நுட்பமான ஆன்ம ஞானம் உடைய பெரியோர் ஆன்ம ஞானத்தை உபதேசிக்க மாட்டார்.

நவைதரு குணம்முப்பால் நணுகிய பயன்உற்றோர்
சுவைதெரி குணம்வைப்பார் தொழில்மறை நெறிஉற்றே
கவைதரு குணம்உற்றோர் கருமம்அது இடம்இற்றாம்
அவைகெட வரும்அப்பால் அறிவினன் எனநிற்பாய். (41)

அருச்சுனா, கர்ம காண்ட வேதத்தின் வழி நின்று சுவர்க்கத்தை மட்டுமே அறியும் விருப்பம் உடையவர், இழிவைத் தரும் புண்ணியம், பாவம், கலப்பு என்னும் கருமங்கள் மூன்றினால் சம்சாரப் பயன்களை அடைவர். மூன்றாகப் பிளவுபட்ட சத்துவம், இராஜசம், தாமசம் ஆகிய குணங்களை அடைந்தவர்களின் கருமங்களில் இப்படியான பயனே உள்ளது. இவை கெடுமாறு நீ செயல்களில் பற்றற்றுக் கருமங்களைச் செய்தால், அப்பால் அறிவே வடிவான ஆத்ம சொரூபத்தில் நிலைத்து நிற்பாய்.

குளம்முத லியவற்றே குளிமுத லியதுய்ப்பான்
அளவுஅறு புனல்பெற்றால் அவைகொளல் அருமைத்தோ
வளம்அறு கருமத்தால் வருசிறு சுவைவற்றா
உளமகிழ் பிரமத்தே உளகொளல் எளிமைத்தால். (42)

ஒரு சிறு குளம், ஏரி முதலியவற்றில் குளித்தல் முதலியன செய்பவன் பரந்த நீர் நிறைந்த பெரிய ஏரியை அடையும்போது, சிறு குளத்தினால் அடைந்த பயனைவிட அதிகம் பயனைப் பெறுதல் அருமை அல்லவே. அதுபோல, பயனைக் கருதிச் செய்கின்ற கருமங்களால் உண்டாகும் விஷய ஆனந்தங்கள் குறைவில்லாது எல்லா உள்ளங்களிலும் ஆனந்த வடிவமாக நிற்கின்ற பிரம்ம ஆனந்தத்தில் உள்ளன. இப்படிக் கொள்ளுதல் அருமையன்று, எளிதும் கூட.

அறிவினை அறிகிற்பாய் அகிலமும் அடைவுற்றே
பிறிபொழு தினில்ஒத்தே பெருவினை தனில்நிற்பாய்
நெறிதரும் அறிவுஒட்டா வகைவினை தனில்நிற்பார்
சிறியவர் எனைமிக்கோர் தெளிபவர் செயலைக்கேள். (43)

சகல சம்சார பலன்களும் உன்னை அடைந்து நீங்கும். அப்பொழுது மிகுதியான கருமங்களில் சமமான மனம் உடையவனாக நிற்பாய். இங்ஙனம் இலாப நஷ்டங்களில்

மனமானது சமமாக இருப்பதே கர்ம யோகத்தின் இலக்கணம் என்று அறிவாய். சிறியோர், செயலில் சமபாவனையே மேன்மை தரும் என்ற அறிவினை அடையாது பற்றுடன் செயல்களில் ஈடுபட்டு நிற்பர். பற்றற்ற கர்மம் உடையவராய் என்னை அறிபவர்களின் செயலை இனிக் கேட்பாய்.

விடல்அரும் வகையிற்றாம் வினைப்பயன் அதுவிட்டே
கடவிய வினைமுட்டா வகைசெய்து கழிவுற்றோன்
உடலொடுஇவ் உலகத்தே உளன்என நிகழ்பெற்றே
இடரினை அறவிட்டான் எனைஅறி வகைபெற்றான். (44)

விடுதற்கு அரியதான வினைப் பயனில் பற்றை விட்டு விட்டு, அவரவருக்கு விதித்த கர்மங்களைத் தடை இன்றிச் செய்து புண்ணிய பாவங்களில் இருந்து விடுபட்ட வனாய் உடலுடன் இவ்வுலகிலே உள்ளான் என்று சொல்லும்படி வாழ்ந்து இருந்தே தனக்கு ஏற்பட்ட துன்பங்களை அறவே விடுத்தவன் என்னை அறிந்தவன் ஆவான்.

தருபயன் அதுவிட்டே தகும்வினை செயல்உற்றால்
அருமயல் அறும்அற்றால் அறிவுஉறும் அறிவுஉற்றால்
இருவினை விடும்விட்டால் இழவொடு பெறுதற்பால்
ஒருமனம் வருமத்தால் எனைஉணர் உணர்வுஅப்பால். (45)

கர்மவினைகளால் வருகின்ற சொர்க்கம் முதலான பலன்களின் மேல் உள்ள ஆசையை நீக்கி, செய்யத் தக்கவைகளான நித்திய கருமங்களைச் செய்தால் அரிய பாவங்கள் நீங்கிச் சித்தமானது தூய்மையாகும். சித்தம் தூய்மையானால் அறிவு வந்து அடையும். அறிவு பொருந்தினால் புண்ணிய பாவங்களின் மேல் உள்ள விருப்பம் அற்றுப் போகும். விருப்பு நீங்கினால் இலாப நட்டங்களில் சமமான மனப்பாங்கு அமையும். அதனால் ஆன்மாவாகிய என்னை அறிய விருப்பம் உண்டாகும். அது உண்டான பின்னர்.

பேதைமை அடைகுற்றே பிறிதுஉறு மனம்அற்றே
ஏதம்இல் தெளிவுஉற்றான் யாதுஒரு பொழுதுஅப்போது
ஓதலொடு உலகத்தோர் உரைகளின் உளம்விட்டான்
ஆதலின் எனைமெய்ப்பாடு அடைதரு நெறியைக்கேள். (46)

ஆன்ம சொரூபம் அல்லாத அன்னியமான உடல் முதலியவற்றில் "இஃது யான், இஃது எனது" என்னும் அறியாமையினால் வரும் அபிமானம் கொண்ட மனம் நீங்கி, எப்பொழுது தெளிவு அடைந்தானோ, அப்போது கேட்டதிலும் உலகத்தோர் உரைகளிலும் வைராக்கியம் உடையவன் ஆவான். அப்படி வைராக்கியம் உடையவன் எவனோ அவனே கண்கண்ட பரமாத்மாவான என்னை உள்ளவாறே அடைந்து நிற்பன். அருச்சுனா அதற்கான வழிமுறையை இனி நீ கேட்பாயாக.

தலைநின்ற பொருள்ஐயம் இன்றியே சலியாதே
நிலைநின்றால் யாதுஒருபோது அப்போதே நெறிநின்றான்
கலைநின்ற மெய்ஞ்ஞான யோகம்கண் ணுறும்என்னச்
சிலைநின்ற தோள்விசயன் இவ்வண்ணம் செப்பினான். (47)

எல்லாப் பொருள்களுக்கும் முதலாய் நின்ற பரமாத்மாவின்பால் சந்தேகம் இன்றிச் சலிப்பு அடையாமல் எப்பொழுது நிலையாக நின்றானோ அப்போதே இந்த நெறியில் நின்றவன் யோகி ஆகிச் சாத்திர நூல்களில் கூறியுள்ள தத்துவ ஞானம் என்னும் யோகத்தின் பயனை அனுபவிப்பான் என்று பகவான் அருளிச் செய்ய, வில் பொருந்திய தோளை உடைய அருச்சுனன் இவ்வாறு சொல்லத் தொடங்கினான்.

இவ்வகை அவனை நின்றோர் எவ்வகை உரைப்பார் அந்தச்
செய்வகை இலாதோன் செய்யும் செயல்கள்என் செப்பு மாறுஎன்
மெய்வகை அருள்செய் கென்ன விண்ணையே முதலாக் கொண்ட
ஐவகைப் பொருளும் ஈன்ற அவன்இவை அருளிச் செய்வான். (48)

*நிலையான ஆன்ம ஞானம் பெற்றவனை மற்றவர் எப்படிப்பட்ட இலக்கணம் உடையவனாகக் கூறுவர்? சமாதியில் இருந்து எழுந்த பின் செயல்கள் அற்றவனாகிய அறிவாளன் செய்யும் செயல்கள் எவை எவை? வணங்கும் போதும், நிந்திக்கும் போதும் எவ்வாறு பேசுவான்? என்பதை உள்ளபடியே அருளிச் செய்க என்று அருச்சுனன் வினவ, விண் முதலான ஐந்து பகுதிகளான பூதங்களையும் படைத்து அருளிய கண்ணன் இவ்வினாக்களுக்கான விடையைக் கூறத் தொடங்கினார்.*

அறிவினில் தன்னால் இன்புற்று அனைத்துஅவா வினையும் நீக்கி
வெறிதரு வெகுளி காமம் மயக்கம்நீத்து இன்ப துன்பம்
வறிதுஎழு பொழுதில் வாட்டம் மகிழ்ச்சிஎன்று இவையும் மாய்த்துப்
பொறிதரு புகழும் தீங்கும் போற்றல்போற் றாமை போக்கி. (49)

*தன் மனத்தின் கண் உள்ள அனைத்து ஆசைகளையும் நீக்கி, ஆன்மா வின்கண் ஆன்மாவாலேயே திருப்தி அடைந்து, மயக்கம் தருகின்றவையான கோபம், காமம், மயக்கம் ஆகிய இவைகளை நீக்கி, இன்ப துன்பங்களாகிய சுக துக்கங்கள் மித்தையாகத் தோன்றும் காலத்தில், அவற்றால் உண்டான இன்ப துன்பங்களையும் கெடுத்து, பழவினை காரணமாகப் பிறர் போற்றும்போதும் தூற்றும்போதும் தரப்பட்ட விருப்பு வெறுப்புக்களை ஒழித்து,*

ஆமைதன் உறுப்புஒர் ஐந்தும் தன்உளே அடக்கு மாபோல்
தீமைசெய் புலன்கள் ஐந்தும் தன்உளே செறியச் சேர்த்தி
வாய்மையுள் நிகழும் இன்னே வழுத்தவும் படுகின் றானால்
தூய்மைசெய்து எவையும் நாளும் சொல்லுவது அவன்தன் சொல்லாம். (50)

*ஆமையானது தன் தலை முதலான உறுப்புக்கள் ஐந்தனையும் தன் உடலுக்குள்ளே ஒடுக்கிக் கொள்ளும் தன்மை போல, துன்பம் தருகின்ற ஐம்பொறிகளையும் வெளி விஷயங்களில் இருந்து உள்ளே அடங்கி இருக்கச் செய்து, ஆன்மாவில் நிலைத்து இருப்பவனே இப்படிப்பட்ட இலக்கணம் உடையவன் என்று அறிஞரால் சொல்லப் படுகின்றான். அனைத்தையும் தூய்மை ஆக்கி, எப்பொருள்களிலும் விருப்பு வெறுப்பு இன்றி எப்பொழுதும் அவற்றைச் சொல்லி மகிழ்வதே சமாதியில் நிலைத்து இருப்பவனுடைய சொல்லாகும்.*

குறையுமாப் பிணிப்பு உற்றாலும் கொண்டஇப் புலன்கள் எண்ணில்
அறைகடல் அனைய நெஞ்சத்து அவாஅறான் அறிவில் நில்லான்
மறைமொழி பலவும் ஓதி அடக்குவான் மனத்தை வாங்கிப்
பொறைகெடப் புலன்கள் ஐந்தும் பொறியிலே புகட்டும் கண்டாய். (51)

*ஆன்மாவின் கண்ணே நிலைபெறாது பகிர்முகன் ஆனவன், தான் கொண்டு இருக்கும் இந்திரியங்களைத் தவம் முதலியவற்றால் வசப்படுத்தி விஷய அனுபவங்கள் இல்லாமல் செய்தாலும், அளவற்ற அலைகளை உடைய கடல் போலும் மனதில் ஆசை நீங்கப் பெறான். குருவினிடத்தில் சாத்திரங்கள் பலவும் படித்து ஒடுக்க முயற்சி செய்யும் அவனது மனத்தையும் பலவந்தமாக இழுத்து, பொறுமை கெடும்படி சுரோத்திரம் முதலிய இந்திரியங்கள் ஐந்தும் சத்தம் முதலிய விஷயங்களிலே செலுத்தும் என்பதைக் காண்.*

ஆதலால் புலன்கள் ஐந்தும் அடக்க அரிது அடங்காது ஆகில்
தீதுஇலாக் கருத்தும் தீய அவற்றிலே செல்லும் சென்றால்
காதலால் புகைந்து வெய்ய காமமாய்க் கொளுந்திக் காமம்
ஏய்தல்ஆ காமை தீய வெகுளியாய் எரியும் அன்றே. (52)

முன் சொன்ன காரணத்தால் இந்திரியங்கள் ஐந்தும் அடக்குவது அரிதாகும். இந்திரியங்களை அடக்கினாலும், மனம் தீமையான சத்தம் முதலிய விஷயங்களை நினைப்பது அடங்காது. தீமையான உலக விஷயங்களில் மனம் சென்றால், அந்த விஷயங்களின் ஆசை ஏற்பட்டுப் புகைந்து வெம்மை தரும். காமமாய்க் கொழுந்து விட்டு எரியும். விரும்பிய பொருளை அடையாததால் சினமாக வடிவெடுத்து வேகும்.

எரிநிகர் வெகுளி பொங்க மயக்கம் வந்து எய்தும் எய்தத்
தெரிபவை சிதையும் உள்ளம் தெரிந்தவை சிதைந்த போதே
உரியதன் உணர்வு மாயும் உணர்வும் மாய்ந்து ஒழிந்த வாறே
அரியஎன்று அறிஞர் பேசும் அனைத்தும் மாய்ந்து ஒழியும் அன்றே. (53)

தீயைப் போலக் குரோதமானது அதிகமாக, மன மயக்கம் வந்து சேரும். அவ்வாறு சேர்தலால் குரு கூறிய சாத்திர நூல்களால் அறிந்த பொருள் கெடும். அவ்வாறு கெட்ட பொழுதே முக்தி அடைவதற்கு ஏதுவான புத்தி கெடும். அவ்வாறு கெட்டு ஒழிந்த போது அடைவதற்கு அரியன என்று அறிஞர்கள் புகழ்ந்து பேசும் அனைத்து விஷயங்களும் அழிந்து போகும்.

வேண்டல்வேண் டாமை இன்றி மிகைசெலாப் புலன்க ளாலே
மாண்டபோ கங்கள் துய்ப்பான் மனம்கலங் குறான்மற் றத்தால்
ஈண்டிய தெளிவுண் டாமால் தெளியவே எல்லை இன்றிப்
பூண்டநோய் நீங்கும் நீங்கப் புலன்நிலை நிற்கும் அன்றே. (54)

விருப்பு வெறுப்பு இன்றித் தனது வசமாகச் செல்லும் இந்திரியங்களினாலே சிறப்பான இன்பங்களை அனுபவிக்கும் ஒருவன் அந்த இன்பங்களால் கலங்கமாட்டான். பின்னர் மனத்தின்கண் மிக்க தெளிவு உண்டாகும். அவ்வாறு தெளிந்தபின் அஞ்ஞானத்தால் உண்டான அனைத்துத் துன்பங்களும் நீங்கும். அப்படி நீங்கிய பின் புலன்கள் ஆன்மாவைப் பற்றி அறியும்படியான ஒரே நிலையில் நிற்கும்.

அடுத்தல்ஐம் புலன்செயா தார்க்கு அறிவுஇல்லை அறிவுஇன்று ஆக
விடுத்தமெய் உணர்வுஇன்று ஆம்ஆல் மெய்உணர்வு இல்லை ஆகில்
தொடுத்தபின் சித்த சாந்தி தோன்றிடாது அதுதோன் றாதேல்
எடுத்தநல் இன்பந் தானும் இல்லையே இசைக்க வேண்டா. (55)

ஐம்புல உணர்வுகளை அழிக்க இயலாதவர்க்கு ஆன்மா பற்றிய அறிவு உண்டாவதில்லை. அத்தகைய அறிவு இல்லையாகில் மெய் உணர்வும் இல்லையாம். பின்னர் அதனால் சித்த சாந்தி தோன்றிடாது. அது தோன்றாவிட்டால் அது எடுத்துக் கூறும் வீடுபேற்றின்பங்கள் உண்டாவது இல்லை. இது சாஸ்திர உண்மையாதலால் இது பற்றி நாம் சொல்ல வேண்டாம்.

ஆறுசெல் பொருள்கள் துய்க்கும் ஐம்புல னுக்கும் பின்னே
கால்தொடர் நெஞ்சம் அந்தப் புலன்தனைக் கலக்கும் ஆங்கே
ஊறிய கடலுள் ஓடு கலத்தினை உடன்செல் காற்றே
வேறுசெய்து அறைந்து மாய்ந்து வீழ்த்துமா போல வேயாம். (56)

விஷயங்களை அனுபவிக்கும் படியான வழிகளில் தாம் வேண்டியவாறு செல்லும் ஐம்புலன்களுக்கும் பின்னே அவற்றிற்கு அனுகூலமாகச் செல்கின்ற மனம் சாதகனின் ஆன்மா தொடர்பான புத்தியை அழித்து அவனைக் கலங்கச் செய்யும். அது எப்படி எனில் நீர் நிரம்பிய கடலில் ஓடுகின்ற கப்பலை, அதனோடு செல்கின்ற காற்றே அதற்கு உதவாது அடித்து உடைத்து வீழ்த்துவது போன்றாம்.

**யாதுஒரு பொருளை எல்லா உயிர்களும் இருள்போல் காணா**
**ஓதுஅரு ஞானி அத்தை உளங்கையில் கனிபோல் காணும்**
**யாதுஒரு பொருளை எல்லா உயிர்களும் என்றும் காணும்**
**காதல்இல் ஞானி அத்தைக் கண்ணினால் தெரியக் காணான். (57)**

யாதொரு ஆன்மாவான பொருளை எல்லா உயிர்களும் இரவு போன்று அறியாவோ, புலன்களை வென்ற ஞானியானவன் சொல்லுதற்கு அரிய அவ்வான்மாவை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் கண்டு கொண்டு இருப்பான். யாதொரு விஷயங்களை அஞ்ஞானிகளாகிய அனைத்து உயிர்களும் காணுமோ, விஷய ஆசையை ஒழித்த ஞானி விஷயத்தைக் கண்ணினால் தெரியும்படி காண மாட்டான்.

**நீரினால் நிறைந்து நின்ற கடலிலே நெறிமேற் கொண்டு**
**நீரினால் நிறைந்த வாறு வீழ்ந்ததால் நிறைவு உறாது**
**தேரினாய் அதுபோல் ஆசை செறிந்தவர் திறமே நோக்கிச்**
**சாருமால் ஆகில் அத்தால் அவர்களும் சலித்தல் செய்யார். (58)**

தேரை உடைய அருச்சுனா! நீர் முழுமையாய் நிறைந்து காணப்படும் கடலிடத்தே நீரால் நிறைந்து உள்ள கங்கை யமுனை முதலிய நதிகள் பல வழிகளிலும் வந்து உள்ளே நுழைந்தாலும் அந்தக் கடல் சிறிதும் பெருகி மாறுபாடு அடையாது. அந்தத் தன்மை போலப் பொருள் மேல் உள்ள ஆசை அற்று நிலையாய் இருப்பவரின் முன்னர் பொருள்கள் வந்து அடையுமாயின் அதனால் அவர்களும் வேறுபாடு அடையார்கள்.

**யான்எனது என்பது இன்றி எவ்வகைப் பொருளும் விட்டான்**
**தான்எனச் சரிக்கின் றான்யார் அவனையே அடையும் சாந்தி**
**ஈனமது அடையார் இத்தை அடைந்தவர் இறக்கும் அப்போ**
**தேனும்ஈது அடைவார் என்னை எய்துவார் பிறவி எய்தார். (59)**

யான் எனது என்னும் மயக்கம் இன்றி, எவ்வகைப் பட்ட பொருளிலும் ஆசையை விட்டொழித்தவன், வேறுபாடற்ற பரமாத்மா ஆன தான் ஒருவனே உள்ளான் என்னும் உள்முகம் உடையவனாய்ச் சஞ்சரிக்கின்றான். அவனையே சாந்தி தரும் வீடுபேறு ஆனது வந்து சேரும். இந்த நிலையை அடைந்த மனிதர் மீண்டும் சம்சார மோகத்தை அடையார். இறக்கும் காலத்திலாவது இதில் நிலைத்திருப்பவன், பிரம்ம வடிவான என்னோடு ஐக்கியம் அடைவார். பிறவியை அடையமாட்டார்.

**பின்னை யோஇவ் உலகம் எலாம்பெற்ற**
**அன்னை யோதிரு மார்பத்து அணைத்தவன்**
**முன்னை யோர்புகழ் வேத முடிவையோ**
**தன்னை யோஉள்ள வாறுஎலாம் சாற்றினான். (60)**

திருமகளையும், இவ்வுலகம் எல்லாம் ஈன்ற பூமி தேவியையும் தன் திரு மார்பில் அணைத்த பகவான், முற்காலத்து முனிவர்கள் புகழ்கின்ற வேத முடிவான பரம்பொருளையே சச்சிதானந்த வடிவான தன்னையே பற்றி உள்ளவாறு உபதேசித்து அருளினான்.

**இரண்டாவது சாங்கிய யோக அத்தியாயம் நிறைவுற்றது.**

# மூன்றாவது கர்ம யோக அத்தியாயம்.

அலையிலே கடல்கிடந்து அருமறைகள் ஆனவற்றின்
தலையிலே இருக்கும்அவன் தேரிலே நின்றுஅருளிக்
கலையிலே பொருள்எடுத்துக் காட்டவும்மெய் காணாதே
சிலையிலே தோள்விசயன் இவ்வண்ணம் செப்புவான். (1)

*அலை பொருந்திய திருப்பாற் கடலின்கண் அறிதுயில் அமர்ந்தும் அரிய வேதங்களின் தலை முடியிலே வீற்றிருக்கும் பகவான் அருச்சுனன் தேரிலே நின்று அருளி, வேதங்களில் உள்ள பொருள்களை எல்லாம் எடுத்துச் சொல்லியும், அதன் உண்மைகளைத் தெளிய உணராது வில் தரித்த புயம் உடைய அருச்சுனன் இவ்வாறு கூறத் தொடங்கினான்.*

நன்றே வினையின் ஞானம்என உரைத்தாய் மீள வினைநல்லது
என்றே உரையா நின்றனைநான் இவற்றில் எதுநன்று எனஅறியேன்
குன்றே அனையாய் உனைஅடைந்தேற்கு உற்ற துயர்நீக் கிடுவதனை
ஒன்றே யாக உரைத்து அருள வேண்டும் என்றான் அவன்உரைப்பான். (2)

*பற்றற்ற செயலைப் பார்க்கிலும் ஆன்ம அறிவே சிறந்தது என்று அருளிச் செய்தீர். மீண்டும் செயலே சிறப்புடையது என்றும் அருளிச் செய்கிறீர். இவ்விரண்டில் இன்னது சிறப்புடையது, இன்னது சிறப்புக் குறைந்தது என்பதை நான் அறியமாட்டேன். மலை போன்ற அருள் மிக்க பகவானே, உம்மையே சரண் அடைந்த எனக்கு உண்டான சோகத்தை ஒழிக்கின்ற சாதனம் ஒன்றை உறுதி செய்து உரைக்க வேண்டும் என்று அருச்சுனன் கேட்கப் பகவான் அருளிச்செய்கின்றார்.*

ஆதியில் உலகினை ஆக்கி அன்றுநான்
ஓதிய பொருள்இவை இரண்டும் உண்மையே
தீதுஇயல் அவாஅறான் செயலை மாற்றுவான்
மீதுஇயல் வினைஉறான் வீடு மேவிடான். (3)

*முன்னாளில் உலகினை உண்டாக்கிய போது நான் உரைத்த பொருளான ஞான யோகம், கர்ம யோகம் ஆகிய இவை இரண்டும் உண்மையே (சிறப்பு மிக்கனவே). தீமை தருகின்ற ஆசையை நீக்காதவன், (என்னால் உபதேசிக்கப்பட்ட) நித்தியச் செயல் முறைகளை மாற்றுபவன், மேலான இயல்புடைய பற்றற்ற செயல்களைப் பின்பற்றாது தூய்மையற்ற செயல்களை உடையவன் (துறவியானாலும்) வீடு பேற்றுலகை அடைய மாட்டான்.*

ஒருவரும் ஒருபொழு தினும்ஓர் காலமும்
இருவகை வினைசெயா தவர்கள் இல்லையால்
அருமயல் அவாஅறான் வினைய டக்குவான்
பருவர லொடுபொய் யேபாவிப் பான்அரோ. (4)

*ஞானி, அஞ்ஞானி ஒருவரும் ஒரு பொழுதிலும் ஒரு காலத்திலும் புண்ணிய பாவம் என்னும் இருவினைகளைச் செய்யாதவராக இல்லை. விடுதற்கு அரிய குற்றம் பொருந்திய ஆசையை விடாத அந்தக்கரணம் உடையவனாய், வாக்கு பாணி முதலான செயற்*

*கருவிகளால் மட்டும் தன் வினையை அடக்குபவன் துன்பத்தோடு உலக விஷயங்களையே மனத்தில் நினைத்துக் கொண்டு உழல்வான். அந்தோ! கஷ்டம்!*

**புலன்அவை பொறிவழி போக்கு மாற்றியே**
**பலன்அற வினைகள்என் பொருட்டுப் பண்ணுவாய்**
**நலன்உறும்அவ்வினை நாசம் இன்றியே**
**சலம்உறு பிறவியும் தவிர்க்கும் தன்மைகேள். (5)**

*சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்கள் உலக விஷயங்களில் செல்லும் போக்கினை மாற்றி மனத்தினால் தடுப்பது, பயனிலே விருப்பம் இன்றி (இறைவனுக்கு அர்ப்பணமாக) நியமமான செயல்களை என் பொருட்டாகச் செய்வாய். நன்மை தரும் அச்செயல் அழியாது நின்று, சலனம் பொருந்திய பிறவித் தொடர்பினை ஒழிக்கும். அத்தன்மையை நீ கேட்பாயாக.*

**தேவர்களை மகிழ்விக்கும் செயலோடே தெரிந்துஇந்த**
**மூவகைய உலகையும்முன் படைத்தமுத லவன்மொழிவான்**
**மேவஅரிய சுரர்பூசை இதுநீங்கள் வேண்டியன**
**யாவையுமே தரும்இன்னும் இதுகேட்பீர் எனஇசைப்பான். (6)**

*தேவர்களை மகிழ்விக்கும் வேள்வி முதலானவை தவிர முனிவர்கள், முன்னோர்கள், முதலானவர்களுக்குச் செய்ய வேண்டிய கருமங்களையும் வகுத்து சொர்க்கம் முதலிய மூன்று உலகங்களையும் முன்னாளில் படைத்து நான்முகன் சொன்னான். பொருத்தமான தேவர்களுக்கு உரிய வேள்வி முதலான இந்த வழிபாடுகள் நீங்கள் விரும்பிய பயன்களை எல்லாம் தரும். மேலும் இதனைக் கேட்பீர்கள் என்று சொன்னார்.*

**செயல்வகையால் நீங்கள்அவர் திறம்போற்றும் ஆங்குஅவரும்**
**புயல்வகையால் உங்களையே புரம்போற்றிப் புரந்துஅருள்வர்**
**இயல்வகையால் அதுபிழையீர் எனில்இரண்டு திறத்தீரும்**
**முயல்வகையால் நலன்அடைவீர் எனநிலத்தோர்க்கு உரைத்தனனால். (7)**

*மக்களே! நீங்கள் இங்கு செய்யும் வேள்வி முதலான செயல்களால் இந்திராதி தேவர்களின் வலிமையை விருத்தியடையச் செய்யுங்கள். அவர்களும் மழை முதலியவற்றால் உங்கள் உடல் முதலியவற்றை விருத்தி அடையச் செய்து பாதுகாத்து அருள்வர். இந்தவிதம் ஒருவருக்கு ஒருவர் மகிழ்ச்சி கிடைக்குமாறு தவறாமல் நடப்பீர்கள் எனில், இருவகையாரும் முயல்கின்ற திறத்தின் மூலம் வீடுபேற்றுலகை அடைவீர்கள் எனப் பூவுலகத்தவர்க்கு உரைத்தான்.*

**மற்றுஅவர்தந் ததுகொண்டு மறித்துஅவரைப் பேணாதார்**
**கற்றவர்முன் பழித்துஉரைத்த கள்வரினும் கடைப்பட்டார்**
**பெற்றதுகொண்டு அவர்ப்பேணிப் பிழைத்ததுகொண்டு உண்ணாதே**
**உற்றதுதன் பொருட்டாக உண்பான்தீது உண்கின்றான். (8)**

*வேள்வியால் மகிழ்வடைந்த தேவதைகள் தந்த அன்னம், பசு, தங்கம் முதலியவற்றால் வரும் பலவகையான போகங்களைக் கொண்டு, மீண்டும் அத்தேவதைகளுக்கு வழிபாடு செய்யாமல், அவற்றைத் துய்ப்பவர், பெரியோர் முன்னே பழித்துக் கூறிய கள்வரினும் கடைப்பட்ட செய்ந்நன்றி கொன்றவராம். தேவர்களிடமிருந்து பெற்ற அன்னம் முதலியவைகளைக் கொண்டு அவர்களை வழிபட்டு, அதற்கு மேல் மிஞ்சின அமுதமான அன்னம் முதலியவற்றை உண்ணாது, தன் பொருட்டு மட்டுமே உண்பவன் பாவத்தையே உண்ணுகின்றான்.*

உளவாம்உயிர் உணவால்உணவு உயர்மாரியின் உளவாம்
வளவான்மழை உயர்வானவர் மகிழ்வால்வரும் அதுதான்
இளவாள்அரி அனையாய்இசை தொழிலால்வரும் இதைமீது
அளவுஆம்மறை தரும்மாமறை அறிவால்அதில் உறுமால். (9)

இளமையான ஒளி கொண்ட சிங்கம் போன்ற அருச்சுனா! உணவால் உயிர்களின் உடல்கள் உண்டாகின்றன. உணவு ஆகிய நெல் முதலியன உயர்வான மழையினால் உண்டாகும். மாண்புடைய மேகமானது உயர்வான தேவதைகளின் மகிழ்ச்சியால் உண்டாகும். தேவதைகளுக்கு மகிழ்ச்சி வேதமந்திரங்கள் ஓதி அக்கினியில் செய்யப்படும் வேள்வி முதலான செயல்களால் உண்டாகும். இவ்வேள்வி முதலியவற்றைப் பிரமாணங்கள் அனைத்திலும் மேலான பிரமாணமாகிய வேதமே அறிவிக்கும். பெருமை பொருந்திய வேதமானது எப்பொழுதும் அறிவே வடிவாய் இருக்கின்ற வேள்வியில் இருக்கிறது.

இதனால்வினை களிலேவிளை வனயாவையும் இங்ஙன்
திதனால்வரும் வினைஆழியின் நெறிசேரலர் திரிவார்
மதன்நாறிய புலனேமகிழ் விடம்ஆகவும் உடையார்
அதனால்அவர் அவமேகழி பவராம்என அறிநீ. (10)

உணவால் உயிரும், மழையால் உணவும், வானவர் மகிழ்வதால் மழையும், வானவர் மகிழ்வு வேள்வியினாலும் வரும் எனச் சொல்லிய வழியால் கருமங்களில் இருந்தே அனைத்தும் உண்டாகின்றன. இப்படி நிலையான ஈசுவரனால் நியமிக்கப்பட்டு வருகின்ற கர்ம வடிவான சக்கரத்தின் வழியை அனுசரிக்காது திரிபவர், அழகாகத் தோன்றும் இந்திரியங்களின் விஷயங்களையே மகிழ்வதற்கு இடமாக உடையவர். அதனால் அவர் வீணாக வாழ்நாளைக் கழிப்பவர் என்று அருச்சுனா, நீ அறிவாய்.

கண்ணில்கருதஅரும் அறிவைக்கருதிஅவ்
அறிவேமிகவரு களிகூர்வோன்
எண்ணில்தொழில்தரு பயன்உற்றிடும்வகை
இசையான்ஆதலில் வினையாவும்
பண்ணில்பெறுவதுஓர் பயன்உண்டோஅவை
பண்ணாதுஉறுவதுஓர் பழிஉண்டோ
மண்ணில்பிறர்இவன் இவைஉற்றிலன்என
மதியார்அவைசெய விதியாரால். (11)

புத்தியினால் நேரில் உணர்வதற்கு அரிய ஆன்மாவை எண்ணி, பேரானந்த வடிவான அவ்வான்மாவின் கண்ணேயே முழுமையாய் எழும் மகிழ்வைக் குறைவின்றி அடைகின்றவன் பிரம்ம ஞானம் உடையவன், அளவிறந்த செயல்களால் வரும் பயன்களை அவன் அடைய விரும்பான். ஆகையால் கருமங்கள் அனைத்தையும் செய்வதனால் அடையக்கூடிய பயன்தான் உண்டோ? அவற்றைச் செய்யாமல் அடைகின்ற பழிதான் உண்டோ? (இல்லை) இவ்வுலகில் அந்நியர் இந்தப் பிரம்ம ஞானம் உடையவன் இச்செயல்களைச் செய்திலன் என்று எண்ணவும் மாட்டார்கள். அச்செயல்களைப் பிரம்மஞானம் உடையவன் செய்யும்படி அவனுக்கு விதிக்கவும் மாட்டார்கள்.

ஆதலால் நீயும் பலத்தின் மேல் அவாஅற்று
அடுத்தகாரியம்செய்வாய் அவற்றால்
தீதுஇலா வீடே சேரலாம் முன்னம்
சேர்ந்தவர் அநேகர்பின் தெரியில்

காதலால் அரசன் சனகனே முதலோர்
கருமமொடு ஒழுகியே அன்றோ
போதராய் உலகம் புக்கதே மற்றும் புரிதிநீ
உலகுஇதன் பொருட்டால். (12)

அக்காரணத்தால் அஞ்ஞானம் உடைய நீயும் பலத்தின் மேல் ஆசை விலக்கி, பொருத்தமான நித்தியக் கடமைகளைக் கவனத்தோடு செய்வாய். இங்ஙனம் நீ செய்வதால் ஆன்ம ஞான வாயிலாகக் குற்றம் அற்ற வீட்டுலகை அடையலாம். இவ்வாறு முற்காலத்தில் முத்தி அடைந்தோர் பலர். இப்போது அவர்களை யாவர் என நீ தெரிய விரும்பினால் கேள். அரசனாகிய ஜனகன், அசாத சத்துரு, பகீரதன் முதலானோர் சிரத்தையோடு கரும விதிகளைப் பின்பற்றி நடந்தமையால் அன்றோ ஞான நிட்டை உடையவராய் வீட்டுலகில் புகுந்தனர். அருச்சுனா மேலும் உன்னை ஞானியென நீ எண்ணினாலும் இவ்வுலகத்தின் பொருட்டு நித்தியக் கடமைகளைச் செய்க.

பெரியவர் பயின்ற படிஅலால் பயிலார்
பின்புஉளோர் என்பதுஅன்று ஆகில்
உரியஇவ் உலகம் மூன்றினும் எனக்குச்
செய்யவேண் டுவதுஒன்றும் உண்டோ
அரியவை என்னால் உறாதவும் உறுதற்
பாலவும் யாவைஇங்கு ஐயா
பரியஇவ் உலகம் மகிழ்வுடன் வினைதான்
பண்ணுதற்கு என்னையும் பாராய். (13)

அரசன் முதலான பெருமை உடையவர் அனுசரித்து வந்ததை அனுசரித்து வருவதன்றி, மற்றவர்கள் வேறு ஒன்றைக் கடைப்பிடிக்க மாட்டார். இவ்வாறு கூறியது உண்மையன்றானால் என் ஆட்சிக்கு உரியவைகளான சொர்க்க, மத்திய, பாதாளம் என்னும் உலகங்கள் மூன்றிலும் எனக்குச் செய்ய வேண்டுவது ஒன்றும் உண்டோ? (இல்லை). இம்மூவுலகிலும் அரியவைகளாய் என்னால் அடையத் தகாதனவும், அடையத் தக்கனவும் ஆனவையும் இங்கு இல்லை. அருச்சுனா, பெரிய இவ்வுலகம் ஆனது மகிழ்வுடன் முயற்சியோடு கூடிய நல்ல செயல்களைச் செய்து உய்யும் பொருட்டு நல்ல செயல்களை முன்னின்று நடத்துகின்ற என்னைச் சான்றாகக் கொள்க.

என்செயல் தவிரில் யான்செயா
வினைகள் யாவரும் செயார்அத னாலே
மன்செய்த குலங்கள் மயங்கிமாய்ந் திடுவர்
மற்றவர் மற்றதற்கு ஆகப்
பின்செயல் அறியாது அவாவொடு முயலும்
பேதையைப் போல்பிறர் பொருட்டால்
உன்செயல் களைச்செய் அவைசெய்வார்
தம்மின் உணர்வை வேறுஆக்கலும் ஒழிவாய். (14)

நல்ல செயல்களை நான் செய்யாது போனால் அந்த நல்ல செயல்களைச் செய்வதற்கு உரியரான மானிடரும் செய்ய மாட்டார். அதனாலே நிலைபெறச் செய்த குலங்கள் எல்லாம் மயங்கி அவர்களும் நாசம் அடைவார். அப்படி உலகம் கெடாது இருக்கும் பொருட்டு நான் நல்ல செயல்களில் முன் நிற்கின்றேன். மேல் விளைவதை அறியாமல் ஆசையோடு கூடி நல்ல செயல்களைச் செய்கின்ற அறிவு அற்றவரைப் போலப் பிறர் பொருட்டு உன் கருமங்களைச் செய். பேராசையோடு செயல்களைச் செய்கின்ற அஞ்ஞானிகளின் புத்தியைச் சலிக்கச் செய்யும் செயலை நீயும் தவிர்ப்பாய்.

மெய்வகை தனக்கும் புலன்கட்கும் உள்ள
வேறுபாட் டினைமிக அறிந்தோன்
ஐவகை இயற்கைப் புலன்களே பொறிஉற்று
அழுந்துகின் றனவென அசங்கான்
இவ்வகை அறியா தவன்இரு வினையும்
யான்செய்தேன் எனஇளைத்து ஏங்கும்
உய்வகை இதுநீ உணர்ந்துஉனக்கு அடுத்த
வினைசெயென்று உரைத்துமீண்டு உரைப்பான். (15)

*ஆன்மாவுக்கும், இந்திரியங்களுக்கும் உண்மையாக உள்ள வேறுபாட்டினை நன்கு அறிந்த ஞானியானவன் ஐந்து கூறுபாடுடைய இந்திரியங்களே உலக விஷயங்களில் பொருத்தி வருந்துகின்றன என்று அறிந்து அக்கர்மங்களில் அபிமானம் அடையான். இதனை அறியாதவன் அஞ்ஞானி ஆவான். அஞ்ஞானியானவன் புண்ணியம், பாவம் என்னும் இருவகைக் கர்மங்களையும் நானே செய்தேன் என்று எண்ணி, மனம் மெலிந்து வருந்துவான். ஞானியும் உலக நலன் பொருட்டுக் கர்மம் செய்கிறார் என்பதை நீ உணர்ந்து உய்யும்படி உனக்கு ஏற்ற கர்மமான போரினைச் செய் என்று அருளிச் செய்து மேலும் சொல்லத் தொடங்கினார்.*

என்பால் பொறாமை யினைத்த விர்ந்துஎன்
கருத்தாய்உள்ள வினைஇதனை
அன்பால் பயில்வார் யாவர்சிலர் அவர்கள்
வினைகள் அறவிட்டார்
என்பால் பொறாமை யான்உரைத்த இதனை
இகழ்கிற் பார்கள்அவர்
வன்பார்த் தரையில் எழும ரம்போல்
மாய்ந்தார் அறிவுமாய்ந்தாரே. (16)

*எவர்கள் சிலர் பரம குருவாகிய என்னிடத்தில் பொறாமையைத் தவிர்த்து என் கருத்தாய் உள்ள இந்த நல்ல செயலைச் சிரத்தையோடு நித்தமும் கடைப்பிடிப்பவர்களோ அவர்கள் புண்ணிய பாவ வடிவமான கர்மங்களை முழுதும் விட்டவர்கள். என்னிடம் உள்ள பொறாமையால் நான் முன் அருளிச் செய்த இதனை இகழும் கெட்ட அறிவு உடையவர்கள், கீழே வலிமையான பாறையுள்ள பூமியில் உண்டாகிய மரம் போல மாய்ந்து எல்லா அறிவும் அழிந்தவர்களே ஆவார்.*

பண்டு செய்பகு திப்படி யேவினை
கொண்டு நின்றிடில் கோவித ரும்பிறர்
உண்டு கொல்நலம் என்றுஉணர் கிற்பரோ
கண்டுநின்ற என் கற்பனை யால்அரோ. (17)

*முக்குணங்களைப் பற்றி அறிந்தோர்கள் பழமையான பிரகிருதியின் குணங்களின்படியே கருமங்கள் நிகழ்கின்றன என அறிவர். ஆனால் அஞ்ஞானிகள் எங்கும் நிறைந்து நிற்கின்ற எனது நியமப்படியே பலன்கள் உண்டாகின்றன என்று அறிவாரோ?*

அஞ்சுபுலன் அவைதொடரும் அஞ்சுபொறி அவையாம்
வெம்சுரனில் உலறிஉயிர் வெம்பிஅழிவு உறுவோர்
உஞ்சுபுகு நெறிதகைய ஒன்றுபகை உளகேள்
எஞ்சுதல்இல் இன்பம்இடர் என்பஅவை இகழ்நீ. (18)

செவி முதலிய ஐந்து இந்திரியங்கள் ஆனவை தொடரும் ஐந்து விஷயங்கள் ஆகிய கொடிய பாலை நிலத்தில் உலர்ந்து உயிரானது வெம்பித் துன்பப்படும். சாதுக்கள் ஆகிய உயிர்கள் பிழைத்துப் போவதற்கான ஓர் ஞான வழியைத் தொடரும்போது அதனால் பகையும் உண்டாகின்றது. அவைகளைக் கேள். அவை நாளுக்கு நாள் வளரும் இன்ப துன்பங்களாம். எனவே அருச்சுனா அவற்றை நீ இகழ வேண்டும்.

தடுத்ததொழில் செய்வது தகாதது தனக்கே
அடுத்ததொழில் செய்துகெடு மேனும்அழகு ஐயா
விடுத்தகரு மம்பெரிது செய்வதனின் மேலோர்
தொடுத்தகரு மம்சிறிது செய்கைதொழில் என்றான். (19)

அருச்சுனா, தனக்கு ஏற்றன அல்ல என்று விலக்கிய செயல்களைக் கடைப்பிடிப்பது கூடாது. தனக்கு ஏற்றவையான போருக்கு உரிய செயல்களைச் செய்து அதனால் மரணம் அடைவதாயினும் அதுவே அழகாகும். இதனால் உன் போன்ற அரசர் முதலான மேலோர் தமக்கு விலக்கிய செயல்களை விரிவாகச் செய்வதைப் பார்க்கிலும் விதிக்கப்பட்ட செயல்களைக் கொஞ்சமேனும் செய்தலே தர்மங்களில் சிறந்தது என்று கண்ணன் கூறினான்.

மாயன் இவைநின்று உரைசெய்ய விசயன் மறித்தும் கூறுவான்
தீய வினைசெய் யாதவரைத் திகைப்பச் செய்து திறலாலே
ஏய பணிகொள் வாரைப்போல் இயற்று விப்பான் யார்என்றான்
பாயல் பரவை யாக்கொண்ட பழையோன் இவ்வாறு எனப்பணிப்பான் (20)

கண்ணன் இவற்றை, தேரிலே நின்று சொல்ல அருச்சுனன் மீண்டும் கேட்கிறான். பலாத்காரத்தினாலே தமக்கு வேண்டும் செயல்களைப் பணியாளரைக் கொண்டு செய்து கொள்ளும் அரசரைப் போலத் தனக்கு வேண்டாத பாவச் செயல்களைச் செய்யோம் என்று இருப்பவரையும் பாவச் செயலைச் செய்யச் செய்விப்பவன் யார்? தமக்குப் பாயாகத் திருப்பாற்கடலைக் கொண்ட பகவான் அது இவ்வாறு எனக் கூறுகின்றான்.

தீம னம்தனி லேசன னம்செய்அக்
காமம் என்னும்கைப் பாய்வளர் கின்றது
வேம யம்கொள் வெகுளி என்கின்றது
நாமம் மற்றதன் நல்நலம் இன்னும்கேள். (21)

அருச்சுனா, நீ வினவியது தீய மனத்தில் உண்டாகும் காமம் என்று சொல்லப்படும் வெறுப்பாய் வளர்கின்றது. தீயினால் வேகும் தன்மை உடைய வெகுளி என்று சொல்லப்படுவது. ஆதலால் காமத்திற்குக் குரோதம் என்று பெயர். அந்தக் காமத்தால் உண்டாகும் நல்லதான நன்மைகளை இன்னும் கேள்.

எவ்வ கைப்பய னும்தின வல்லதை
எவ்வ கைப்பெரும் பாவமும் ஈவதை
எவ்வ கைப்பொருட் கும்பகை ஆவதை
இவ்வ கைத்துஎனக் கூறுவன் இன்னுங்கேள். (22)

எல்லா வகையான பேரின்பங்களையும் தின்ன வல்லது. இதனால் எவ்வகைப்பட்ட மகாபாவங்களையும் கொடுக்கத் தக்க தன்மை உடையது. ஆதலால் எவ்வகைப் பட்ட உயிர்களுக்கும் பகையாக இருக்கின்றது. இப்படிப் பட்ட ஆசையை மேலும் இவ்விதமான தன்மை உடையது எனக் கூறுவேன். கேட்பாயாக.

நெருப்பை முற்றிய தூமமும் நீடுஒளித்
தருப்ப ணத்தை மறைத்தன மாசும்போல்
உருப்ப டைத்தன உள்உணர்வு யாவையும்
விருப்பம் உற்றவெங் காமம் விழுங்குமால். (23)

*நெருப்பை அதனைச் சூழ்ந்துள்ள புகையும், மிக்க பிரகாசமான கண்ணாடியை மாசும் மறைத்தன போல் உடல் அடைந்து இருப்பதான அந்தக் கரணத்தின் அறிவு முழுவதையும் விஷயத்தில் உண்டாகும் விருப்பம் அதிகரித்து வெம்மையான காமம் விழுங்கும்.*

காதல் ஆற்றஇக் காமம் புலன்களே
வாயி லாப்புகுந்து உள்ளம் மயக்குவது
ஆத லால்புலன் ஐந்தும் அடக்கியே
ஏதில் ஆம்கடும் காமம் இறுக்குவாய். (24)

*விருப்பத்தினால் அதிகரித்த இக்காமம் இந்திரியம், மனம், புத்தி என்னும் இவைகளின் வழியாக உள்ளம் புகுந்து ஞானங்களை மறைத்து மோகங்களை அடையப் பண்ணும். அக்காரணத்தினால் இந்திரியங்கள் ஐந்தையும் அடக்கியே முன்சொன்ன இம்மூன்றன் வாயிலாக உள்ளதான கொடிய காமத்தை அழிப்பாயாக.*

ஆற்றும் இவ்வுடம் பில்பரம் ஐம்புலன்
மாற்றும் ஐம்புல னில்பரம் மாமனம்
போற்றும் புத்தி அதில்பரம் புத்தியில்
தோற்று கின்றது காண்பது தொல்பரம். (25)

*எதனையும் செய்யும் இவ்வுடம்பைப் பார்க்கிலும் ஐந்து ஞானேந்திரியங்கள் மேலாம். அடக்கத்தக்கவைகளான ஐந்து ஞானேந்திரியங்களைக் காட்டிலும் பெருமை பொருந்திய மனமே மேலானது. மனத்தைக் காட்டிலும் அதனைக் காக்கத் தக்க நிச்சய வடிவான புத்தியே மேலானது. அப்புத்தியினைப் பார்க்கிலும் சாட்சியாய் இருந்து அறிவு ரூபமாய்த் தோன்றும் பரமான்மாவே தொன்று தொட்டு மேலானது.*

மேலாய் உள்ள இப்பொருளை மெய்யாய் அறிந்து பொய்மாய
மால்ஆய் மயங்கும் மனத்தினையும் அடக்கி அந்த மனம்கலக்கும்
காலாய் உள்ள காமத்தைக் கரப்பாய் என்று கட்டுரைத்தான்
சேலாய் உலகம் உறுபுனல்ஓர் செலுவின் புரையே செலுத்தினோன். (26)

*அனைத்திற்கும் மேலாய் உள்ள ஆன்மாவை உண்மை அறிந்து ஏற்று, பிறப்பு இறப்பு ஆகிய துன்பங்கள் மாயும்படி நானாவித மோகங்கள் கொண்டு கலங்கி நிற்கும் மனத்தையும் உறுதி வடிவான புத்தியால் அடக்குவாயாக, அந்த மனத்தைக் கலக்கும் காற்றாக உள்ள அந்தக் காமம் என்னும் கொடிய பகையை அழிப்பாயாக அருச்சுனா என்று, மச்சாவதாரமாய் உலகை மூடி வருகின்ற ஏழு கடல்களையும் தன்னுடைய மீன் செதிளுக்குள்ளே செலுத்திய பகவான் கூறி அருளினான்.*

**மூன்றாவது கர்ம யோக அத்தியாயம் நிறைவு உற்றது.**

# நான்காவது சம்பிரதாய அத்தியாயம்

நல்தவ நிகழ்தரு கரும ஞானமும்
அற்றமது அறஉனக்கு அறியக் கூறினேன்
மற்றுஅவை களின்வர லாறும் கேள்எனக்
குற்றம்இல் ஆழிஅம் கையன் கூறுவான். (1)

*நல்ல தவத்தை உடைய அருச்சுனா, நிகழ்கின்ற கர்ம யோகம், ஞான யோகம் என்னும் இரண்டையும் குறைவு இன்றி நீ அறியுமாறு கூறினேன். இனி அவற்றின் வரலாற்றைக் கேள் என்று குற்றம் இல்லாத சக்கரப் படையைத் திருக்கரத்திலே உடைய பகவான் அருளிச் செய்கின்றார்.*

எவம்அற முன்புயான் இரவிக்கு ஓதினேன்
அவன்மனு அரசனுக்கு அறியக் கூறினான்
உவகையோடு அவன்இக்கு வாகுக்கு ஓதினான்
தவம்முயல் அரசர்ஈது அறியும் தன்மையோர். (2)

*முன் பகுதிகள் இரண்டினாலும் அருளிச் செய்த யோகங்கள் இரண்டினையும் படைப்பின் தொடக்கத்தில் வாசுதேவன் ஆன நான் சூரியனுக்கு அவனது துன்பம் நீங்கும்படி கூறினேன். அந்தச் சூரியனோ தன் புதல்வன் ஆன வைவஸ்வத மனுவுக்குக் கூறினான். அம்மனுவோ தன் புதல்வன் ஆன இட்சுவாகுவிற்கு மகிழ்வுடன் ஓதினான். மற்றும் தவம் முயல்கின்ற நிமி, சனகன், தருமன், கைகேயன் முதலான அரச முனிவர்களும் குரு சீட பரம்பரை வழிக் கேட்டுக் கடைப்பிடிக்கும் தன்மையர் ஆயினார்.*

கருதஅரும் வகைநிகழ் காலம் சேறலான்
மருவஅரும் வகையதாய் மறைந்த வாய்மையை
இருவினை கெடவரும் யோக நீர்மையை
ஒருவரும் அறிவுஅரிது ஆய உண்மையை. (3)

*இவ்வளவு என்று வரையறுத்துக் கூற இயலாதபடி செல்கின்ற காலமும் அநேகம் சென்றதால், ஒருவராலும் அடைதற்கு அரிய தன்மையதாய் மறைந்த உண்மையாயும் ஒருவராலும் உணர்தற்கு அரிதான இரகசியமாயும், புண்ணிய பாவம் என்னும் இரண்டு வினைகளும் கெடுமாறு செய்வதாயும், ஆன இந்த யோகத்தை (உனக்கு உரைப்பேன்).*

நல்ல காதல்செய் நண்பனும் ஆய்எனை
அல்லது யாவும் அறியலை ஆதலால்
சொல்லல் மேயினன் என்றனன் தூயவன்
மெல்ல வேறு விசயன் விளம்புவான். (4)

*என்னிடத்தில் அன்பு காட்டும் சிறந்த நண்பனாய் என்னை அன்றிப் பொன், பொருள், புகழ் முதலான வேறு எவற்றையும் அறியாதவனாய் இருக்கின்றாய். ஆதலால் உனக்கு உபதேசிக்கத் தொடங்கினேன் என்று தூயவனான பகவான் அருளிச் செய்ய விசயன் வேறு ஒன்றை வினவத் தொடங்கினான்.*

ஞானம் ஆம்இது நல்லவர் கேட்டிடப்
போன காலமும் யான்புகன் றேன்என்றாய்
ஆனது ஆகிலும் அவ்வுடம்பு அன்றுஇது
தான்அது ஆம்வகை நீஅறித் தக்கதோ. (5)

*ஞான யோகமான இதனை நல்லவர் வழி வழியாகக் கேட்டுக் கடைப்பிடித்து வர, சென்ற படைப்பின் தொடக்க காலத்தும் நான் சூரியனுக்கு உபதேசித்து அருளினேன் என்று சொன்னீர். அப்படி உபதேசித்து இருந்தாலும், இவ்வுடலானது படைப்பின் தொடக்கத்தில் சூரியனுக்கு உபதேசம் செய்த அவ்வுடல் அல்லவே. அவ்வுடலில் உள்ளதான அனுபவம் இவ்வுடலில், அதாவது எங்களைப் போல் மானிட தேகத்தில் உள்ள உமக்கு அறியத் தக்கதோ?*

சொல்ஆர் விசயன் இதுமொழியத் துளப முடியோன் சொல்லுவான்
பல்ஆ யிரம்காண் உடம்புஎனக்கும் உனக்கும் நடுவு பரிந்துஒழிந்தது
எல்லாம் அறிவன் யான்நீஅது ஏதும் அறியாய் இதுஅன்றோ
வில்ஆர் தோளாய் நமக்குஉள்ள வேறு பாடு விளம்புங்கால். (6)

*புகழ் நிறைந்த அருச்சுனன் இவ்வாறு வினவத் துளப முடியோன் சொல்லுவான். வாசுதேவனான எனக்கும் அருச்சுனன்ஆன உனக்கும் நடுவில் முறையே லீலையாலும் புண்ணிய பாவ கர்ம வசத்தாலும் உண்டாகி நீங்கிய பிறப்புக்கள் பல்லாயிரம். அனைத்து ஆற்றலோடும் ஈசுவரனாய் உள்ள நான் அந்தப் பிறப்புக்கள் அனைத்தையும் அறிவேன். அஞ்ஞானம் உடைய நீ அந்தப் பிறப்புக்களைப் பற்றி ஏதும் அறிய மாட்டாய். வில் பொருந்திய தோளுடைய அருச்சுனா நம் இருவர்க்கும் இடையில் உள்ள வேறுபாடு இதுவல்லவா?*

சாவாது பிறவாது தனிமுதலாய் இருந்தநான்
ஆஆஇவ் உலகுபடும் அழிதுயர்தீர்ப் பதற்காக
மேவாது நின்றேஎன் மாயையினால் மெய்யேபோல்
ஓவாது பிறந்திடுவேன் உகந்தோறும் உகந்தோறும். (7)

*மரணம் ஆகாமலும் பிறக்காமலும் அனைத்து உயிர்களுக்கும் முதலாய் இருந்த நான் தர்மத்திற்குத் துன்பமும், அதர்மத்திற்கு வளர்ச்சியும் வந்து இவ்வுலகில் சாதுக்கள் படுகின்ற கொடிய துன்பத்தையம் நீக்கி, கயவரை அழித்துத் தர்மத்தை நிலை நாட்டும் பொருட்டு ஈசுவர வடிவாகவே இருந்த வண்ணம் இருந்து என் மாயா வசத்தினால் உண்மையான உடல் உடையவன் போல, நீங்காமல் உகந்தோறும் உகந்தோறும் பிறந்திடுவேன்.*

இவ்வகைஎன் செயலதனை அறிந்துஇந்த இடும்பையில்நின்று
உய்வகைய நெறிபெற்றாங்கு உயர்ந்தாரை உரைப்பஅரிதால்
மெய்வகையது இதுஎன்ன வேண்டியவர் வேண்டியன
அவ்வகைய தெய்வமும்ஆய் அளிப்பேனும் யானேகாண். (8)

*இந்தப்படி சிறந்த என் பிறப்பையும் செயலையும் அறிந்து தாம் பிழைத்தற்குக் காரணம் ஆகிய தவத்தையும் ஞானத்தையும் அடைந்து துன்ப மயமான உலகத் தொடர்புகளில் இருந்தும் முக்தி அடைந்தோரின் எண்ணிக்கையை இவ்வளவு என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. உண்மையான தெய்வம் இந்தத் தெய்வந்தான் என்று இந்திரன் முதலாய தெய்வங்களில் ஒருவரை விரும்பி வணங்கி, வேண்டிய தனம் முதலிய பொருள்களை அவரவர் விரும்பிய தெய்வ வடிவம் ஆகிக் கொடுப்பவனும் வாசுதேவன் ஆகிய யானே கண்டாய்.*

செயலாலும் குணத்தாலும் செலநாலு குலம்ஆக
இயலால்முன் படைத்தேன்நான் இப்பொழுதும் காப்பேன்நான்
மயல்ஆய வினைப்பயனில் மனம்வையேன் மற்றுஅதனால்
அயலாயே இருக்கும்எனக்கு அவைஅறிவார் எனைஅனையார். (9)

நான் முன் படைப்பின் தொடக்க காலத்தில் முக்குணத்தோடும் கர்மத்தோடும் கலந்து நடக்கும்படி அந்தணர் முதலிய நான்கு குலங்களாக என் மாயையினால் படைத்தேன். இப்போதும் நானே காப்பேன். மயக்கத்துக்குக் காரணம் ஆகிய கர்ம பலன்களில் இச்சை வையேன். அக்காரணத்தினால் அவை எனக்கு அயலாயே இருக்கும். இவ்வாறு என்னை அறிபவர் நான் எப்படியோ அப்படியே கர்மத் தொடர்புகளில் இருந்தும் விடுபடுவர்.

உய்யும் படிமுன் உணர்ந்தவர்கள் உணர்ந்த வினைமேல் ஒருப்படுநீ
செய்யும் கருமம் செய்யாமை தீய கருமம் என்றஇவற்றின்
மெய்யும் பொய்யும் அறிவுஅருமை அறிய வேண்டும் பொருளும்இவை
எய்யும் சிலைக்கை உரவோய்இங்கு இவற்றின் செயலை இயம்பக்கேள். (10)

அருச்சுனா, தாம் உய்யும் பொருட்டு முன் யுகங்களில் அனைத்தும் அறிந்த ஞானிகளான ஜனகன் முதலியோர் அறிந்து கடைப்பிடித்த குலதருமச் செயல்களை நீயும் ஒருமுகப்பட்ட மனத்துடன் செய்வாயாக. செயல் எது, செயலின்மை எது, விலக்கப்பட்ட செயல் எது என்னும் இவற்றின் உண்மை இது என்றும், பொய் இது என்றும் அறிவது எளிமை அன்று. அருமையாம். முமூட்சுக்களால் அறியத்தக்க பொருள்களும் செயல், செயலின்மையின் தன்மைகளே. ஆதலால் அம்புகளைச் செலுத்தும் வலிமை உடைய வில் பொருந்திய கை உடைய அருச்சுனா இவற்றின் தன்மையை இனிச் சொல்லக் கேள்.

ஓடு கின்ற புனல்ஆற்றில் ஓடத் துடனே ஓடுவான்
மாடு நின்ற மரம்ஓடத் தான்நின் றால்போல் வரச்செய்தே
நீடு நின்ற மரங்கள்இவை நிற்கும் இயற்கைத் தன்மைத்துஇங்கு
ஓடுகின் றேன்யா னேஎன்று உணர்வு மிக்கோன் உணர்ந்தாற்போல். (11)

ஓடும் நீருடைய ஆற்றில் ஓடுகின்ற ஓடத்துடனே ஓடும் ஆடவனுக்கு அவ்வாற்றின் பக்கங்களில் நிற்கின்ற மரங்களோ தாமும் ஓடுவன போலக் காட்டும். ஓடாமல் நீண்டு வளர்ந்து நிற்கின்ற இந்த மரங்கள் நிற்கின்ற தன்மை உடையது. நானே ஓடத்தோடு நதியில் ஓடுகிறேன் என்று அறிவு மிகுந்த ஆடவன் அறிந்தாற் போல.

செயல்மேல் நின்ற அறிவிடையே செயல்இன் மையும்அச் செயல்செய்யா
இயல்மேல் நின்ற புலன்களிலே எல்லா வினையும் இயல்வதுவும்
மயல்மேல் இன்றி அறிந்தான்யார் அவனே எல்லாம் அறிந்தோனும்
உயல்மேல் நின்ற யோகியும்நல் வினைகள் எல்லாம் ஒழிந்தோனும். (12)

நான் செயல் செய்கிறேன் எனக் கருதுகின்ற ஆன்மாவினிடத்தில் செயல் இன்மையையும், அந்தச் செயலைச் செய்யாமல் அமைதியாய் இருக்கின்ற இந்திரியங்களில் எல்லாச் செயல்களும் பொருந்துவதையும் அறிந்தவனே புத்திமான். அவனே, உயர்ந்த நிலையில் நிலைபெற்ற யோகியும், செய்து முடிக்க வேண்டிய செயல்கள் எல்லாம் செய்து முடித்தவனும் ஆவன்.

ஆவது என்பதும் ஆசையும் அற்றன
மேவ ஞானவெம் தீஇடை வெந்தன
யாவர் தம்தொழில் அவ்வகையோர்களே
சாவதும்பிறப் பும்தவிர்ந் தார்கள்தாம். (13)

எவருடைய சகல கருமங்களும் நான் செய்கிறேன் என்ற எண்ணமும், ஆசையும் அற்றிருக்குமோ, மிக்க ஞானமாகிய கடுந்தீயினால் வெந்தனவோ அப்படிப்பட்ட ஞானிகளே இறப்பையும் பிறப்பையும் தவிர்த்தார்கள்.

**எண்ணும் இன்றி இகபரம் யான்இவை**
**பண்ணு கின்றனன் என்னும்இப் பான்மையோன்**
**உண்ணும் மேல்வினை உண்டுஎன ஓர்கிலான்**
**நண்ணு கின்ற வினைநலிவு உண்ணுமோ.** (14)

கருதுகின்ற வினைப்பயனில் பற்றின்றி, நான் செய்கிறேன் என்ற அபிமானமும் இன்றி இவன் தன் கடமைகளைச் செய்கின்றான் என்று பெரியோர்களால் கூறப்படும் ஞானியானவன் பின் அனுபவிக்கின்ற கர்மங்கள் தனக்கு உண்டு என்று மறந்தும் அறியான். பிராரப்தவசத்தால் அவன் செய்கின்ற கருமங்கள் அவனை வருத்துமோ? (வருத்தா).

**அடங்கு கின்ற புலன்களோடு ஆசைபோய்**
**மடங்கு கின்ற மனத்தினன் ஆனவன்**
**உடம்பு இதன்பொருட் டால்உளது ஆம்எனத்**
**தொடங்கு கின்ற வினைதொடக்கு உண்ணுமோ.** (15)

சொர்க்கம் முதலியவற்றின் மேல் உள்ள ஆசையானது நீங்கி அடங்குகின்ற புலன்களோடு வைராக்யம் அடைந்த சித்தம் உடைய சாதுவானவன் உடம்பு இக்காரணங்களால் உள்ளதாம் என்று தொடங்கும் கந்தை கௌபீனம் கட்டுதல் முதலிய வினைகள் அவனைப் பந்தப்படுத்த இயலுமோ (இயலாது).

**பெற்ற தேகொடு அமைந்துமுன் பேறுஇழவு**
**உற்ற போதில்ஒத்து ஒன்றும் ஒருவர்பால்**
**செற்றம் ஏதும் இலாதவன் செய்வினை**
**குற்ற மோஅவற் றின்திறம் கூறக்கேள்.** (16)

தற்செயலாய் வந்தடைந்த அன்னம், ஆடை முதலிய பொருள்களைக் கொண்டு மகிழ்ந்து, பின்னர் இலாபமும் இழப்பும் வந்த போது அவற்றைச் சமமாய் எண்ணி எவரிடத்தும் எந்தவித வெறுப்பும் இல்லாத சாதுவானவன் செய்கின்ற பிச்சை முதலான செயல்கள் அவனுக்குக் குற்றம் ஆகுமோ? அச்செயல்களின் தன்மையைக் கூறக் கேள்.

**விட்டு முற்றும் வினைகள் வினைப்பயத்து**
**இட்டம் அற்றுஇறை தன்னில் எழும்கருத்து**
**ஒட்ட நின்றவன் யாகப் பொருட்டுஉறப்**
**பட்ட கன்மம் பலத்துடன் மாயுமால்.** (17)

கர்மங்கள் முழுவதிலும் நான் செய்கிறேன் என்னும் அபிமானம் விட்டு, கர்ம பலன்களில் ஆசைகளற்று ஞான வடிவான ஆன்மாவில் சித்தம் நிலைபெற வேண்டும். அப்படி நின்றவன் செய்யும் யாகம் முதலிய காரியங்கள் அதனால் உண்டான பலத்தோடு நாசமாகும்.

**பிரமம் ஆனோர் பிரம நெருப்பிடைப்**
**பிரமம் ஆகிய மந்திரம் தன்னினால்**
**பிரமம் ஆய சருவுடன் பெய்தபின்**
**பிரமமே அடை வார்உளர் பின்னுங் கேள்.** (18)

சாதனங்களால் தன்னை நெறிப்படுத்தி பிரம்மமானவர்கள் பிரம்மமாகிய அக்கினியில் பிரம்மமாகிய மந்திரத்தால் பிரம்மமாகிய நெய் முதலிய பொருள்களைப் பெய்து வேள்வி செய்து பிரம்மத்தையே அடைவார்கள். அவர்களைப் பற்றி மேலும் கேள்.

அறிவது ஆகிய அங்கியிலேகொள
அறிவை யேசிலர் ஆகுதி பண்ணுவார்
செறிவது ஆம்சமத் தீஇடை யேசிலர்
எறிவது ஆய புலன்களை ஈவர்கள். (19)

பிரம்மத்தை அறிந்த சில சாதுக்கள், பிரம்ம வடிவான அக்கினியில் தம் அறிவையே ஆகுதி செய்வர். சில யோகிகள் தம் முயற்சியால் பொருந்தும் சம வடிவான அக்கினியில் ஒடுக்கத் தக்கனவான செவி முதலிய ஞானேந்திரியங்களை ஓமம் செய்வர்.

உந்தி யப்பொறி ஐந்தையும் ஒக்கவே
இந்தி யத்தழல் வாய்இடு வார்சிலர்
நந்தி யத்தொழில் யாவையும் ஞானநெய்
சிந்தி யோகவெம் தீஇடு வார்சிலர். (20)

சில யோகிகள் மாறுபாடு இல்லாத ஒலி முதலான விஷயங்கள் ஐந்தனையும் ஒன்றாகவே செவி முதலான இந்திரியங்கள் ஆகிய நெருப்பினில் ஓமம் செய்வர். வேறு சிலர் அனைத்து இந்திரியங்களின் செயல்களையும் பிரம்ம ஞானம் ஆகிய நெய் சொரிந்து, அதனால் கனன்று எரியும் யோகம் ஆகிய நெருப்பிலே ஓமம் செய்வர்.

தேடிய பொருள்க ளாலும் செயல்உறு தவங்க ளாலும்
நாடிய யோகத் தாலும் நவின்மறை ஞானத் தாலும்
கூடிய பரிசால் வேள்வி குலாவுவர் அநேகர் இங்குப்
பாடிய இவர்கள் அன்றி இவர்சிலர் பரிசும் கேளாய். (21)

தாம் சேர்த்த பொருள்களாலும், தாம் செய்த தவங்களாலும், தாம் விரும்பிய யோகத்தினாலும், சொல்லப்படும் வேதப் பயிற்சியினாலும் அவற்றின் ஞானத்தினாலும், தமது சக்தி புத்திக்கு இயன்ற விதத்தால் யாகம் செய்பவர் அநேகர் உள்ளனர். இங்கே சொல்லிய இவ் ஐவர் அல்லாமல், இனிக் கூறப்படுபவர் சிலரின் யாகம் பற்றியும் கேட்பாயாக.

மிகமேல் நின்ற பிராணனைஅங்கு அபானன் இடையே புகவிட்டுஅங்கு
அகமே நின்ற அபானனைஅப் பிராணன் இடைஆ குதிபண்ணி
இகமே இரண்டும் இயக்கம்அற இருப்பார் சிலர்மற்று இவர்கண்டாய்
சகமேல் பிராணா யாமத்தின் தலைநின் றவரே சாற்றுங்கால். (22)

சிலர் மிகவும் மேல் நோக்கி எழுந்து ஓடிக் கொண்டு இருக்கின்ற பிராண வாயுவை அபான வாயுவிலே மூச்சை உள் இழுத்து நிரப்பி அடக்கும் பிராணயாம முறைப்படி ஓமம் செய்து, கீழ் நோக்கி ஓடிக் கொண்டு இருக்கும் அபான வாயுவை அந்தப் பிராணன் இடத்தே ஓமம் செய்து இவ்வுடம்பின் கண்ணே பிராண வாயு, அபான வாயு ஆகிய இரண்டும் ஒடுங்கும்படி இருப்பார்கள். இவரே காற்றை உள் வாங்கி அடக்கி வெளிவிடும் பிராணாயாமக் கலையில் தலை சிறந்தவர் என்று கண்டு கொள்க. மேலும் சொல்லும் இடத்து.

இன்னவர்கள் யாவர்களும் யாகம்அறி வாரே
அன்னவர்க ளேஅறனில் தீமையில்அ கன்றோர்
சொன்னபரி சால்இவை தொடங்கமுடி யாதார்க்கு
என்னபரி சாலும்இகம் இல்லைபரம் உண்டோ. (23)

இங்கே சொல்லி வந்த இவர் அனைவரும் யாகச் செயல்களை அறிந்தவரே. அவர்களே புண்ணிய வடிவான யாகங்களால் பாவங்களில் இருந்து விடுபட்டவர் ஆவர். இங்கே சொல்லி வந்த வண்ணம் இவ்யாகங்களைச் செய்ய முடியாதவர்க்கு எவ்விதத்தாலும் அற்ப சுகம் உடைய மனிதலோகம் உளதாவது இல்லை. அப்படியிருக்க மேல் உலக இன்பம் எவ்வாறு உண்டாகும்?

இப்படி உரைத்த இந்த யாகங்கள் யாவும் முன்னம்
செப்பிய பிரமத் தின்கண் சனித்தன செய்யும் காலை
ஒப்பரிது ஆய புத்தி கருமத்தின் ஆகாது உள்ளத்து
அப்படி அறிந்து நீயும் பாவத்தின் அகல நிற்பாய். (24)

இவ்வாறு அருளிச் செய்யப் பட்ட இந்த யாகங்கள் யாவும் முற்காலம் வேதத்தின் இடையே விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அவ்வாறு செய்யும் போது கர்மங்கள் தோன்றின. ஒப்பற்ற ஆன்மா தொடர்பான புத்தி ஆனது கர்மங்களால் உண்டாகாது. உள்ளத்திலே அதனை உணர்ந்து அருச்சுனா நீயும் பாவ வடிவமான உலக பந்தங்களில் இருந்து விடுபட்டு முக்தன் ஆவாய்.

தொன்மை யாகமுன் சொன்ன துறைக்குஎலாம்
நன்மை யாம்மிகப் பாலது ஞானமே
பின்ம யால்அறுத்து ஆங்குஅது பேணிடும்
தன்மை யாதுஎனில் ஆங்குஅதும் சாற்றுவாம். (25)

தொன்று தொட்டு வேதத்தில் சொல்லப்பட்டு வருவதான, முன்னர் நம்மால் அருளிச் செய்யப்பட்ட பொருளைக் கொண்டு செய்யும் யாகங்களுக்கு எல்லாம் மிகவும் நன்மை தரும் இயல்பினை உடையது ஞான வேள்வியே. பின்னர் யாகங்களின் மேல் உள்ள இச்சையை விடுத்து, அந்த ஞானத்தை அடையத் தக்க வழியானது ஏதென்று கேட்பாய் ஆகில் அதனையும் இனி அருளிச் செய்வோம்.

விழிஆம்என அறிவால்அறிவு உறுவார்விழி வசமே
வழிபாடுசெய்து அவர்சேவடி மலர்சூடிட அவரே
ஒழியாதுஎவர் களும்யாவையும் ஒருநீஎனது இடைஎன்று
அழியாவகை அதுஆவதுஓர் அறிவேஅரு ளுவரால். (26)

இவன் என் கண்மணியாம் என்று உன் மீது அருள் சுரக்கும்படி, சாத்திர ஞானத்தொடு பிரம்மத்தை அறிந்துள்ள ஆசாரியர் கருதும்படி வழிபாடு செய்து அவரது செந்தாமரை மலர் போன்ற திருவடிகளை உன் முடியின் மீது சூடிக் கொள்ள அந்தப் பிரம்ம வடிவானவரும் நீக்கமற எல்லோரிடத்திலும், எல்லாப் பொருள்களிலும் நிறைந்துள்ள ஒரு பொருளே உன்னிடத்தும் என்னிடத்தும் உள்ளது என்ற அழிவில்லாத நிலையான பிரம்ம ஞானத்தை உனக்கு உபதேசிப்பார்.

அதனால்வரு பயன்யாதுஎனில் அழிபாதகம் முதலாய்
விதம்நாடஅரும் வினைஆழியின் இடையேவிழு குறுவார்
திதன்ஆகிய அறிவுஆகிய சிதையாமித வையினால்
இதன்ஆம்வகை கரைசேருவர் எங்ஙனேஎனில் அதுகேள். (27)

அருச்சுனா, வேறுபாடு அற்ற அவ்வறிவினால் உண்டாகும் பயன் என்ன என்று நீ கேட்பாய் ஆனால், வருத்தம் தரும் பாதகச் செயல் முதலியவைகளால் அநேக விதமான தீவினை நல்வினை என்னும் கடலிலே வீழ்ந்து கிடப்பவரும், திடஞானம் என்னும் கெடாத

தெப்பத்தின் மூலம் எவ்விதத் துன்பமும் இன்றி அவ்வினைக் கடலில் இருந்து கரை ஏறுவர். இது எவ்வாறு என நீ கேட்டால் உனக்கு நான் மேலும் சொல்லுவேன்.

எறியாளரிவரு கான்இடை எரியாதன எவைதாம்
அறியாஅறிவு உடையோர்களும் அறிவார்அது இதுபோல்
குறியால்வரு குணஞானம்மெய் அனலேகொள விடுமேல்
பொறியால்வரு வினைஆனவை பொடிஆம்இதுஓர் பொருளே. (28)

நெருப்பானது கொழுந்து விட்டு எரிகின்ற காட்டிலே வெந்து எரிந்து போகாத மரங்கள் எவை? அறிவு தோன்றாத பிள்ளைப் பருவத்தினரும் கூட இதனை அறிவர். இதுபோல் குறியால் தம்மை யார் என எண்ணி உள்ளே தோன்றும் தத்துவ ஞானமாகிய அக்கினி மேல் எழுமானால், நம் பொறிகளால் உண்டான புண்ணிய பாவ வினைகள் அனைத்தும் வெந்து நீறு ஆகி விடும். இது ஞான நெருப்புக்கு ஒரு பொருளாகுமா?

தீதுஅல் பால்ஆம் வினைபுரி வோரும் சிலநாளி
லேதன் பால்ஆம் அறிவுஅறி தக்கோர் யார்என்னின்
ஓதல் பாலார் பாலும்இவ் உண்மைப் பொருட்பாலும்
காதல் பாலார் ஐம்புலன் வென்றோர் இவர்கண்டாய். (29)

தீயன என்று சொல்லும்படிக்கு இல்லாத (பிச்சை ஏற்றல், குருசேவை, சிரவணாதி) நல்வினைகளைச் செய்வாருள்ளும் தம்மிடம் உள்ள பிரம்மத்தை அறிகின்ற அறிவுடையோர் எத்தன்மையர் என்று நீ கேட்பாய் ஆகில் சாத்திர நூல்களை அறிந்து உபதேசிக்கின்ற குருவினிடத்தும், அவரால் சொல்லப்பட்ட சாத்திரப் பொருள்கள் இடத்தும் அன்புடையவரும் ஐம்புலன் வென்றோரும் ஆகிய இவரே கண்டாய்.

சொல்அரு ஞானப் பொருள்தெரி யார்எது சொன்னாலும்
அல்லஇது ஆம்என்று அறைஉறு வார்அங்கு அன்புஇல்லார்
இல்லவர் ஆவார் இகபரம் இல்லார் இவர்கண்டாய்
தொல்அறி வாலே ஐயுறவு அற்றோர் துறவுஉற்றோர். (30)

குருவினாலும்,சாத்திரத்தாலும் உபதேசிக்கப்பட்ட அரிய ஞானத்தை அறிந்துகொள்ள வியலாதோர், எது சொன்னாலும் இது இதுவோ அல்லது வேறு ஒன்றோ என்று சந்தேகம் கொள்பவர், குருவினிடத்தும், சாத்திரங்களிலும் ஆர்வம் இல்லாதோர் ஆகிய இம்மூவரும் ஆத்ம ஞானம் இல்லாதவர்கள். இவர்கள் இவ்வுலக இன்பம், மேல் உலக இன்பமும் இல்லாதவர்கள் என்று அறிவாய். தொன்றுதொட்டு வரும் ஆன்ம ஞானத்தினால் அனைத்துச் சந்தேகங்களையும் நீக்கியவர் சர்வ கர்மங்களையும் துறந்தவராம்.

அறியா மையிலே பிறந்துஉன்றன் அகத்தே வளர்ந்த ஐயுறவை
நெறியால் உன்றன் ஞானம்எனும் வாளால் வெட்டி அறநீக்கிக்
குறியால் உன்றன் வினைவிளைத்துக் கொள்வாய் என்று கூறினான்
உறிஆர் வெண்ணெய் தொட்டுஉண்டு இவ்வுலகம் உண்ட திருவாயன். (31)

அஞ்ஞானத்திலே பிறந்து, உன் இதயத்தின் கண்ணே வளர்ந்துள்ள சந்தேகத்தை அழிப்பது உனக்கு முறை ஆதலால் உனது ஞானம் ஆகிய வாளால் முழுவதுமாக வெட்டி நீக்கி, கருத்தால் உன் சுதர்மம் ஆகிய கர்ம யோகத்தைச் செய்து கொள்வாய் என்று அருளினான் கோபியர் திருமனையில் உள்ள வெண்ணெய்யைத் தான் உண்டு, இவ்வுலகத்தையும் உண்டருளிய பகவான்.

நான்காவது சம்பிரதாய அத்தியாயம் நிறைவுற்றது.

# ஐந்தாவது ஞானகர்ம அத்தியாயம்

பூத்துஅருளி ஒருமலரால் புவனம்அவை ஈர்ஏழும்
காத்துஅருளி விளையாடிக் கடைசாரம் கண்வளரும்
தீர்த்தன்மறை முறைமொழிந்த திருவாக்குத் தெரியாதே
பார்த்தன்அவன் எதிர்நின்று சிலஇங்ஙன் பகர்வுற்றான். (1)

ஒப்பற்ற உந்தித் தாமரையினால் பதினான்கு உலகங்களையும் படைத்துக் காத்து அருளி விளையாடி அவைகளின் முடிவில் ஆலிலை மேல் அறிதுயில் கொண்டிருக்கும் கண்ண பெருமான் வேத முறைப்படி முன் அருளிச் செய்த திருவாக்கின் உண்மையை அறியாமலே அருச்சுனன் அந்தப் பகவானின் எதிரே நின்று இந்தப் படி சிலவற்றை விண்ணப்பம் செய்தான்.

கருமம்நன்று எனவும்எதிர் கழறுகின் றனைதுறவை
அருமருந்து எனமொழிதி அவைஇரண் டினும்அமல
ஒருமைஎன்துயர்அகல உரைசெய்கஎன் றனன்விசயன்
இருமையின் பரிசும்இது எனஇயம் பிடும்இறைவன். (2)

குற்றம் அற்ற பகவானே, முரண்படுகிற கருமங்களே நன்று எனச் சொல்லுகின்றீர். அக்கர்ம சந்நியாசமாகிய துறவை அரிய அமுதம் என்று சொல்லுகின்றீர். இப்படி என்னைச் சந்தேகத்திற்கு ஆட்படுத்தாமல் கர்மஞ் செய்கை, கர்ம சந்நியாசம் ஆகிய இவ்விரண்டிலும் சிறந்த ஒன்றை என்னுடைய துயரம் நீங்குமாறு உபதேசம் செய்தருள்க என்று வேண்டினான் அருச்சுனன். இந்த இரண்டன் தன்மைகளும் இத்தன்மையன எனப் பகவான் இனி அருளிச் செய்கின்றார்.

துறவும்நன்று அருவினைசெய் தொழிலும்நன்று அவைதுணியில்
அறவும்நன்று அருவினைகள் விடலில்அங்கு அவைமுயல்கை
பெறலில்இன் பமும்இழவில் இடரும்ஒன்று இலர்பெரிது
துறவுநின் றவர்பிறர்கள் துயரில்நின் றிடுதொழிலர். (3)

கர்ம சந்நியாசமும் சிறந்ததே, செய்வதற்கரிய கர்ம யோகமும் சிறந்ததே. அவைகளில் எது மேலானது எனில், கர்ம சந்நியாசத்தை விடக் கர்ம யோகம் மேலானது. இலாபத்தில் இன்பமும், இழப்பில் துன்பமும் அடையாதவர்கள் பெருமை உடைய துறவில் நின்றவராவர். கர்மத்தை விடுபவர்கள் துன்பத்தில் நிலைபெறும் தொழில் உடையோர்.

பெருமைஒன் றியதுறவு கருமம்என்று இருமையினும்
அருமைஒன் றினைஅடைஞர் அவைஇரண் டையும்உடையர்
இருமைஎன்று அறியும்அவர் இவைஅறிந் திலர்இயல்பின்
ஒருமைஎன்று உணரும்அவர் இவைஉணர்ந் தவர்உணரில். (4)

பெருமை பொருந்திய துறவு, கர்மம் என்ற இரண்டிலும் அருமை ஆகிய ஏதாவது ஒன்றினை அடைந்தோர் அவை இரண்டின் மோட்ச வடிவான பயனை அடைவர்.

*அவை இரண்டின் பயனும் வேறு வேறு என்று அறிபவர் இயல்பாக இவ்விரண்டனையும் அறிந்தவர் அல்லர். இவ்விரண்டின் பயனும் ஒன்றே என்று அறிந்தவர் சாங்கியம், யோகம் என்ற இவை இரண்டினையும் இயல்பாக அறிந்தவராம்.*

**வினைமுயன் றிடஅதனில் விளைதரும் துறவுஅதுகொடு**
**எனைஅடைந் திடுவர்எவர் களும்இவண் செயலைவிட**
**நினைவுஅரும் தகையபொருள் நெறிஅறிந் திடுதல்அரிது**
**அனையதம் தொழில்புரியும் அவர்அடைந் திடுவர்அறி.** (5)

*பற்றற்றதாகிய கர்ம யோகத்தைக் கடைப்பிடித்து வர, அதனால் உண்டாகும் துறவின் மூலம் அனைவரும் என்னை விரைவில் அடைவார்கள். இவ்வுலகில் கர்மயோகத்தைவிட நினைத்தற்கு அரிய பெருமை உடைய பொருளான என்னை அடைவதற்கு உரிய வழியாக வேறு உள்ளது என்று அறியும்படி இல்லை. ஆதலால் அப்படிப் பட்ட ஆசையற்றதாகிய கர்ம யோகத்தைக் கடைப்பிடிப்பவரே என்னை அடைவர் என்பதை அருச்சுனன் ஆகிய நீ அறிக.*

**கவைதரும் குணமும்மிகு களிதரும் புலனும்எனும்**
**இவைகடந் தவர்கள்எனை அறிவில்நன்று இசையும்அவர்**
**நவைதரும் தொழில்செயினும் நலிவதுஎங்கு அவரைஅவை**
**அவைகடந்த தவர்கள்வினை அவைதுறந்து அடைகுவதுஎன்.** (6)

*பிரிவு தரும் குணங்களை உடைய உட்கருவிகளும் பெரும்பாலும் மயக்கம் தருகின்றனவான புறக்கருவிகளும் என்று கூறப்பட்ட இவைகளை வென்றவரும், என்னைத் தன் புத்தியினால் நன்கு அறிந்து ஏற்றுக் கொண்டவரும், பந்தத்தைத் தருவனவான கர்மங்களைச் செய்யினும் அக்கர்மங்கள் அவரை யாண்டும் பந்தப்படுத்தாவாம். முன் சொன்ன அனைத்து இந்திரியங்களையும் வென்ற ஞானிகள் வினைகளில் இருந்து நீங்கித் துறவு கொண்டு அடைகின்ற பயன் வேறு என்னவாகும்? (ஏதுமில்லை).*

**காணும் கேட்கும் உறும்மோக்கும் காலால் நடக்கும் கண்வளரும்**
**பேணும் துறக்கும் மூச்சுவிடும் பேசும் விழிக்கும் சிம்பிளிக்கும்**
**பூணும் இன்னும் பலஎனினும் புலன்சேர் பொறியின் புணர்ப்புஎன்றே**
**தூணும் கிரியும் எனஒன்றும் துளங்கான் விளங்கும் துணிவுடையோன்.** (7)

*கண்களால் உருவங்களைப் பார்ப்பான். காதுகளால் ஒலிகளைக் கேட்பான். தொடுகையால் சூடும் குளிர்ச்சியும் உணர்வான். மூக்கால் மணங்களை நுகர்வான். பாதங்களால் நடப்பான். பின் தூங்குவான். ஒன்றை வேண்டும் எனவிரும்புவான். ஒன்றை வேண்டாம் என்று வெறுப்பான். மூச்சு விடுவான். பேசுவான். பின் கண்களைத் திறப்பான். கண்களை மூடுவான். ஆடை அணிகளால் அலங்கரிப்பான். இன்னும் அநேகச் செயல்களைச் செய்யினும் எல்லாம் பொறிகள் தத்தம் விஷயங்களில் ஈடுபடுதலே என்று விளங்கிக் கொள்ளும் துணிவுடைய ஞானியானவன் தூண் போலவும் மலைபோலவும் ஒன்றிற்கும் அசையான்.*

**யார்எவ் வினையும் என்பொருட்டால் இயற்றிப் பயனை இகழ்வர்அவர்**
**சேரும் வினைகள் அவற்றோடும் சேரார் எய்தும் திறம் உரைக்கில்**
**சார உடனே பிறந்திருந்தும் தண்தா மரையின் தகைஇலையும்**
**நீரும் எனஆய் இருப்பர்அதில் நின்றோர்க்குஒன்று நிகழாதால்.** (8)

எவர் அனைத்துச் செயல்களையும் என் மகிழ்ச்சிக்காகச் செய்து சொர்க்கம் முதலான இன்பங்களை வேண்டாம் என்று தியாகம் செய்வார்களோ அவர்கள் தம் செயல்களில் ஒன்றுடனும் சம்பந்தப்பட மாட்டார். அவர்கள் இவ்வாறு பொருந்தும் தன்மையைச் சொன்னால் கூடச் சேர்ந்து உண்டாகி இருந்தும் குளிர்ந்த தாமரையின் பெரிய இலையும் நீரும் எனத் தொடர்பின்றி இருப்பர். அவ்வாறு தாமரை இலைத் தண்ணீர் போல இருப்பவர்க்கு ஆசையற்ற கர்மங்களால் ஒரு பந்தமும் ஏற்படாது.

**உடன்ஆய புலனாலும் மனனாலும் உடம்பாலும்**
**நடம்ஆகும் எனமுயல்வார் நாள்தோறும் முயன்றாலும்**
**விடம்ஆகும் அவ்வினையே வீடுஆகும் வினைப்பயனைக்**
**கடன்ஆகும் எனமுயல்வார் அதனாலே கட்டுண்பார்.** (9)

தன்னுடன் சேர்ந்து இருக்கும் இந்திரியங்களாலும், மனத்தினாலும், உடம்பாலும் கர்மங்கள் செய்யப்படுகின்றன என்பவர்கள் கர்மங்களைத் தினந்தோறும் செய்தாலும் விஷத்தைப் போலத் துன்பத்தைக் கொடுப்பதற்குக் காரணமான அந்தக் கர்மங்களே வீடுபேற்றையே தருவதற்குக் காரணமாம். ஆனாலோ, கர்மங்களின் பயன்களை நாம் அடைவோம் என்று விரும்பி அவற்றைச் செய்தால் அக்கர்மங்களாலே கட்டப்படுவர்.

**அன்பவினை ஆகுபயன் விட்டுஅமைதி யாலே**
**ஒன்பதுபொய் வாசல்அமை ஊர்அதனின் உள்ளே**
**இன்பஉரு வாய்இனிது இருப்பன்இயல் பாலே**
**முன்பயில்வ தாம்வினைசெ யான்முயல்வி யானால்.** (10)

என்பால் அன்புடைய அருச்சுனனே! கேள். அடங்கிய மனத்தினால் அனைத்துச் செயல்களையும் அவற்றால் உண்டாகும் பயன்களையும் விட்டு விட்டு ஒன்பது வாசல்கள் பொருந்திய மாயாபுரம் என்னும் இவ்வுடலின் கண் இன்ப வடிவுடன் இனிதே இருப்பவன், இயல்பாகவே எதிர்வந்து சேரும் கருமங்களைச் செய்பவனும் செய்விப்பவனும் ஆக மாட்டான்.

**இவ்வகைய ஆயசெயல் யாவும்இயல் பேகாண்**
**அவ்வகைய மாயைஅத னால்அறிவு உறாதே**
**செய்வகையன் யான்எனது செய்கைஇது என்றே**
**பொய்வகையி னால்அழிவ தேபுலன்இ லாதார்.** (11)

இப்படிப்பட்ட செயல்கள் யாவும் மாயையின் இயல்பே என்பதை அறிவாய். அத்தன்மையான மாயை அதனால் அறிவு பெறாமல் நான் இந்தக் கர்மங்களைச் செய்பவன், இந்தக் கர்மங்கள் என்னுடைய செயல்கள் என்று எண்ணும் அறிவு அற்றவர் பொய்யாகவே மோகம் அடைந்து நிற்பர்.

**அறிவினால் அறிகிலாது அவைஎலாம் அழியவே**
**செறிவின்ஆர் அறிவுவான் இரவிபோல் திகழுமால்**
**நெறியினால் அதனிலே நிலையும்ஆய் அதனில்ஓர்**
**பிறிதுஇலா வகையினார் பிறவியா னதுஇலார்** (12)

ஆன்மாவைப் பற்றிய ஞானத்தினால் அறியாமையைத் தரும் அஞ்ஞானம் முழுமையும் நாசமாகிட, முழுமையான இயல்புடைய பரம்பொருள் (பிரம்ம சைதன்னியம்) வானில் சூரியன் போல் தெளிவாக விளங்கும். இந்த வழியினால் அப்பரம்பொருள் பற்றிய நினைவில் உறுதியாய் நிலைத்து இருப்பவர், அப்பரம்பொருளில் ஒரு சிறிதும் நான் வேறு என்னும்

புத்தி இன்றி, அதுவே நான் நம் ஆன்மா என்னும் புத்தி உடையவர் யாவரோ அவரே மீண்டும் பிறப்படைய மாட்டார்.

நன்றேஞான அருமறையோன் நன்னாய்அந்நாய் இறைச்சிதனைத்
தின்றேஉழலும் அவன்யானை ஆஎன்றஇந்தத் திறத்துஎல்லாம்
அன்றேஎன்னாது ஆம்என்னாது அறிவாய்நின்ற எனைஎங்கும்
ஒன்றேஆகக் காண்பான்இவ் உடம்போடுஇருந்தே உடம்பு அறுப்பான். (13)

ஞானத்தில் திறமுடைய நல்ல அந்தணன், யானை, பசு, நல்ல நாய், அந்த நாயின் இறைச்சியைத் தின்று வாழ்பவன் என்று சொல்லப் படுகின்ற உயிர்களில் எல்லாம் ஒன்றில் உள்ளான், ஒன்றிலே இல்லான் என்று பாராமல் எவ்விடத்தும் அறிவு உருவாய் நின்ற என்னை ஒன்றாகக் கருதும் ஞானம் உடையவன் இவ்வுடம்புடன் கூடி வாழ்பவனாய் இருந்தே பிறப்பு இறப்பினை வென்றவன் ஆகின்றான்.

இகமேநிகழும் புலன்விளைந்த இன்பம்எல்லாம் அறஇகந்துஉள்
அகமேவிளையும் பேர்இன்பம் அடைந்தார்க்குஎன்றும் அழியாதாம்
புகமேய்கின்ற புலன்பொறிகள் புணர்ந்தஇன்பம் போம்என்றும்
தகமேல்இடர்ஆம் எனவும்அவை தக்கோர்என்றும் சாராரால். (14)

இவ்வுலகத்தில் நிகழும் விஷயங்களால் உண்டான இன்பம் அனைத்தும் அந்தக் கரணத்தில் இருந்தும் முழுமையாக அகற்றி, அதனால் அந்தக் கரணத்தின்கண் உண்டாகும் பேரின்பத்தை அடைந்தவர்க்கே அது என்றும் அழியாததாம். மனத்திலே புகும்படி அனுபவிக்கின்ற இந்திரிய விஷயங்களால் தோன்றும் இன்பங்கள் நீங்கும் இயல்புடையனவே என்றும், அவ்வின்பங்களுக்குத் தக்கபடி பின்னர்த் துன்பங்கள் உண்டாகும் என்றும், அவற்றை அறிவுடையோர் என்றும் பொருந்த மாட்டார்.

உடம்புட னேஉளன் ஆகி இருந்தே
விடம்புரை காம வெகுளியின் வேகாச்
சடம்பொறை யாமை தவிர்த்தவ னேநல்
இடம்புகும் ஞானியும் இன்புறு வானும். (15)

உடலுடன் கூடி வாழ்ந்து இருக்கும்போதே, நஞ்சை ஒத்த காமம், கோபம் முதலியவற்றால் வேகாமல் சரீரத்தால் பொறுக்க இயலாத அவற்றைச் சகித்தவனே பரம்பொருள் இடத்தில் சேரும் ஞானியும், அந்த ஞானத்தின் பயனாக வீட்டின்பம் பெறுதற்கும் உரியவனாம்.

மெய்அறி வேவிளை இன்பம்அ துஆக
மெய்அறி வேவிளை யாடுஇடம் ஆக
மெய்அறி வேஒளி ஆகவும் மேயோர்
மெய்அறி வேபெறும் இன்பம் விடாதார். (16)

உள்ளிருக்கும் ஆத்மாவையே தமக்குள் உண்டான இன்பம் ஆகவும், அதனையே தனக்கு விளையாடும் இடமாகவும், அதனையே தனக்கு உள் ஒளியாகவும், அனுபவிக்கும் யோகிகள் ஆன்மாவே ஆகி அதனால் கிடைக்கும் பேரின்பத்தை அடைந்து மகிழ்வர்.

காவல்செய்து ஐந்து புலன்கண் இரண்டும்
மேவ இரும்பு ருவத்திடை விட்டிட்டு
ஆவகை நின்ற அபான பிராணன்
ஏவலின் இன்றி இயக்கம் அறுத்தே. (17)

சுரோத்திரம் முதலிய ஐந்து இந்திரியங்களையும் சப்தம் முதலிய ஐந்து விஷயங்களில் செல்லாமல் காத்து, தம் கண்கள் இரண்டையும் புருவ மத்தியில் பொருந்த வைத்துக் கீழ்முகமாகவும், மேல்முகமாகவும் இயங்கும் அபானனையும் பிராணனையும் பயிற்சியால் இயங்காதவாறு நிறுத்தி.

அஞ்சு பொறித்திறன் ஆசை அடக்கா
நெஞ்சு பயத்தொடு கோபமும் நீக்கா
எஞ்சு திறத்தல்இல் யோகிகள் காணும்
உஞ்சு பிறப்புஇடர் யாவும் உதிர்ப்பார். (18)

ஐம்பொறிகளால் விஷயங்களில் ஏற்படும் இச்சையை அடக்கி, மனத்திலே உள்ள பயத்தையும் சினத்தையும் நீக்கி, ஆகாரம் முதலியவற்றைக் குறைத்தும் மிகாமலும் சமமாகக் கொண்டு பழகும் யோகிகளே உய்வடைந்து பிறப்பு இறப்பு முதலிய துன்பங்களில் இருந்து நீங்கி முத்தர் ஆவர்.

சாதிபுரியும் தொழில்களுக்கும் தக்கோர்செய்யும் தவங்களுக்கும்
தீதுஇல்உலகம் ஏழினுக்கும் சேரும்இடமாய் உள்ளஎனை
ஓதிமுடியும் பரிசேமெய் உணர்ந்தார்பிறவார் எனஉரைத்தான்
ஆதிமுடிவுஒன்று இன்றியே அடையத்தானே ஆய்நின்றான். (19)

நான்கு குலத்தவர்களில் பற்றுடையோரால் செய்யப்படும் கர்மங்களுக்கும், அறிவுடையோர் செய்யும் குற்றம் அற்ற தவங்களுக்கும், உலகங்கள் ஏழனுக்கும் பொருந்தும் இடமாய் உள்ள நாராயணன் ஆன என்னை வேதங்கள் சொல்லியபடி உண்மையாய் அறிந்தவர் மீண்டும் பிறக்க மாட்டார் என்று முதலும் முடிவும் தனக்கு இல்லாதவாறு அனைத்தும் தானேயாய் நின்ற பகவான் அருளிச் செய்தான்.

**ஐந்தாவது ஞானகர்ம அத்தியாயம் நிறைவுற்றது.**



# ஆறாவது யோக அத்தியாயம்.

யோக மனத்தவர் யோகம் அதற்கே
ஏகம் முதற்பொருள் ஆகி இருந்தே
நாக பணத்திடை யேநடம் ஆடும்
மேகம் அவற்குஇவை மீள விரிப்பான். (1)

யோகம் செய்யும் மனம் உடையவர், யோகத்தின் கண்ணே ஒன்றான முதற் பொருளாக விளங்கி, காளிங்கன் என்னும் பாம்பின் படத்தின்மேல் ஏறி நின்று நடனம் ஆடும் மேக வண்ணனான கண்ண பெருமான் யோக சூத்திரங்களைக் கேட்டபின் அருச்சுனனுக்கு எழுந்த சந்தேகங்களுக்கு மீண்டும் யோக சூத்திரங்களை விரித்து உரைக்கத் தொடங்கினார்.

செய்த வினைப்பயன் விட்டுஇவை தீராது
எய்த இயற்றி இருப்பவ னேகாண்
உய்ய நினைத்திடு யோகிநல் ஞானி
வெய்ய தழல்பொலி வேள்விசெய் வாரில். (2)

தான் செய்த கர்மங்களின் பயனை விரும்பாமல் நீக்கி, இக்கர்மங்களை விடாமல் உறுதியோடு செய்பவனே, வெம்மையான தீயைக் கொண்டு வேள்வி செய்பவரை விட, தான் கடைத்தேறக் கருதும் நல்ல யோகியும் துறவியுமாம்.

மேவின யாவையும் வீடுதல் இல்லார்
யாவர்க ளேனும்நல் யோகிகள் ஆகார்
ஆவர்கள் ஆகில் அவாஅற லேகாண்
ஓவல்இ லாதநல் யோகமும் ஐயா. (3)

அருச்சுனா, தம்மிடம் பொருந்திய சங்கற்பங்கள் அனைத்தையும் விட்டுவிடுவதற்கு இயலாதோர் எவர்கள் ஆனாலும் நல்ல யோகிகள் ஆகமாட்டார். அப்படி யோகிகள் ஆவார்கள் ஆகில் அவர்கள் எல்லாக் கர்மங்களின் பயனிலும் ஆசையை நீக்கியவர் என்று காண். இதுவே அழிவு இல்லாத சுருதியில் கூறிய நல்ல யோக இலக்கணமும் ஆகும்.

உய்வகை யோகம் ஒருப்படு வார்க்குக்
கைவரு மாசெயல் காரண மேகாண்
மெய்வகை யோகம் விளைந்தபின் மெய்யே
செய்வன வானவை தீமைய வேயாம். (4)

தாம் உய்யும் படிக்கு யோகத்தில் ஒன்றுபடும் விருப்பமுடைய முனிவருக்கு அந்த யோகம் கைவசம் ஆகுவதற்குக் கர்மங்களே சாதனம் ஆகும். உள்ளபடி யோகம் தோன்றிய பின்னர் உண்மையாகவே செய்கின்ற கர்மங்கள் தீமை உடையனவேயாம்.

புன்மைய வான பொறித்திற னோடும்
பன்மைய வான வினைப்பய னோடும்
அன்மையன் ஆனவன் அப்பொழுது ஐயா
தன்மையின் யோகம் அதில்தலை நின்றான். (5)

*அருச்சுனா, அற்பத் தன்மை உடைய சப்தம் முதலிய விஷயங்களோடும், நரனாவிதமான கர்ம பலன்களோடும் பற்றற்று இருப்பவன் அப்போது பற்றற்ற இயல்பினால் யோகத்தில் தலை சிறந்தவன் ஆகிறான்.*

**தான்அலது யாவர்தன் மேன்மைசெய் தக்கார்**
**தான்அலது யாவர்தன் கீழ்மை சமைப்பார்**
**தான்அலது யாவர்தன் மெய்ப்பகை ஆவார்**
**தான்அலது யாவர் தனக்குஉறவு ஆவார்.** (6)

*அருச்சுனா, தான் அன்றி வேறு யாவர் தனக்கு மேன்மை செய்யத் தக்கவர். தான் அல்லாமல் வேறு யாவர் தனக்குக் கீழ்மை செய்யத் தக்கவர். தான் அல்லாமல் வேறு யாவர் ஆன்மாவுக்கு உண்மையான பகைவர் ஆவர். தான் அன்றி வேறு யாவர் தனக்கு உறவும் ஆவர்? வேறு யாரும் இலர்.*

**இறவா வகைதன் உள்ளத்தை அடக்கும் அவனே தனக்குஎன்றும்**
**உறவாய் உள்ளான் அல்லாதார் தமக்கே பகையாய் ஒழுகுவார்**
**துறவாது ஒழுகும் துவந்தங்கள் துறந்து ஒன்றினையே தொடர்ந்தவர்பால்**
**மறவாது எழுந்த மெய்அறிவுஇம் மாயை மறைக்க மறையாதால்.** (7)

*பிறந்து இறந்து தான் வருந்தா வண்ணம் தன் உள்ளத்தை அடக்கும் அவனே தனக்குத் தானே எப்போதும் உறவாக உள்ளோன். உள்ளத்தை அடக்கித் தமது வசம் பண்ணாதோர் தமக்குத் தாமே பகையாவார். அனைவரும் தவிராது அடையும் குளிர் வெப்பம், சுகம் துக்கம் முதலிய இருமைகளைத் துறந்து ஆன்மா ஒன்றே நிலையானது என்று எப்பொழுதும் நாடி நிற்ப்வர்பால் எழுந்த மெய் அறிவு துவந்துவ வடிவான மாயையானது மறைத்தாலும் அதனால் மறைபடாது.*

**பாடும் பனுவல் பலஓதி அவற்றால் அறியும் பயன்உணர்ந்து**
**நீடும் புலன்கள் அவைவென்று நிலையில் கலக்கற்கு அரியானாய்**
**ஓடும் பொன்னும் ஒருபொருள்போல் ஒக்கப் பார்க்கும் அவனேஇங்கு**
**ஆடும் பெரிய மாயக்கூத்து ஆடாது அதுகண்டு அமர்ந்துஇருப்பான்.** (8)

*குருமுகமாகக் கற்கத் தகுந்த நூல்கள் பலவும் கற்று, அவற்றால் அடையத் தக்க பயன்களை உணர்ந்து, விஷயங்களில் நீள நினையும் இந்திரியங்களை வென்று, தன் நிலையில் இருந்து மாற்றிட அரியவனாய், ஓடும் பொன்னும் ஒரு பொருள் போலச் சமமாகப் பார்க்கும் யோகியே, இவ்வுலகின்கண் ஆடப்படும் மாயக் கூத்தினைத் தான் செய்யாமல் அக்கூற்றினைக் கண்டும் சலனம் அற்றவனாய் இருப்பான்.*

**கைம்மாறு இல்லா தனசெய்வான் காதல் தோழன் கடும்பகைஞன்**
**விம்மாது எவர்க்கும் ஒத்துஇருப்பான் வேண்டப் படுவான் வேண்டாதான்**
**அம்மா மறைநூல் நெறிபுரிவான் ஆகா தனஆக் கிடுவான்என்ற**
**இம்மா னுடவர் அனைவருக்கும் ஒப்பான் யோகி எனப்படுவான்.** (9)

*கைம்மாறு கருதாது உதவி செய்பவனும், அன்புள்ள நண்பனும், கொடிய பகைவனும், கலங்காமல் எல்லோர் இடத்திலும் சமமாகப் பழகும் நடுவுநிலைமை உடையவனும், வேண்டப் படுபவனும், வேண்டப் படாதவனும், அழகிய பெருமையுடைய வேதநெறிப்படி நல்ல கர்மங்களைச் செய்யும் சாதுவும், அவ்வாறு செய்யாத பாவியும் என்று சொல்லப் பட்ட இம்மானிடர் அனைவரிடத்தும் சமமாய் இருப்பவன் எவனோ அவனே யோகி எனப்படுவான்.*

தலையாம் இந்த யோகத்தைத் தலைநின்று ஒழுகும் தன்மைகேள்
உலையா ஆசை அறமாற்றி ஒன்றும் தனக்குஎன்று ஒழுகாதே
மலைஆர் முழைஞ்சே முதலாக யோகங் களுக்கு வகுத்துஉரைத்த
நிலையா வையினும் ஒன்றினில்வந்து யாதும் நலியா இடத்துஅதிலே. (10)

யோகங்கள் அனைத்திலும் தலையாய இந்த யோகத்தில் நின்று நடக்கும் தன்மையைக் கேள் அருச்சுனா, கெடாத ஆசைகளை முற்றும் நீக்கி, ஒருபொருளும் தனக்கு என்று பிறர்பால் சென்று இரக்காமல் யோகம் சித்திபெற வகுத்துக் கூறிய மலைக்குகைகள் முதலாகக் கூறிய இடங்கள் பலவற்றில் ஓர் இடத்தில் வந்து யாதொரு உயிரும் வருந்தாதவாறு உள்ள அவ்விடத்தில்.

ஒக்கும் வகையால் குசைபரப்பி அதன்மேல் உழையின் தோல்படுத்துத்
தக்க துகிலை அதன்மேலே விரித்துத் தான்அங்கு அதில்இருந்து
மிக்க மனனை அறஒருக்கி வேறு செய்யும் வினைகளுடன்
தொக்க புலன்கள் அவைஅடக்கி உணர்வு தூய்தா வதன்பொருட்டால். (11)

தருப்பையைச் சமமாகப் பரப்பி, அதன்மேல் மென்மையான மான் அல்லது புலியின் தோலைப் பரப்பி, அதன்மேல் மெல்லிய துணியை விரித்து, அந்தத் தூய்மையான இடத்தில் உண்டாக்கிய அவ்விருக்கையின் மேல் இருந்து வேறு வேறு செயல்களைச் செய்யும் இந்திரியங்களை அடக்கி, அலைகின்ற மனத்தையும் ஒடுக்கி உணர்வு தூய்மையாக இருக்கும் பொருட்டு,

தலையும் கழுத்தும் உடம்பும்இவை செவ்வேதளரா தேஇருக்கும்
நிலையில் இருந்து கண்களைத்தன் மூக்கின்நுதிமே லேநிறுத்தி
அலையும் கடல்போல் காமமும்மெய்ப் பயமும் தன்னை விட்டுஅகல
உலையும் மனம்உள் அடங்கஎனை உணர்ந்தே இருக்கும் அதுயோகம். (12)

அருச்சுனா, யோகப் பயிற்சி செய்பவன் உறுதியான நினைவு உடையவனாய், தலையும் கழுத்தும் உடம்பும் ஆகிய இம்மூன்றும் அசையாது சமமாய் இருக்கும் இந்நிலையில் இருந்து, கண்களைத் தன் மூக்கின் நுனியைப் பார்க்கும் படியாக அதன் மேல் நிறுத்தி, பின்னும் அலைகின்ற கடல் போன்ற சஞ்சல வடிவான ஆசை, உண்மையான அச்சம் ஆகியன தன்னை விட்டு நீங்கவும் அலைகின்ற மனம் உள் அடங்கவும் என்னை உணர்ந்து இருப்பதே யோகம் என்று அறிந்து கொள்க.

எண்திகழும் யோகத்தை இப்பரிசே எப்பொழுதும்
கொண்டுபயில் வார்கடைக்கால் என்னையே கூடுவரால்
உண்டியினில் மிகுவார்ஊண் துறப்பார்மிக்கு உறங்கிடுவார்
கண்துயிலை அறத்துறப்பார் அவர்க்குஇதுகை வாராதால். (13)

பயிற்சி வைராக்கியங்களின் வலிமையினால் சிறந்தது என்று எண்ணப்படும் யோக சமாதியை, முன் சொன்ன முறைப்படி ஏற்றுக் கொண்டு எப்பொழுதும் பயிற்சியில் இருப்பவர், முடிவில் பரம் பொருளான என்னையே அடைவர். உணவின் மேல் விருப்பம் உடையவராய் அதனை மிகுதியாக உண்ண நினைப்போரும், உணவினை உண்ணாது முற்றிலும் நீக்குவோரும், மிகுதியான தூக்கத்தை உடையவரும், தூக்கத்தை முற்றிலும் நீக்கியவரும் ஆன இவர்களுக்கு இந்த யோகம் கை கூடாது.

துயிலும் உணவும் செய்தொழிலும் மிகாமே குறைந்து தோன்றாமே
பயிலும் அவனே யோகத்தைத் தன்பால் படுக்கும் பான்மையான்
அயிலும் பொறிவிட்டு அவ்அறிவு தன்பால் அடங்கும் அப்பொழுது
குயிலும் யோகம் தலைநின்றான் என்றுஆங்கு அவனைக் கூறலாம். (14)

தூக்கம், உணவு, தான் செய்யும் தொழில் ஆகியன அதிகப்படாமலும் குறைவாக இல்லாமலும் கொண்டு பயில்கின்றவனே யோக சமாதியைத் தன்பால் வசப்படுத்தும் தன்மை உடையவன். தாம் அனுபவிப்பவைகள் ஆன இகலோக, பரலோக விஷயங்களில் ஆசையை ஒழித்து, அடக்கப்பட்ட அந்தச் சித்தமானது தன் ஆன்மாவிலே அடங்கும். அந்தச் சமயத்தில் இங்கே சொல்லப் பட்ட சமாதி யோகத்தில் முதன்மை ஆயினான் என்று அவனைக் கூறலாம்.

இப்பரிசு பயில்கின்ற யோகிகாலிலாவிடத்து
மெய்ப்பரிசு நடுங்காத விளக்குப்போல் விளங்குமால்
எப்பொழுதுஆங்கு அவன்உணர்வுஇவ் உண்மையிலே சென்றுஇசையும்
அப்பொழுது பரமானந் தத்தினையும் அடையுமால். (15)

மேலே கூறியபடி கடைப்பிடித்த யோகியின் அந்தக்கரணம் ஆனது, காற்று இல்லாத இடத்தில் உள்ளபடி அசையாது இருக்கும் விளக்குப் போல அசைவற்றுப் பிரகாசிக்கும். எப்பொழுது யோகப்பயிற்சி செய்பவனுடைய உணர்வு ஆன்ம சொரூபத்தில் சென்று நிலைக்குமோ அந்தச் சமயத்தில் யோகி பேரின்பம் அடைவான்.

யாதுஒன்று இந்தப் புலன்அறியா அளவில் இன்ப மாய்இருக்கும்
யாதுஒன் றினைச்சென்று அடைந்தோர்கள் பின்னை அதனில் இரண்டு ஆகார்
யாதுஒன் றினைப்பெற் றவர்இதனின் மிக்கது ஒப்பது உண்டுஎன்னார்
யாதுஒன்று இந்த அறிவுக்கே அறிவாய் நிற்கும் அதில்நின்றோர். (16)

யாதொரு சுகமானது இந்த இந்திரியங்களுக்கு எட்டாததாய் அளவு இல்லாத இன்பமாய் இருக்குமோ, யாதொரு சுகத்தைச் சென்று அடைந்தோர் பின்னர் அதில் நின்றும் மாறுபடார்களோ, யாதொரு சிறப்பைப் பெற்றவர் இதற்குச் சமமானதும் அதிகமானதும் ஆன பேறு வேறு ஒன்று உண்டு என்று கருதார்களோ, யாதொரு சுகமானது இப்புத்தியைக் கவரும் படியான பொருளாய் நிற்குமோ அதன்கண் நிலையாக நின்றோர்.

வஞ்சர் வேல்கொடு மார்பின் எறியினும்
எஞ்ச வேதழல் மூடி எரியினும்
நஞ்சின் ஆர்அழல் நாகம் நலியினும்
அஞ்சி டார்அது ஆனந்தம் ஆவதே. (17)

வஞ்சகர் ஆனோர் வேல்கொண்டு மார்பிலே எறிந்தாலும், தாம் குறைவு அடையுமாறு தீ தம்மைச் சூழ்ந்து எரிந்தாலும், நஞ்சுடைய நாகம் தீண்டினும் அஞ்சிடார். அந்நிலைகளிலும் கூட அவர்களுக்கு ஆன்ம சொரூப ஆனந்தம் குறையாது விளங்கும்.

போகம் மாய்த்துப் புலன்களைப் போக்குஅறுத்து
ஆகம் ஆம்மெய் அறிவிடையே அந்த
வேகம் மாய மனத்தினை மெல்லவே
ஏகம் ஆக இருத்துஇக லாதுநீ. (18)

அருச்சுனா, அனைத்து உலக இன்பங்களையும் நீக்கி, இந்திரியங்கள் புறச்செய்திகளின்பால் போவதை மனத்தினால் தடுத்து, உண்மை வடிவான ஆன்மாவின் கண்ணே அந்த மனத்தினை வேகம் கெட, உன்னைப் பகையாமல் சிறிது சிறிதாக உறுதியுடன் நீ ஐக்கியமாக இருத்துக.

வாங்கி ஐம்பொறி நின்ற மனத்தினை
நீங்கி டாவகை நின்உள் இருத்தியே
தீங்கு யாவையும் சிந்தை செயாமையாம்
பாங்கு யாதுஅது வேபயில் வாயரோ. (19)

ஐம்புலன்களில் அலைந்து திரிகின்ற மனத்தினை வைராக்கியத்திற்கு உரிய சாதனங்களால் உள் இழுத்து நித்திரை அடையாதபடி உன் உள்ளத்தில் இருத்தி, யோக சமாதிக்கு யாதொரு சிந்தனையும் துன்பம் தராதவாறு செய்து கொள்ள ஏதுவான பயிற்சி எதுவோ அச்சாதனத்தையே மேற்கொள்ளுவாய்.

தேறு நெஞ்சினன் ஆய்த்தன் செயல்அலால்
வேறு கண்டுஅறி யாமெய் அறிவினால்
ஊறுஇல் இந்த உடம்புடன் வேறுபெற்று
ஏறி நின்றவ னேஇன்பம் எய்துவான். (20)

தெளிந்த சித்தம் உடையவனாய், தன் செயல் மாத்திரம் அன்றி வேறு ஒன்றைக் கற்பித்து அறியாத தத்துவ ஞானத்தினால் இடையூறு ஒன்றும் இல்லாமல், இந்த உடம்புடனே இதற்கு விலட்சணமான பிரம்மத்தை அடைந்து, ஞான பூமியின் முடிவில் நிற்பவனே பேரின்பத்தை அடைவான்.

இழியாது இந்த யோகத்தை என்றும் தலைநின் றவன்என்றும்
அழியா இன்பத் தினைஇன்பத் தாலே அடையும் அதுநிற்க
ஒழியா எல்லா உயிர்களும்தன் உள்ளே காணும் அவற்றுள்ளே
கழியாது எங்கும் தான்நின்ற பரிசும் தெரியக் காணுமால். (21)

மனச்சலிப்பால் அடிக்கடி யோகத்தில் இருந்து இறங்கி விடாமல் இந்த யோகத்தில் முதன்மையாய் நின்றவன் எப்பொழுதும் கெடாத பேரின்பத்தைச் சர்வ சாதாரணமாகவே அடைவான். அப்படி பேரின்பத்தில் நிலைபெற்றவன் மற்ற எல்லா உயிர்களும் தன் ஆன்மாவின் உள்ளே இருப்பதாகப் பார்ப்பான். அச்சர்வ பூதங்களின் உள்ளே நீங்காமல் எங்கும் தான் நிற்கின்ற தன்மையும் தெரியக் காணுவான்.

யாவன் ஒருவன் என்னைஎல்லா உயிர்கள் இடையும் என்னிடையே
மேவ எல்லா உயிர்களையும் வேறுஆ காதே மெய்காண்பான்
தேவர் பகைமுன் செகுத்தோனே அவன்யா தேனும் செய்திடினும்
ஆவ அவன்ஆ கின்றேன்யான் அதுநீ ஏதும் ஐயுறேல். (22)

தேவர்களின் பகைவர்கள் ஆகிய அசுரர்களை முன்னர் அழித்த அருச்சுனா, எந்த யோகி ஆனவன் என்னை எல்லா உயிர்கள் இடத்திலும் என்னிடத்தில் உள்ள எல்லா உயிர்களையும் வேறு வேறாகக் கருதாமல் ஒன்றாகவே பார்க்கின்றானோ அந்த யோகி எவ்வகைப் பட்ட செயல்களைச் செய்யினும் ஆத்ம வடிவான யான் அவன் ஆகின்றேன். அதனில் நீ சிறிதும் சந்தேகம் அடைய வேண்டாம்

இடர்ஆ னதுதான் இன்பம்தான் யாவர்க் கேனும் ஆயிடுமேல்
படரா நின்ற அவைதானும் உறுவான் பரம யோகிஎன்பான்
சுடரா நின்ற வடிவேலோய் துணிநீ என்று துழாய்அலங்கல்
அடரா நின்ற நெடுமுடியோன் அருளிச் செய்ய அவன்உரைப்பான். (23)

துன்பமும், இன்பமும் யாவர்க்கேனும் வருமானால் அவற்றைத்தான் அடைந்தது போல அடைபவன் பரம யோகி. ஒளி பொருந்திய கூர் வேலை உடைய அருச்சுனா நீ உறுதி

செய்து கொள்க என்று துளசி மாலை நிறைந்த நீண்ட முடியுடைய கண்ண பெருமான் உபதேசித்திட, அது கேட்ட அருச்சுனன் வினவத் தொடங்கினான்.

**எல்லா உயிரும் ஒன்றுஆகப் பார்ப்பது யோகம் எனஉரைத்தாய்**
**மல்ஆர் தோளாய் இதற்குநிலை காணேன் மனம்ஆ கின்றஇது**
**நில்லா இயற்கைத் தாய்ப்புலனைக் கலக்கும் அதனை நிலைநிறுத்தல்**
**ஒல்லாது எனவும் காற்றுஅடக்கற்கு ஒக்கும் எனவும் உணர்கின்றேன். (24)**

வலிமையான தோளை உடைய பகவானே, அனைத்து உயிர்களையும் ஒன்றாகப் பார்ப்பதே யோகம் என்று நீ சொன்னாய். இதற்கு நிலையான ஒன்றை என்னிடத்து நான் காணவில்லை. மனம் என்று சொல்லப்படும் இது சஞ்சல இயல்பு உடையதாய் உடலில் உள்ள இந்திரியங்களைக் கலங்குமாறு செய்கின்றது. அம்மனத்தை நிலையாக நிறுத்துதல் இயலாதது எனவும் அது காற்றை வீசாமல் நிறுத்துதற்கு ஒப்பு ஆகும் என்றும் உணர்கின்றேன்.

**இவ்வகை விசயன் கூற மாயவன் இயம்பு கின்றான்**
**ஐவகைப் புலனும் நெஞ்சும் அடக்குகை அரிதுஆ னாலும்**
**உய்வகை யோகம் யாவும் முயற்சியி னாலும் ஒவ்வா**
**ஐவகைப் புலன்செய் இன்பம் அனைத்தையும் வெறுத்த லானும். (25)**

இவ்வாறு அருச்சுனன் மறுத்து உரைக்க மாயவன் அதற்குச் சமாதானம் சொல்லத் தொடங்கினான். ஐந்து பகுதிகளான இந்திரியங்களையும், அந்தக் கரணத்தையும் வேண்டாது அடக்கும் தன்மை அரியது என்பதற்குச் சந்தேகம் இல்லை ஆயினும் ஒருவன் தான் கடைத்தேறக் கருதி அனைத்து யோகப் பயிற்சிகளாலும், பொருந்தாத ஐந்து பகுதிகளை உடைய இந்திரியங்களால் ஏற்படும் இன்பங்கள் அனைத்தையும் வேண்டாது ஒழிக்கும் வைராக்கியத்தினாலும்.

**வெய்ய நெஞ்சம் அடங்கிடும் வேறுஇதற்கு**
**ஐயம் இல்லைஎன் றேஅறி யாதலால்**
**பைய வேக ரணம்பதி னான்கையும்**
**கைக டந்தவர் யோகமும் கைகண்டார். (26)**

கொடிய அந்தக்கரணம் இந்திரியங்களுடன் பயிற்சியால் அடங்கிடும். ஆகவே வேறு சந்தேகம் இல்லை என்று அறிக. ஆதலால் மெதுவாகக் கரணம் பதினான்கையும் அடக்கியவர் எவரோ அவரே யோகம் கைவரப் பெற்றவர்.

**என்று கூற விசயன் இயம்புவான்**
**நின்று யோகத் திலேநெடு நாள்எலாம்**
**பொன்றும் காலத்து அயர்ந்துஉயிர் போயினால்**
**சென்று நற்கதி யேஅன்று சேருமோ. (27)**

என்று பகவான் அருளிச் செய்ய விசயன் வினவத் தொடங்கினான். வாழ்நாள் முழுதும் யோகத்திலே சிரத்தையோடு கூடி நின்று மரணம் அடையும் பொழுது ஞானத்தை மறந்து உயிர் நீங்கினால் அப்போது அவன் நற்கதி அடைவானோ? (அன்றியும், துர்கதி அடைவானோ?)

**யோகம் மேவ வினைகள் ஒருவினான்**
**மோகம் மேவலின் யோகம் முடிந்திலன்**
**ஏகமே இருபாலும் விடாநிற்க**
**மேக மேஎன வீய்ந்து கழியுமோ. (28)**

ஞான சித்தியின் பொருட்டுக் கர்ம உபாசனைகளில் இருந்து நீங்கியவன் மோகம் உடைமை காரணமாக யோக சித்தி அடைய மாட்டான். ஒன்றானவனே, கர்மம், ஞானம் ஆகிய இரண்டையும் இழந்து நிற்பவன் மேகம் மழை பெய்யாமல் போவது போல அழிந்து ஒழிவானோ?

மையல் இதுஎன் மனத்தினில் மற்றுஇந்த
ஐயம் அறுக்க வல்லார் இல்லை நீயன்றி
உய்ய இதனை உரைஎன்ன யோகத்தின்
மெய்யன் இதனை விரிய உரைக்கின்றான். (29)

எனது மனத்தில் உள்ள மயக்க வடிவான சந்தேகம் இதுவே. இதனைப் போக்க வல்ல திறமுடையவர் உம்மை அன்றிப் பிறிது ஒருவர் இல்லை. நான் கடைத்தேற இச்சந்தேகத்திற்குரிய விடையை எனக்கு உரைத்து அருள்வீர் என்று அருச்சுனன் கேட்க யோகத்தின் உண்மைகளை அறிந்த பகவான் அதற்குரிய விடையை விரித்து உரைக்கலானான்.

பொய்மை அடையாப் புலன்உடை மாந்தர்கள்
இம்மை இடையும் மறுமை உலகத்தும்
வெம்மை அடைகிலர் மெய்மைவிடார் என்றும்
செம்மை தெளிஇன் னும்செப்பு தும்கேளாய். (30)

அருச்சுனா, பொய்மை அடையாத அறிவுடைய யோகியர் இம்மை உலகத்தும், மறுமை உலகத்தும் எப்போதும் உண்மையைக் கை விடாத காரணத்தால் அழிய மாட்டார். செம்மையாக இதனை அறிந்து தெளிவடைக. மேலும் கூறுகிறேன் கேள்.

யோகம் முடியாது இடையே இறந்தவன்
யாக வினைபல செய்துஆங்கு இசைந்திடும்
சோகம்இல் நாடுஎய்தித் துன்பம் தொடராதே
போகம் நுகர்ந்துபல் காலங்கள் போயபின். (31)

தான் தொடங்கிய யோகமானது நிறைவேறாமல் இடையில் மரணம் அடைபவன் அசுவமேதம் முதலிய வேள்விகளைச் செய்து புண்ணியர்கள் அடையும் பிரமலோகத்தை அடைந்து அங்கே துன்பம் இன்றி இன்பங்களை அனுபவித்துப் பிரமாவின் வாழ்நாள் வரை வாசம் செய்து, பல காலங்கள் சென்றபின்.

சிறந்த அரசர் திருக்குலத்து ஆதல்
அறம்தரு யோகிகள் தம்குலத்து ஆதல்
பிறந்து பெறுவதுஎல் லாம்எய்திப் பின்னும்
மறந்த யோகம் மகிழ்வுடன் எய்தும். (32)

செல்வம் முதலியவற்றால் சிறந்த அரசர்களின் திருக்குலத்திலாவது, அறமுறைப்படி வாழும் யோகிகள் கூட்டத்திலாவது பிறந்து அடையத் தக்கன எல்லாம் அடைந்து, பின்னரும் முன் பிறப்புக்களில் கடைப்பிடித்து மரண காலத்தில் மறந்த யோகத்தை மகிழ்வுடன் அடைவான்.

கொண்டு பயிலும் குணம்இலன் ஆகிலும்
உண்டு தெளிவுஎன்று உணர்ந்த யோகந்தான்
பண்டு பயின்ற பயிற்சியி னான்தனைத்
தண்டுதல் இன்றிமுன் தானே தலைப்படும். (33)

*சாதனங்களைக் கொண்டு பழகும் குணம் இல்லாதவன் ஆயினும், பிரம்ம ஆன்ம ஐக்கியம் உண்டு என்று குருவினாலும் சாத்திரங்களாலும் அறிந்து மேற்கொண்ட முன் யோகப் பயிற்சியானது, முன்பு பழகிய பழக்கம் உடைய யோகியை விட்டு விலகாமல் தானே அவனுக்கு வசமாகும்.*

அனைய யோகத்தை ஆற்றுவன் என்று
நினையும் அவனும் நெறிபிற ழாமல்
வினைகள் பலசெய்து வேள்வி முடித்தான்
அணையும் கதிமேல் கதிபெறு வானால். (34)

*சிறந்ததான யோகத்தில் பயிற்சி மேற்கொள்வேன் என நினைக்கும் யோகியும், சுருதி நெறிக்கு வேறுபடாமல் கர்மங்கள் பலவும் செய்து வேள்வியை முடித்தவன் அடையும் கதிக்கு மேலான கதியைப் பெறுவான்.*

நீடும் மனநிலை நின்றிலன் ஆயினும்
ஓடும் வகையால் விடாதே உழன்றவன்
பாடும் பவங்கள் பலகடந் தாயினும்
வீடும் பெறும்இன்னும் வேறும் சிலகேளாய். (35)

*பொருள்களைப் பற்றி நீள நினைக்கும் மனமானது நிலையாக நிற்கப் பெறாதவன் ஆனாலும் அது ஓடும் காரணங்களால் அதனை ஓட விடாமல் முயல்கின்ற யோகியானவன் சிரவணாதி செய்து பல பிறவிகளைக் கடந்தேனும் வீட்டுலகப் பேறு பெறுவான். மேலும் வேறு சில உள்ளன. அவற்றையும் கேளாய்.*

எல்லாத் தவமும் இயற்றிநின் றோனினும்
எல்லாக் கலைகளும் கற்றுஉணர்ந் தோனினும்
செல்லாக் கருமம்எல் லாம்செய் தவனினும்
நல்லான் வலியோகி நீஇது நண்ணுவாய். (36)

*தவங்கள் அனைத்தையும் செய்து நின்றவனினும், அனைத்து நூல்களையும் கற்றுணர்ந்த ஞானியினும், அனுபவியாமல் நீங்காத கர்மங்களைச் செய்தவனினும், தத்துவ ஞான வலிமை உடைய யோகியே மேலானவன் என்பது எனக்குச் சம்மதம். ஆதலால் நீ இப்படிப் பட்ட யோகத்தை அடையக் கடவாய்.*

இருவகைய வினைஅறுக்கும் யோகிகள்எல் லார்களினும்
மருவஅரிய மனத்தினையும் அன்பையும்என் பால்வைக்கும்
ஒருவனுமே யான்உவக்கப் படுகின்றான் எனஉரைத்தான்
அருஎனஅன்று உருஎனமுன்பு ஆராலும் அறிவுஅரியான். (37)

*அருவம் என்றோ அல்லது உருவம் என்றோ எவராலும் அறிவதற்கு அரியவரான பகவான், புண்ணிய பாவம் என்னும் இருவகையான வினைகளை அழிக்கும் யோகிகள் அனைவரினும் மனத்தினையும், அன்பையும் பொருந்துதற்கு அரிய பரம்பொருள் ஆன என்னிடம் வைக்கும் ஒரு ஞானயோகி என்னால் உவக்கப் படுகின்றான் என்று அருளிச் செய்து, ஆதலால் நீ இத்தகைய யோகத்தை அடைவாய் என்றார்.*

**ஆறாவது யோக அத்தியாயம் நிறைவுற்றது.**

# ஏழாவது மாயா ரூப் அத்தியாயம்

உய்யஅன்பினொடும் என்னையே அடையும்யோகமே பயிலும்யோகிதான்
ஐயம்இன்றிஎனை யேஅறிந்திடும் அதுஐயநீயும் அறிவாய்என
வையம்உண்டுமறை நீர்மைஉண்டுஇடையர் மாதர்உண்டிட மலர்ந்திடும்
செய்யதண்பவள வாய்திறந்துதிரு மாதுகேள்வன்இவை செப்புவான். (1)

தான் உய்வதற்காக அன்போடும் என்னையே அடையும் யோகம் பயில்கின்ற யோகி சந்தேகம் இன்றி என்னையே அடைவான் அருச்சுனா, அதனை நீ கவனத்துடன் கேள் என்று பூமியை உண்டு, வேத வாக்கியங்களையும் உண்டு இடைக்குல மாதர் முத்தமும் உண்ணும் படியாக முகம் மலர்ந்து சிவந்த குளிர்ச்சி பொருந்திய பவள வாயினைத் திறந்து இலக்குமி கணவனான கண்ண பெருமான் அவற்றை அருளிச் செய்கின்றான்.

மாயும்மாயைமறை யாதநெஞ்சின்இடை மற்றுஎன்உண்மையினை வாய்மையால்
ஏயும்ஆறுஉற அறிந்துஉளோர்கள்அறி யாததுஒன்றும்இலை என்னினும்
மாயும்மானுடர் அநேகர்பால்ஒருவன் என்னைஆயும்மனம் வைத்துளான்
ஆயும்மானுடர் அநேகர்பால்ஒருவ னேஅறிந்துமுடி வான்ஐயா. (2)

மறையும் மாயையினால் மறைக்கப் படாத மனத்திலே, மாயைக்கு வேறாய் நிற்கும் என் முழுமையான வடிவினை உண்மையில் பொருந்தும் வழி அறிந்தவர்கள் அறியாதது ஒன்றும் இல்லை என்று சொன்னாலும் மாண்டு போகும் அநேக மானிடர்களுக்கு உள்ளே ஒரு மானிடனே என்னை ஆராயும் மனம் வைத்து உள்ளான். அருச்சுனா என்னை ஆராயும் அநேக மானிடர்களுக்குள் ஒருவனே என்னை உண்மையாகக் காணும் பேறு பெறுவான்.

மண்ணும்நீரும்எரி தீயும்வாயுவும்அவ் வானினோடுமனம் புந்தியும்
எண்ணும்நீர்மைகளில் யான்எனும்பதமும் என்னும்எட்டும்இவை அன்றியே
பண்ணும்நீர்மைகளில் மேலதாய்உலகில் யாவையும்கொடு பரித்துஉடல்
கண்ணும்நீடுஉயிரும் ஆகிஎன்னுடைய மாயைநிற்பதுகை வேலினாய். (3)

கையில் உள்ள வேலை விடாத அருச்சுனா, மண்ணும், நீரும், தீயும், காற்றும், வானமும், மனமும், புத்தியும், கருதப்படும் உடலாதி இந்திரியங்களில் நான் என்று அபிமானிக்கும் அகங்காரமும் என்று சொல்லும் இவ்வெட்டும் எண்வகை வேறுபாடுகளை உடையதாய் இருப்பது அன்றி, இவ்வெட்டு வகைக்கும் விலட்சணமாய் உலகிலே உள்ள அனைத்தையும் தான் எடுத்துத் தரித்து உடலின்கண் நிலைத்த உயிர் வடிவமாய் என்னுடைய மாயைதான் நிற்கிறது.

கண்ணினால்தெரியல் உற்றுஉணர்ந்திடுஇவ் இரண்டினாலும்வரு காரியம்
மண்ணில்நிற்ப நடப்பவென்றபொருள் யாவும்மற்றஇரு பான்மையே
நண்ணிநிற்பது உலகு ஆதலால் உலகின் நாசஉற்பவமும் நான்அலாது
எண்ணின்மற்றுஅறிவது இல்லைஎப்பொருளும் என்னில்அந்நியம்அது
இல்லையால். (4)

*மண்ணுலகம் முதலியவற்றில் நிற்கின்ற நடக்கின்ற பொருள்கள் யாவும், முன் சொன்ன இருவகைப் பொருள்களாலும் வருகின்ற காரியங்களாம் என்று உனது அறிவினால் ஆராய்ச்சி செய்து உறுதிப்படுத்துக. உலகம் தனக்குக் காரண வடிவாகச் சார்ந்து நிற்பது ஒன்றிற்கு ஒன்று வெவ்வேறு இயல்புடைய இருவகை மூலங்களையே. ஆதலால் உலகின் அழிவிற்கும், தோற்றத்திற்கும் நான் அல்லாது ஆராயினும் சுதந்தரமான காரணம் கொஞ்சமும் இல்லை. எவ்வகைப்பட்ட பொருள்களும் என்னின் வேறானது அல்ல.*

**வேதம்ஆகிநிகழ் யான்அலாதுஉலகில் என்னின்வேறுஎன விளங்கிடும்**
**பூதம்ஆனவை பொறுக்கவேறுபொறை யாளர்இல்லைஎது போல்எனில்**
**ஓதுமாமணி அநேகம்ஊடுஉருவு கோவைநூலின்ஒரு பான்மைபோன்ம்**
**பேதம்ஆனபொருள் தோறும்நான்மருவி நின்றவாறுநனி பேசுகேன். (5)**

*வேத காரணனாய் விளங்கும் நானே அல்லாமல், உலகத்தில் என்னை விட அந்நியம் என்று சொல்லும்படி விளங்கிடும் பூதங்களைத் தாங்க வேறு தாங்குகிறவர் இல்லை. இது எது போல என்றால் பெருமை பொருந்திய மணிகள் பலவற்றை ஊடுருவிய கோவை நூலினது ஒரு தன்மை போலாம். இவ்வாறு ஒன்றற்கு ஒன்று வேறான பொருள்களில் எல்லாம் நான் பொருந்தி நின்று அவைகளைத் தரிக்கும் தன்மையை விரிவாக இனிக் கூறுவேன்.*

**திரியும்இரு கதிரின்இடைத் திகழ்ஒளிநான் திருமறையின்**
**அரியமுதல் எழுத்துஅதுநான் ஆடவர்பால் ஆண்மையும்நான்**
**விரிபுனலில் சுவையதுநான் மேதினியில் வாசமும்நான்**
**எரியில்வரு வெம்மையும்நான் ஆகாசத்து எழும்ஒலிநான். (6)**

*வானிலே திரியும் சந்திர சூரியரிடத்து விளங்கும் ஒளி நான் ஆகின்றேன். அழகிய வேதத்தின் பிரணவப் பொருளும் நான் ஆகின்றேன். அனைத்து ஆடவர்கள் இடத்திலும் ஆண்மையாக விளங்குபவனும் நானே. விரிந்து பரந்து கிடக்கும் தண்ணீரின் சுவையும் நான் ஆகின்றேன். மண்ணில் நறுமணமாகவும் நானே இருக்கின்றேன். நானே நெருப்பில் தோன்றும் சூடாகவும் இருக்கின்றேன். வானத்திலே எழுகின்ற ஒலியாக இருப்பதும் நானே.*

**ஆன்றஅறிவு உடையோர்பால் அறிவுநான் அடங்கினர்பால்**
**வான்தவம்நான் வளர்நன்மை பூண்டார்பால் வண்புகழ்நான்**
**தோன்றும்மிகு திறலோர்பால் கரமம்உறாத் தொல்வலிநான்**
**ஊன்றுபொருள் அனைத்தினுக்கும் உயிர்ஆகி உள்ளேன்நான். (7)**

*மாண்பு சால் அறிவு பொருந்திய ஆன்றோர்பால் அந்த அறிவாகவே நான் இருக்கின்றேன். மனத்தை அடக்கிய தவமுனிவர்பால் அவருடைய தவமாக நான் இருக்கின்றேன். மெய்யான புகழ் உடையவரிடம் நான் அப்புகழாகவே இருக்கின்றேன். மிக்க வலிமை உடையோர் இடத்துக் காமங்கள் உண்டாகாது காக்கும் வன்மையும் நான் ஆகின்றேன். நிலையான அனைத்து உயிர்களுக்கும் உயிராக நான் இருக்கின்றேன்.*

**மூன்றுகுண வகைஆகி முடிகின்ற பொருள்முழுதும்**
**தோன்றுவதும் என்னிடையே எனைத்தொடர்ந்தே நிற்பதுவும்**
**ஆன்றவமற்று அவற்றினிடை யான்தோன்றேன் அவற்றினுக்குச்**
**சான்றுஎனநிற் பேன்அல்லால் அவைசார்ந்து வாழேன்நான். (8)**

*சாத்துவிகம், இராசசம், தாமசம் என மூன்று குணங்களை உடையனவாய் முடிகின்ற அனைத்து உயிர்களும் தோன்றுவது என்னில் இருந்துதான், அவை என்னைப் பற்றியே*

இருப்பதையும் அறிக. அறிவுடைய அருச்சுனா அந்தப் பொருள்களில் இருந்து நான் தோன்ற மாட்டேன். அந்தப் பொருள்களுக்குச் சாட்சியாக நிற்பேனே அன்றி அவற்றை ஆதாரமாகக் கொண்டு நான் வாழ மாட்டேன்.

மைக்குணங்கள் எனமுனம்யான் வகுத்துநினக்கு உரைத்திட்ட
இக்குணங்கள் மூன்றாலும் மயக்கப்பட்டு அறிவுஇழந்து
தொக்குஇணங்கு கின்றஉயிர் இவைஎல்லாம் சுடர்வேலோய்
அக்குணங்கள் கடந்தஎனை அறியுமோ அறியாவால். (9)

ஒளி விடும் வேலை உடைய அருச்சுனா, இருள் போல மயக்கத் தக்க குணங்கள் என்று நான் உனக்கு முன்னம் வகுத்துக் கூறிய இந்தக் குணங்கள் மூன்றினாலும் மயங்கி, இது நிலைத்தது, இது நிலையாமை உடையது என்று உணர்கின்ற அறிவை இழந்து உடல்களில் ஒன்று பட்டு இருக்கின்ற இவ்வுயிர்கள் முழுவதும், அம்முக்குணங்களையும் கடந்த என்னை அறியுமோ? அறிய மாட்டா என்க.

இவ்வகைய குணம்மூன்றின் இயற்கைத்துஆய் யாராலும்
செய்வகையது அல்லாஎன் மாயையினால் திகைப்புஒழிந்துஇங்கு
உய்வகையது அரிதுஎவர்க்கும் என்னையே எப்பொழுதும்
மெய்வகையோடு அடைகின்ற மனம்இலரேல் வேல்வேந்தே. (10)

வேலை உடைய அருச்சுனா, இத்தகைய முக்குணங்களின் இயல்பை உடைத்து ஆனதாய், யாராலும் செய்யும் தன்மை அல்லாத என்னுடைய மாயையினால் மயங்கும் மயக்கம் ஒழிந்து, இங்கு சம்சாரத்தில் பிழைக்கும் தன்மை யாவர்க்கும் அரிது ஆனது. என்னையே எப்பொழுதும் மெய்யன்புடன் அடைந்து வழிபடும் மனம் இல்லாதவர் ஆயின்.

ஊழாலே வரும்இந்த மாயையினாலே உள்ளம்
பாழ்ஆக அறிவுஇங்கே பறிஉண்டு நெறிநின்றோர்
வீழாத தீவினையே வினைஆக விளைக்கின்றார்
கீழ்ஆனோர் எனைஅடையார் அடைவாரும் சிலர்உளர்கேள். (11)

விதியின் காரணமாக வரும் இந்த மாயையினாலே உள்ளம் பாழ் ஆகும்படி அறிவானது இங்கே பறிக்கப் பட்டு, அதன்வழி நிற்பவரும், அழியாத பாவத்தையே தம் தொழிலாகக் கொண்டுள்ளவரும், மனிதர்களில் கீழ் ஆனோரும் ஆகிய இவர்கள் என்னை அடைய மாட்டார். அப்படி அடைபவரும் சிலர் உள்ளனர். அவரைப் பற்றி இனிக் கூறுவேன்.

செல்வம் விரும்பினர் செல்லல் அடைந்தோர்
அல்லல் கெடுக்கஎன் அன்புசெய் வோர்கள்
நல்லது அறிந்தமெய்ஞ் ஞானிஇந் நால்வர்
வல்லதில் என்னை வணங்கு தவத்தோர். (12)

செல்வத்தை விரும்பியவரும், ஆபத்தை அடைந்தவரும், பிறவித் துன்பம் கெடும் பொருட்டு என்மேல் பற்றுடை யோரும், உண்மை வடிவத்தைத் தரிசித்த மெய்ஞ்ஞானியும் ஆகிய இந்நால்வர் தமது சக்திக்கு ஏற்றவாறு என்னை வழிபடும் உயர் தவத்தினராம்.

இன்னவர் தங்களில் என்னொடும் வேறாய்
உன்னல் இலாமையின் ஞானி உயர்ந்தோன்
அன்னவன் நல்லன் எனக்குஅவ னுக்கே
நன்னலன் ஆகுவன் நானும் நலத்தோய். (13)

நன்மை கருதும் அருச்சுனா, முன் சொல்லிய நால்வர் உள்ளே பிரம்மம் ஆகிய என்னொடும் தன்னை வேறாய் நினைத்தல் இல்லாமையால் ஞானியே உயர்ந்தவன். அந்த ஞானி என் ஆத்மாவின் வடிவம் ஆதலால் எனக்கு மிகவும் பிரியம் ஆனவன் ஆவான். அந்த ஞானிக்கு நானும் பிரியம் ஆவேன்.

ஓதஅரு ஞானிஎன் உண்மையின் உள்ளே
ஏய்தலி னால்அவன் நான்என வேஆம்
ஆதலும் இங்ஙன் அநேகம் எனச்சொல்
காதல் இறந்த பவங்களி னால்ஆம். (14)

சிறப்பித்துச் சொல்வதற்கு அரிய ஞானி, என்னையே எல்லாவற்றினும் உயர்ந்ததாக எண்ணி, என் உண்மை வடிவத்தைப் பொருந்துதலால், அந்த ஞானி ஆகிய பக்தன் எனது ஆன்மா என்றே எனக்கு நிச்சயம். கர்ம பலங்களில் ஆசை ஒழிந்த அநேக பிறப்புக்களின் முடிவில் இப்படிப் பட்ட ஞானி ஆதலும் அமையும்.

விரிய உணர்ந்த விழுப்பொருள் எல்லாம்
உரியஎன் அன்றி இலாத ஒழுக்கம்
தெரிய அறிந்துஎனை யேசெறி கிற்பான்
அரியன் அவன்பெறு தற்குஅயில் வேலோய். (15)

கூரிய வேலை உடைய அருச்சுனா, சாத்திரங்களாலும் இந்திரியங்களாலும் விசாலமாக அறிந்த மேன்மையான பொருள்கள் முழுவதற்கும் நிலைக்களன் என்று சொல்லுதற்கு உரிய என்னை அன்றி இல்லாத தன்மையைத் தெளிவாக அறிந்து என்னையே வேறுபாடின்றிப் பொருந்தி நிற்பவன் எவனோ அந்த மகானே மனிதர்களுள் அடைதற்கு அரியவன்.

மற்ற வரும்தம் மனங்களில் வைத்த
பற்றுஅதி லேபறி உண்டுஅறிவு எல்லாம்
உற்றவை தந்திடும் தெய்வ ஒழுக்கால்
நல்தவம் நின்றுஅவை நண்ணுவர் வேலோய். (16)

வேலை உடைய அருச்சுனா, தெய்வங்களின் மேல் பற்று வைத்த பக்தர்களும் தம் மனத்திலே கொண்ட பற்றின் காரணமாக அறிவை எல்லாம் இழந்து தமக்கு வேண்டுவனவற்றைத் தரும் தெய்வ வழிபாடு ஆன அந்தத் தெய்வங்களையே வழிபடுவர்.

யாவன் ஒருத்தன் யாதுஒரு தெய்வம்
மேவ அருச்சனை அன்பின் விளைப்பான்
ஆவல் சலிப்புஅறும் அன்பு அவனுக்கே
ஆவ துமுற்றும் அளித்திடு வேன்நான். (17)

எவன் ஒருவன் அன்பினால் ஏதேனும் ஒருதெய்வத்துக்குப் பொருந்துமாறு அருச்சனை செய்வானோ அவனுக்கு வேண்டுவதான குற்றமில்லாத அன்பினை அத்தெய்வத்தினிடத்து மேலும் மேலும் உண்டாகுமாறு நானே முழுவதுமாகத் தருவேன்.

அளித்தஅவ் அன்பொடும் அத்தெய்வம் நாளும்
களித்து வணங்கினர் காதல எல்லாம்
வெளிப்பட முற்றும் அளித்திடு வேன்நான்
ஒளிப்புஅரி தாம்உரும் அஞ்ச உடன்றோய். (18)

ஒளித்தற்கு அரியதாகிய இடியும் அஞ்சும்படி போரிடும் அருச்சுனா, என்னால் கொடுக்கப்பட்ட அன்போடு அவ் அந்நிய தெய்வங்களை உண்மையான தெய்வம் என்று

நாளும் மகிழ்ந்து வணங்கினோருடைய விருப்பங்களை எல்லாம் முழுதும் வெளிப்படுமாறு நானே அளித்திடுவேன்.

சிந்தையின் இத்தெய்வம் மெய்த்தெய்வம் என்றே
முந்த அருச்சனை செய்து முடிக்கும்
மந்த மனத்தர் பெறும்பயன் வாளா
அந்தம் உடைத்து அது அநித்தமும் ஐயா. (19)

அருச்சுனா, தமது சிந்தையின் கண்ணே இத்தெய்வங்களை எல்லாம் உண்மையான தெய்வம் என்று கருதி முன்னே வழிபாடு செய்து நிறைவேற்றும் அற்ப மனங்கொண்ட அந்நியக் கடவுளை வழிபடும் பக்தர்கள் அடையும் பயன் ஆனது வீணாய் நாசம் அடைவதோடு அவர்கள் வணங்கும் அத்தெய்வங்களும் அழியும்.

தான்அந்தம் இலிஉவமை தரநின்று தாவஅரிய
ஆனந்த உருவம்என எனைஒன்றும் அறிவதுஇலர்
கோன்நந்தன் மகன்அரசர் குலமைந்தன் இவனும்எழில்
ஆனந்தம் இலிஒருவன் இவன்என்பர் அறிவிலிக ள். (20)

அருச்சுனா, அறிவற்றவர், கடவுள் அழிவற்ற நிலைத்த வடிவினன், ஒன்றோடு ஒப்பிடும் படி நின்று ஒருவரால் பற்றுதற்கு அரிய ஆனந்த வடிவுடையவன் என்று என்னைப் பற்றிச் சிறிதும் அறிந்திலர். நந்தகோபன் மகன் அரச குலத்தில் பிறந்த வாசுதேவ புத்திரன் ஆகிய இந்தக் கண்ணன் சிறந்த ஆனந்தம் அற்றவன் உயிர்களுக்குள்ளே சிறப்பான ஓர் உயிர் என்று என்னைக் கருதுவர்.

மருவுற்ற பிரகிருதி அதில்உற்று மறைவன்எழில்
ஒருவர்க்கும் அறியும்வகை வெளிநிற்பது இலைஉலகில்
வெருவுற்ற பெருமயலின் மனம்உற்று விழிமறைய
அருவுற்ற எனைஉலகம் அறிகிற்பது இலைஅடைய. (21)

அருச்சுனா, பொருந்தி உள்ள மாயையில் நான் பொருந்தி நன்றாக மறைந்தவன் ஆகின்றேன். இதனால் எனது அழகிய வடிவம் ஆனது யார் ஒருவர்க்கும் அறியும்படி வெளித் தெரிவது இல்லை. அன்றியும் உலகின்கண் அஞ்சத் தக்கதான பெரிய உலக விஷயங்களின் மேல் உண்டான மயக்கத்தில் மனம் ஈடுபட ஞானக்கண் மறைகின்றது. அவ்வாறு மறைந்தமையால் பிறப்பும் இறப்பும் அற்றவனான என்னை உலகம் முழுவதும் அறிவது இல்லை.

போனவை இனிமேல் புகுதநின் றவைஇப்
  பொழுதுபோ கின்றவை அனைத்தும்
யான்அறிந்து இருப்பன் யாவும்ஆம் என்னை
  உலகின்மற்று யாவரும் அறியார்மானவெம்
சிலையாய் வேண்டல்வேண் டாமை
  தன்னிலே வருகுண மயக்கால்
தான்அமைந்து உருவாய்ச் சனித்திடும் பொழுதே
  தந்தம்மெய் அறிவு சார்ந்திட லால். (22)

மாண்புடைய வெம்மையான வில் கொண்ட அருச்சுனா, முன்சென்றவைகளும், இனிமேல் வருபவைகளும், இப்பொழுது போகின்றவைகளும் ஆகிய அனைத்தையும் நான் அறிந்து இருக்கிறேன். எல்லாம் ஆகிய என்னை உலகத்தில் என்னிடத்து அன்பு இல்லாதவர்

யாவரும் அறிய மாட்டார். பருவுடலாய்ப் பிறக்கும் போது வேண்டுதல் வேண்டாமை எனும் இவற்றால் வருகின்ற குண மயக்கத்தால் அவை தத்தம் உடல் பாவனைகளைப் பொருந்துவதால் உள்ளிருக்கும் ஆன்மாவாகிய என்னை அறிய மாட்டார்.

**வியக்கமேல் முயன்ற நல்வினை மாந்தர் விரும்பலர் ஆகிமுன் செய்த**
**பயக்க மேவியதீ வினைஎலாம் அறவே பற்றுஅறப் பறிந்துமுன் போனால்**
**துயக்கமே புரியும் சோகமே முதலாம் துவந்துவ குணங்களில் தொடர்ந்த**
**மயக்கமே வலராய் ஒழுக்கமே நிலைநின்று என்னையே மனத்திடைவைப்பார். (23)**

அனைவரும் வணங்கும்படி யாதொரு பயனையும் விரும்பாதவர்களாய் அநேகப் பிறவிகளில் முயன்று சேர்த்த நல்ல புண்ணியங்களை உடைய மனிதர், முற்பிறவியில் செய்த துன்பங்கள் தரும்படியான தீவினைகளை எல்லாம் முற்றிலும் பற்றாமல் தம்மை விட்டு இனிப் போகும் ஆயின் சோகம் முதலியவற்றைத் தருகின்ற துன்பம் இன்பம் ஆகிய இரண்டின் தொடர்புகளால் மோகம் அடையாதவர்களாய் வழிபாடு செய்வதில் உறுதி உடையவராய் நின்று என்னையே மனத்தின்கண் வைத்து வழிபடுவர்.

**எறிவுஅரும் பிணிமூப்பு இறப்பொடு பிறப்புஎன்று**
**இவைகெடுத் திடல்பொருட்டு ஆகக்**
**குறிவரும் பரிசு நினைத்துமற்று எனையே**
**கூடுதல் மேவிநின் றவர்கள்**
**அறிவுஅரும் பிரமம் தன்னையும் அதனை**
**அறியும்மெய் அறிவையும் அறிவின்**
**நெறிவரும் கருமம் அனைத்தையும் அறிவர்**
**அறிந்தபின் நிகழ்வதும் கேளாய். (24)**

அருச்சுனா், ஞானத்தால் அன்றி அழித்தற்கு அரிய, பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் என்ற இவை அழியும் பொருட்டு, ஞானம் உண்டாகுமாறு எண்ணி என்னையே அடையும் பொருட்டு, பொருந்தி நின்றவர்கள் அறிதற்கு அரிய பிரம்மத்தையும், அந்தப் பிரம்மத்தை அறியும் ஞானத்தையும், அந்த ஞானத்தினால் கருமங்கள் அனைத்தையும் அறிவர். அறிந்த பின்னால் அவர்களுக்கு என்ன நிகழும் என்பதையும் கேள்.

**தேடும்பழைய அதிபூதம் அதிதெய்வத்தோடு அதிஎச்சம்**
**கூடும்பரிசு நின்றஎனை அறிவார்இந்தப் புழுக்கூடு**
**வீடும்பொழுதும் எனைமெய்யே அறிவார்என்றான் யாம்வெவ்வேறு**
**ஆடும்பழைய மாயக்கூத்து ஆட்டுவிக்கும் அம்மாயன். (25)**

நாம் வேறு வேறாக ஆடும் மாயக் கூத்தினை ஆடும் படியாகச் செய்கின்ற கண்ண பெருமான், நாம் ஆராய்ந்து அறியும் படியான அதிபூதமாகவும், அதிதெய்வமாகவும், அதி யக்ஞமாகவும் நின்ற என்னை எப்பொழுதும் சிந்தித்து நிற்பவர், புழுக்கள் நிறைந்த இவ்வுடல் அழியும் பொழுதும் என்னை உள்ளபடி அறிவார்கள் என்று அருளிச் செய்தான்.

**ஏழாவது மாயாரூப அத்தியாயம் நிறைவுற்றது.**

# எட்டாவது எழுவகை வினா உரைத்த அத்தியாயம்

அடைய ஞாலத்தை ஆர்த்துஅதில் ஆர்ப்புஉணாது
இடையர் தாம்புஇடை ஆர்ப்ப இருப்பவன்
உடைய ணாகமுன்பு ஓதின வேகொடுஅவ்
விடைஅன் ணானவன் மீள இயம்புவான். (1)

உலகம் முழுவதையும் பந்தத்தினால் கட்டி, அவ்வுலகில் தான் ஒன்றாலும் பந்தப்படாமல் இடையர் குல மக்களின் மணிக்கயிற்றினால் தன் தாய் ஆகிய யசோதை கட்டிட அகப்பட்டு இருந்த கண்ண பெருமான் குருபகவானாக இருந்து முன் பகுதியில் கூறி அருளிய பிரம்மம் பற்றிய செய்திகளில் சந்தேகம் கொண்டு போரில் காளை போன்றவனான அருச்சுனன் மீண்டும் வினவத் தொடங்கினான்.

ஆயபிர மத்தொடுஅத் தியாத்மம் அமைகருமம்
ஏயஅதி பூதம்அதி தெய்வம்அதி எச்சம்
காயம் அதில்உள்ளபரி சும்கெழுமு காயம்
வீயல்உறு போழ்தில்உனை மெய்தெளியும் ஆறும். (2)

மகத்தான அந்தப் பிரம்மம் யாது? அத்தியாத்மம் எது? விதிக்கின்ற கர்மம் என்பது எது? மேலும் அதிபூதம் என்று சொல்லப்படுவது எது? அதிதெய்வம் என்று எது அழைக்கப்படுகிறது? அதியக்ஞம் தேகத்தில் உள்ள தன்மை எப்படி? பொருந்தும் தேகமானது மரணம் அடையும் போது உம்மை உள்ளபடி அறியும் வழி யாது? என அருச்சுனன் ஏழு வகை வினாக்களை வினவினான்.

விரியஉரை செய்துஅருள வேண்டும்என மீண்டுஅவ்
வரிஅரவி லேதுயிலும் மாயவன் உரைப்பான்
அரியதுஅழி யாமைஅது அனைத்தினும் உரைக்கில்
பெரியது மொழிந்தபிர மம்பிறவும் நீகேள். (3)

விரிவாக உரைத்து அருள வேண்டும் என அருச்சுனன் வினவ, மீண்டும் வரி பொருந்திய பாம்பின் மேலே துயில் கொள்ளும் பரந்தாமன் மேற் கேட்ட எழுவகை வினாக்களுக்கும் பதில் சொல்லத் தொடங்கினான். நாம் கூறிய பிரம்மம் ஆனது ஒருவரால் எளிதிலே அறிதற்கு எளியது அன்று. இதன் அரிய தன்மையைச் சொன்னால் ஞானம், அஞ்ஞானம், காலதேச வர்த்தமானங்கள், வேறு பிற பொருள்களால் நாசம் அடையாதது எதுவோ, அதுவே அழியாமை உடைய பிரமம் எல்லாவற்றிற்கும் மேலானது. ஏனையவற்றையும் நீ கேள் அருச்சுனா.

அந்தக்கரணங் களில்நின்ற அறிவுஅத்தியாத்மம் ஆவதுதான்
இந்தப்பிறவி தனைஆக்கும் யாகம்கருமம் என்பதுதான்
நந்தற்குஅமைந்த உடம்புஅதனை நான்என்கின்றது அதிபூதம்
பந்தப்படும்இவ் உடற்குஅமைந்த புருடன்தெய்வம் எனப்படுவான். (4)

அருச்சுனா, அந்தக்கரணங்களில் பிரதிபிம்பத்து நிற்கின்ற முற்கூறிய பிரம்மம் அத்தியாத்மம் என்று சொல்லப்படுவது. எல்லா உயிர்களையும், உலகங்களையும் உண்டு பண்ணி நிலைத்திருக்கச் செய்தலாகிய யாகம், கர்மம் என்று சொல்லப்படுகிறது. அழிவதற்கு உரியதான உடல் முதலிய தோற்றத்திற்கு வந்த அனைத்துப் பொருள்களும், அந்த உடலில் நான் என்னும் அபிமானமும் அதிபூதம் என்று சொல்லப்படுகிறது. பந்தப்படுகின்ற இந்த உடலில் இருக்கும் ஆன்மாவாகிய புருடன் தான் அதி தெய்வம் எனப்படுகிறான்.

எஞ்சுதலைஇல் அதிஎச்சம் ஆகின்றேன்நான் இறக்குங்கால்
நெஞ்சுகவரும் நெறிகள்எலாம் அடைத்துநினை யப்படுவதுநான்
அஞ்சுபுலனும் பொறிஐந்தும் அடக்கிஅறிவு என்பாலதாய்த்
துஞ்சும்அவர்கள் எனைஅடைவார் எவ்வாறுஎன்னில் சொல்லக்கேள். (5)

குறைவு இல்லாத அந்தரியாமி என்னும் நானே அதியக்ஞும் ஆகின்றேன். மரண காலத்தில் சித்தத்தைக் கவரும் வழிகளை எல்லாம் தடுத்துச் சிந்திக்க வேண்டியது பிரம்மமாகிய நானே. காது முதலான ஐம்பொறிகளும் ஐம்புலன்களை நீக்கி, அறிவானது என்இடத்தில் இருப்பதாய் மரணம் அடைபவர் பிரம்மமான என் தன்மையையே அடைவர். அஃது எவ்வாறு என்று நீ சந்தேகித்தால் அதற்குரிய சமாதானம் சொல்லுகின்றேன். கேள்.

இந்த உடலம் விடும்பொழுது யாவன் யாதுஒன் றினைநினைந்தான்
அந்த அளவே அந்தப்பா வனையால் அதனை அடையுமால்
எந்தன் இயல்பே எப்பொழுதும் இதயத் திடைகொண்டு என்பாலாம்
சிந்தை யொடும்வாள் அமர்தொடங்கில் அதனால் எனையே சேருதியால். (6)

மரண காலத்தில் இந்த உடலை விடும்பொழுது எவன் ஒருவன் ஏதொரு பொருளையாவது நினைப்பவனிடம் அந்நினைப்பின் உறுதியால் அந்தப் பொருளையே அந்த அளவில் அடைவன். பிரம்மமான என் இயல்பையே எக்காலத்திலும் மனத்தே கொண்டு என்னிடம் கொண்ட சிந்தனையோடும் என்னிடம் அர்ப்பணித்த மனத்தினோடு போரிடுவதால் என்னையே அடைவாய்.

நல்ல கரும யோகத்து ஞான யோகம் அதுதனிலும்
செல்லும் மனனை மிகச்செலுத்திப் பிறிதுஒன் றினையும் சேராதார்
சொல்ல அரிய கதிரவன்மண் டலம்போல் தோன்றும் தொல்லோனை
அல்லது அடையார் அவன்இயற்கை அடையும் பரிசை அறையக்கேள். (7)

நன்கு பயில்கின்ற யோகத்திலும், ஞான யோகத்திலும் செல்லுகின்ற சித்தத்தை மிகுதியாகச் செல்லும்படி செய்து பிறபொருளை நினையாதோர் சொல்லுதற்கு அரிய சூரிய மண்டலம் போல் விளங்கும் பரம்பொருளாகிய பிரம்மத்தை அடையாதவர் யாவர். அப்பரமாத்மாவின் இயல்பையும் அதனை அடையும் விதத்தையும் இனிக் கூறக் கேள்.

எல்லாப் பொருளும் அறிவானை எல்லாப் பொருட்கும் பழையானை
எல்லா ரையும்தன் நிலைநிறுத்து வானை இரம்பச் சிறியானை
எல்லாப் பயனும் ஈவானை யார்க்கும் நினைதற்கு அரியானை
எல்லா இடத்தும் இருள்தீர்த்த இளவெங் கதிர்போல் எழுவானை. (8)

அனைத்துப் பொருள்களையும் அறிகின்றவனை, அனைத்துப் பொருள்களுக்கும் அநாதி ஆனவனை, சூரிய சந்திராதியர்கள் அனைவரையும் தன் ஆணையில் நிறுத்துபவனை நுண்பொருள்களிலும் மிக நுண்மையாக இருப்பவனை, பாவ புண்ணியச் செயல்களுக்கு உரிய பயன்கள் எத்தனை உண்டோ அத்தனையையும் தருகின்றவனை, எவராலும்

நினைத்தற்கு அரியவனை, அனைத்து இடங்களிலும் உள்ள இருளை நீக்கிக் காலையில் தோன்றும் இளஞ்சூரியன் போல் ஒளியுடன் எழுபவனை.

மருவற்கு உரிய அன்புஉடையார் மயங்கா யோக மனத்தாலே
புருவத்து இடையே தம்முடைய புரைதீர் உயிரைப் புகநிறுத்தி
உருவத் தினைவிட் டிடில்இந்த யோகத் தாலே அவனோடும்
பொருவப் படுவர் அப்பொருள்மேல் இன்னம் புகல்வன் பொருவேலோய். (9)

போர் செய்யும் வேலுடைய அருச்சுனா, பொருந்துதற்கு உரிய அன்பினை உடைய உபாசகர் மரண காலத்திலும் மயங்காத யோக வலிமை உடைய மனத்தினாலே தமது குற்றமற்ற பிராண வாயுவை, சுழிமுனை நாடி வழியாகப் புகும்படி செய்து, புருவ மத்தியில் உள்ள ஆக்ஞா சக்கரத்தில் நிறுத்தி, உடலை விட்டு வெளிப்பட்டால் இந்த யோகத்தினாலே அந்தப் பரம்பொருளோடும் பொருந்துவர். மேலும் கூறுவேன்.

யாதுஒன்றை மறைதெரிந்தோர் அழியாதுஎன்று எடுத்துஉரைப்பர்
யாதுஒன்றை அவாஅறுத்த யோகிகள்தாம் எய்திடுவர்
யாதுஒன்றை உறநினைந்தோர் காமம்முத லியஇழப்பர்
யாதுஒன்றுஅப் பரம்பொருள்ஆம் அதைச்சுருங்க இயம்புவன்கேள். (10)

யாது ஓர் ஓங்காரமான பிரம்மத்தை, வேதம் அறிந்த பெரியோர் அழியாது என்று சொல்லுவரோ, யாது ஒரு அழியாத பொருளை உலக விஷயங்களில் இச்சையை ஒழித்த யோகிகள் தம் வடிவாக அடைந்து நிற்பரோ, யாது ஒரு அழியாப் பரம்பொருளை அடைய விரும்பிய சாதகர் காமம் முதலியவற்றை இழந்து வேதாந்தப் பயிற்சி செய்வரோ, எந்தப் பொருள் ஆனது அப்பரம்பொருள் ஆகுமோ அவ்வழியாப் பொருள் பற்றிச் சுருங்கச் சொல்லுவேன் கேள்.

அஞ்சுபுலன் வழிஅவை அடைத்துஅயல் உறாதே
நெஞ்சுதனை இதயகம லத்திடை நிறுத்தி
எஞ்சுதல்இல் உயிர்வளியை உச்சியினில் ஏற்றி
உஞ்சுபுகு நெறிஇதுஎன யோகுடன் இருந்தே. (11)

செவி முதலாகிய ஐம்பொறிகளை அயலே செல்ல விடாமல், வேறு ஒன்றையும் பொருந்தாமல் மனத்தை இதய கமலத்தில் வைத்து, குறைவு இல்லாத பிராண வாயுவைத் தலை உச்சியில் ஏறச் செய்து, உலக பந்தத்தில் இருந்து பிழைக்கும் படியான வழி இதுவே என்று எண்ணி,யோகத்தோடு கூடி நின்று.

ஓதலின் இயற்கை யினொடுஓம் எனும்எ ழுத்தை
வாய்தனில் உரைக்க மனம்ஆ னதுத னித்தே
மேதகும் எனைத்தெளிய ஆவிதனை விட்டோர்
வீதல்இல் இயற்கைஎனை யேஅடைவர் மிக்கோய். (12)

அனைவரினும் மேம்பட்ட அருச்சுனா, ஓம் என்னும் பிரணவ எழுத்தை உச்சரிக்கும் இயல்போடு வாக்கானது உச்சரிக்க, மனம் வேறு ஒன்றோடும் கூடாமல் பரம்பொருள் ஆகிய என்னைச் சிந்திப்பதாக இருந்து உயிரை விட்டவர் அழியாத இயல்புடைய என்னையே அடைவர்.

இப்பரிசின் ஆண்டுஒருஅறு திங்கள்அளவு என்னாது
எப்பொழுதும் என்றன்இயல் பேநினையல் உற்றார்
கைப்படுவன் யான்என்இயல் கைப்பட இருந்தோர்
பொய்ப்பிறவி யானது மறித்துஅடைதல் பூணார். (13)

முற்கூறிய வண்ணம் ஓர் ஆண்டு அளவும், ஓர் ஆறு மாதம் எனவும் பரம்பொருளைச் சிந்திப்போம் என்று கால வரையறையைச் செய்யாமல் எப்பொழுதும் முன் அருளிச் செய்த பரம்பொருளான எனது இயல்பையே நினைக்கின்ற உறுதியான மனம் உடையவர் வசம் நான் கைப்படுவேன். என் இயல்பானது தன் கைவசமாக இருக்கும் பெரியோர்களைப் பொய்ப் பிறவி மீண்டும் அடையாது.

செய்யாமுன் சார்ந்தவினை தீர்ந்த போதே
திசைமுகன்நாடு அணைந்தோரும் திரிய மீள்வர்
மெய்யாக எனைஅடையும் அவரே கண்டாய்
மீளாத நெறிஅடைந்தார் வேறு கூறில்
ஐயாகேள் சதுர்யுகம்ஈர்ஐஞ் நூறும்
ஒருபகல்ஆம் ஆண்டுஒருநூறு அயற்கும் உள்ளது
எய்யாதாங்கு அவருக்குஓர் பகலில் தோன்றி
இராஇறக்கும் தன்மைத்துஆம் யோனி எல்லாம். (14)

அருச்சுனா, கேள், தம்மால் செய்யப்பட்டு முன் பிறவியில் தம்மைப் பொருந்திய வினைகள் தீர்ந்த போது நான்முகனின் சத்திய லோகத்தை அடைந்தோரும் மீண்டும் பிறப்பர். உண்மையாக என்னை அடைந்தவரே மீண்டும் பிறவாத நெறி அடைந்தோர். வேறான நான்முகனின் பகல் இரவைச் சொன்னால் ஆயிரம் சதுர்யுகம் ஓர் பகல். இப்படிப்பட்ட நூறு ஆண்டு, நான்முகனுக்கு வாழ்நாள். இப்படிப் பிரமாவும் நாசம் அடைதலால் அவனும் அநித்தியனே. எண்பத்து நான்கு இலட்சம் யோனிகளும் முன் கூறிய ஆண்டு அளவினை உடைய நான்முகனுக்கு ஒரு பகல் வரின் தோன்றும். இரவில் பிரளயம் ஆகும் தன்மையனவாம். இதுவே அளவு.

நெறியில்வரு வியத்தமுடன் அவ்வியத்தம்
கூடாத நிலைமை என்றும்
பொறிஅழியும் ஆக்கைதனில் அழியாத
புலம்என்றும் புதிதுஅன்று என்றும்
அறிவுஅரிய நெறிஎன்றும் அழியாத
பொருள்என்றும் அடைந்தோர் பின்னைப்
பிறிவுஅரிய நெறிஎன்றும் பெரியோர்கள்
பேசுவதுஎன் பெற்றி கண்டாய். (15)

முற்கூறிய ஆண்டளவில் முறையாக வருகின்ற தோன்றி ஒடுங்கும் தன்மைகளை அடையாத சத்து வடிவம் என்றும், அறிவு அழியும் உடலில் அழியாத அறிவு என்றும்,புதிதன்று நிலையானது என்றும், இந்திரியங்களால் அறிதற்கு அரிய தத்துவம் என்றும்,அழியாத பொருள் என்றும், அடைந்தோர் பின்னர் பிறப்படையாத தன்மை உடையது என்றும் பெரியோர்கள் கூறுவது என் வடிவத்தையே.

எப்பொருளும் யாவன்தன் உள்அ டங்கிற்று
எங்கும்ஆய் நிற்கின் றான்யார்
அப்பரம பரம்பொருளாய் உள்ளஎனை
அன்பாலே அடைவது ஐயா
எப்பரிசு வருங்காலத்து இறந்தார்கள்
பிறவாதார் பிறப்பர் என்னில்
அப்பரிசு வருங்காலத் தினைஅறிய
உரைக்கின்றேன் அதனைக் கேட்பாய். (16)

அருச்சுனா, எவ்வகைப்பட்ட பொருளும் எந்தப் பிரம்மத்தில் அடங்கியதோ, அவற்றுள் எங்கும் வியாபித்தவனாய் நிற்கின்றவன் எவனோ? அந்தப் பரம்பொருளாய் உள்ள என்னை அன்பினாலே அடையத்தக்கது. எப்படி வருங்காலத்திலே மரணம் அடைபவர் பிறவாமையையும் மீண்டும் பிறவியையும் அடைவர் என்று நீ கேட்டால் அந்தப்படி வருகின்ற காலத்தை நீ அறியும்படி அருளிச் செய்கின்றேன். அதனைக் கேட்பாயாக.

அங்கிஒளி பகல்வெண்மை ஆம்கால
தேவதைகள் அவர்க ளோடும்
தங்கும்அறு திங்கள்இடை உத்தரா
யணம்சார்வார் மறுத்தும் சாரார்
கங்குல்புகை கறுப்புஎன்னும் காலதே
வதைஅடைந்து பிறக்கும் கண்டாய்
எங்கும்அறு திங்களிடைத் தெக்கணா (17)
யனத்துஇறந்த யோகி என்பான்.

ஒளி, தீ, பகல், சுக்கில பட்சம் என்னும் காலங்களின் அபிமான தேவதைகள் ஆகிய அவர்களோடும் பொருந்துகின்ற ஆறு மாதங்களில் உத்தராயணம் என்னும் காலத்தில் சென்று சகுண பிரம்மத்தை அடையும் உபாசகர் மறுபடியும் இவ்வுலகத்தைச் சாரார். புகை, இரவு, கிருஷ்ண பட்சம் என்னும் காலதேவதைகளோடு ஆறு மாதங்களில் தட்சிணாயனத்தில் மரணம் அடைந்த கர்ம யோகி ஆனவன் மீண்டும் பிறப்பான்.

ஏதம்ஆனது இன்றிஇவ் இரண்டும்ஆயும் யோகிதான்
வேதம்ஓதி வேள்விதானம் மெய்த்தவங்கள் செய்துஉளார்
ஏதுவாய நற்பதங்கள் எய்திவீடும் எய்துவான் (18)
ஆதலால்அவ் வியோகமேசெய் என்றுமாயன் ஓதினான்.

அருச்சுனா, ஒளி, இருள் என்னும் இவ்விரண்டு வழிகளையும் ஆராய்ந்து அறியும் யோகி, யாது ஒரு மோகத்தையும் அடையாமல், நால்வேதங்களையும் அத்தியயனம் செய்து வேள்விகளையும் வேள்விக்கு உரிய தானங்களையும் மெய்த்தவங்களையும் செய்தவர்கள், அடையும் நற்பதங்களை அடைந்து முடிவில் வீடுபேறு அடைவான். ஆதலால் அந்தத்தியான யோகத்தையே கடைப்பிடித்து வருவாய் எனக் கண்ணன் அருளிச் செய்தான்.

எட்டாவது

எழுவகை வினா உரைத்த அத்தியாயம் நிறைவுற்றது.



# ஒன்பதாவது மாயா விகார அத்தியாயம்

ஈர்வன்துயர் களையும்பதம் ஈதுஅன்றுகொல் எனவே
ஆர்வம்செயும் விசயன்கொளும் ஆசங்கையை அறியாக்
கார்வந்துஎன அவன்அன்புறு களிகொண்டுஎழ வெளியே
தேர்வெண்பரி குசைகொண்டுஎழு பாகன்திரு மொழிவான். (1)

*சித்தத்தை அறுக்கும் வலிய துன்பங்களை நீக்கும் பதமானது முன் அத்தியாயத்தில் சொல்லிய முறைப்படியான வீடுபேறு அடைதலோ அல்லது வேறானதோ என்று தன்னிடத்தே அன்புகொண்ட அருச்சுனன் கொண்ட சந்தேகத்தைத் தனது திரு உள்ளத்தால் அறிந்து, அதனைப் போக்கும் பொருட்டு, கரிய முகில் எழுந்தாற் போல, அவ்வருச்சுனன்பால் கொண்ட மிகுந்த அன்பினால் பகிரங்கமாக அருச்சுனனது தேரில் பூட்டிய வெண்குதிரைகளைக் கடிவாளத்தின் மூலம் கைக் கொண்டு அருளிய கண்ணபிரான் சொல்லத் தொடங்கினான்.*

அறையும்பொருள் களின்முன்புஅனு பவம்ஒன்றிய அதனை
மறையும்பொருள் களின்முன்புஅற மறையும்பொரு ளினைமேல்
இறையும்துயர் அதுஇன்றிமுன் இயைகின்றதை இசைவோடு
உறையும்துகள் அறநின்றதை மொழிகின்றனன் உணர்நீ. (2)

*உலகின் கண்ணும் சாத்திரங்களின் கண்ணும் கூறப்படும் ஞானங்கள் அனைத்திலும் முதன்மையான அனுபவ சகிதமான ஞானத்தை, மறையும் பொருள்கள் அனைத்தின் முன்பு மிகவும் ரகசியமான பொருளை, பின்பு கொஞ்சமும் துன்பம் இல்லாமல் கண்கூடாக அறிவதை, இனி அடையப்படுவதும், அடைந்து இருப்பதுமான பாவங்கள் அனைத்தும் நீங்கும்படி குற்றம் இன்றி நிற்பதான அந்த உயர்ந்த தத்துவத்தை அருளிச் செய்கின்றேன். நீ அறிந்து கொள்.*

அழிவுஒன்றுஇலது அறன்ஒன்றியது அரிதுஅன்றியது அதன்மேல்
வழிவந்தமெய் அறிவுஅன்புஇலர் எனைஎங்கணும் மருவாது
இழிதந்திடு சனனம்கொடும் மரணம்கொடும் இங்ஙன்
உழிதந்துஇக பரம்ஒன்றிய உருவங்களில் உழல்வார். (3)

*அருச்சுனா, இவ்வான்ம ஞானமானது அழிவு ஒன்றும் இல்லாதது. தர்மத்தோடு கூடியது, துன்பம் இன்றியே எளிதாகப் பெறத்தக்கது. வழி வழியாக வந்த ஆத்ம ஞானத்தில் சிந்தை இல்லாதோர், பரமாத்மாவான என்னை எவ்விடத்தும் அடையாமல், இழிவைத் தருகின்ற பிறப்பினைக் கொண்டும் இறப்பினைக் கொண்டும் இப்படியே சுழன்று, இகபரங்களில் பொருந்திய பல்வேறு உருவங்கள் ஆகித் துன்புறுவர்.*

யாரும் அறியப் படாமைஅதே எனக்கு வடிவாய் உடையநான்
ஆரும் உலகங் களைஅடையப் பரப்பி நிற்பன் ஆதலினால்
சாரும் உலகில் சராசரங்கள் எனையே அவற்றை யான்சாரேன்
சேரும் பரிசு நின்றாற்போல் தெளியா தார்க்குத் திகழுமால். (4)

யாவராலும் அறியப்படாமையின் அவ்யக்தத் தன்மையையே எனக்கு வடிவமாக உடைய நான் பொருந்தி உள்ள உலகங்களை முழுமையாய் வியாபித்து நிற்பேன். ஆதலால் உலகிலே உள்ள சராசரங்கள் என்னையே சார்ந்து நிற்கும். மற்றோ, நான் அவற்றைச் சார்ந்து நிற்க மாட்டேன். நான் உலகத்தில் இந்திரியங்களால் அறியப்படாது வியாபித்து நிற்பதுபோல் எனது அவ்யக்தத் தன்மையை அறியாதவர்களுக்கு விளங்காமல் நிற்பேன்.

**முன்னே ஒன்றும் கலவாதுயான் நிற்பன் முழுதும் ஆய்நின்ற**
**அன்னோர் மையினால் உலகம்எனோடு அங்கம் கலவாது ஆதலினால்**
**என்னே என்றன் இயற்கையினைப் பாராய் இந்தச் சகம்எல்லாம்**
**மன்னே என்றன் மாயைபெறும் ஆங்கா ரம்முன்ஆய்த் தருவன்காண். (5)**

படைப்பின் முன்னே எதனோடும் தொடர்பின்றிப் பரமான்மா ஆகிய அசங்கனாக நான் நிற்பேன். முழுதும் அசங்கனாய் நின்ற அந்தத் தன்மையினாலே உலகம் என்னுடன் கலந்து நிற்காது. ஆதலால் இஃது என்னே அற்புதம். என் மகிமையை நுட்பமான பார்வையால் நன்றாகப் பார். அருச்சுனா எனது மாயையானது தோற்றுவிக்கும் ஆங்காரம் முதலாய் உள்ள இந்த உலகு அனைத்தையும் தோற்றுவிப்பவன் நானே.

**என்உருவில் புணராதே என்னைவிடத் தோன்றாதே**
**மன்உயிர்கள் எனைஎன்றும் சார்ந்துவரும் வகைகேட்கில்**
**உன்னும்இடம் எங்கும்நிறைந்து ஒளிர்கின்ற வான்எங்கும்**
**துன்இயற்கை செறிகாற்றின் தோற்றம்போன்ம் சுடர்வேலோய். (6)**

ஒளி வீசும் வேலை உடையவனே, அசங்க சுபாவம் உடைய எனது வடிவத்தோடு தொடர்பு இல்லாமலும், என்னைத் தவிர வேறு ஒன்றின் இடத்துத் தோன்றாமலும், மிகுதியான உயிர்கள் என்னை எப்போதும் சார்ந்து வரும் தன்மை எவ்வாறு என்று நீ கேட்பாயானால், எண்ணும் இடம் எல்லாவற்றிலும் முழுமையாக விளங்கி நிற்கும் வானில் அனைத்துத் திசைகளிலும் நெருங்கித் திரியும் சலனம் உடைய காற்றினது தோற்றம் போல் இருக்கும்.

**ஈண்டுபொருள் இவைஅனைத்தும் இறக்கும்கால் என்னிடையே**
**மாண்டுபுகும் பிறக்கும்நாள் மற்றுஅவைதாம் வரன்முறையே**
**மீண்டுபுறப் படும்என்னால் ஆதலினால் மெய்பார்க்கில்**
**யாண்டும்உயிர் படைத்துக்காத்து அழிக்கின்றேன் யானேகாண். (7)**

இங்கே காணப்படுகின்ற ஆகாசம் முதலான பொருள்கள் அனைத்தும் பிரளயத்தின் முடிவில் அழியும் போது எனது முக்குணமான மாயையில் லயம் அடையும். படைப்புக் காலத்தில் பிறக்கும் போது ஆகாசம் முதலியவை உண்டாகும் முறைப்படியே என்னால் மீண்டும் படைக்கப் படும். ஆதலால் உண்மையை நோக்கும் இடத்து எவ்விடத்தும், உயிர்களை உண்டாக்கி, காப்பாற்றிப் பின்னர் அழிக்கின்றவன் நானே என்பதை உணர்வாயாக.

**விலங்கல் அனையாய் பலங்களுடன் வேண்டல் வேண்டா மையைவிட்டுச்**
**சலங்கொள் வினைகள் அவைசெய்வன் அதனால் என்னை அவைசாரா**
**உலண்டு வாயால் நூற்றுஅந்த நூலால் கட்டுண் பதுபோலப்**
**பலங்கள் நினைவார் அதனாலே கட்டுண்டு ஆங்கே பட்டுஉழப்பார். (8)**

மலையை நிகர்த்த அருச்சுனா, பயன்களைப் பெறும் விருப்பத்தோடு, ஒருவனிடம் உண்டாகும் விருப்பையும், மற்றொருவன்பால் உண்டாகும் வெறுப்பையும் நீக்கி, மாயத்

தன்மைகளை உடைய படைப்பு முதலிய செயல்களைச் செய்கிறேன். அதனால் என்னை அப்படைப்பு முதலான தர்மங்கள் பொருந்தா. பட்டுப்புழு தன் வாயாலே நூலை நூற்று அந்த நூலினாலேயே கட்டுண்டது போல, தான் செய்யும் கர்மங்களுக்கு உரிய பலன்களைக் கருதுபவர், அக்கர்மங்களாலேயே கட்டுண்டு அவற்றில் அகப்பட்டு வருந்துவர்.

**ஊர்வன நிற்ப வாக உலகை உண்டாக்கும் என்னை**
**ஏர்பெற அறியா தார்தாம் மகன்என்றே இகழா நிற்பர்**
**வேர்என நெஞ்சத்து ஆசை வினைகளை மிடையச் செய்வார்**
**ஆர்எனில் அவர்கள்தாமும் அரக்கரோடு அசுரர் ஆவார்.** (9)

அசையும் பொருள், அசையாப் பொருள்களுடன் உலகை உண்டாக்கும் பரம்பொருளான என்னை அழகான தத்துவமாக அறியாத அஞ்ஞான மக்கள் இந்தக் கண்ணனும் நம் போல மானிடனே என்று என்னை நிந்தை செய்வர். அதனால் உண்டாகும் பெரும் பாவத்தால் நரகத்திலேயே வாசம் செய்ப்வர்களுக்கு மூலவேர் என்று சொல்லும்படி சித்தத்திலே ஆசையோடு கருமங்களை மிகுதியாகச் செய்வர். அவர்கள் யார் என்று நீ கேட்கின் அவர்கள் அரக்கருடன் அசுரரும் ஆவார்.

**அறிவினால் என்னை ஆக அறிந்துகொண்டு அமைதி யாலே**
**பொறிவழி அடைத்து எப்போதும் என்னையே போற்றி செய்து**
**நெறியினால் வழுத்தி வாயால் என்னையே நினைந்து நெஞ்சால்**
**செறிதரும் இவர்கள் கண்டாய் தேவரில் தெரியப் பட்டார்.** (10)

அறிவினால் பரம்பொருளான என்னை அனைத்திற்கும் காரண வடிவனாகவும், நாசமற்றவனாகவும் உள்ளவாறே அறிந்து கொண்டு, அடங்கிய மனத்தோடு விஷயங்களுக்கு ஆன வழிகளை அடைத்து, வாயினால் போற்றி, எப்போதும் என்னையே நெஞ்சால் நினைந்து பக்தியோடு இருக்கும் இவர்களே தேவர் போல் காணப்படுபவர்கள்.

**காலத் தாலும் பொருள்இடத்தும் கணித்தற்கு அரிதுஆ கியஎன்னை**
**ஞாலத் தார்கள் புகழ்வரிய ஞான யாகங் களினாலே**
**கோலத் தால்வேறு ஆகவும்மெய்க் குறியால் ஒன்றுஆ கவும்கொண்டு**
**சாலத்தாழ்வார் அவருடைய தன்மை யினைநான் சாற்றக்கேள்.** (11)

காலத்தாலும், இடத்தாலும், பொருளாலும் அளவிட்டு உரைக்க இயலாத பரம்பொருள் ஆகி, உண்மையான தரிசனத்தால் ஒன்றாகவும், உருவங்களால் வேறு ஆகவும் உள்ள என்னை மனத்தில் கொண்டு போற்றுதற்கு அரிய ஞான வேள்விகளால் மிகவும் உபாசனை செய்வர். அவர்களின் தன்மை பற்றி நான் கூறுவதைக் கேள்.

**வேதமொழி வேள்விமிகு வேள்விபி திரர்க்கே**
**ஈதலுறும் வேள்விஎரி நெய்சரு இவற்றால்**
**காதல்உறு வோர்கள்புரி காரியம் இதுஎல்லாம்**
**நாதமுதல் ஆயபொருள் ஆயவையும் நானே.** (12)

வேதம் கூறியபடி அக்கினியில் செய்யும் வேள்விகளும், மகா வேள்விகளும், தென்புலத்தார் ஆகிய முன்னோர்களுக்குக் கொடுக்கும் சிரார்த்தம் ஆகியவைகளும், எரியோம்பல், நெய்விடல், அன்னமிடல் ஆகிய செய்தலில் அன்புடையோர் செய்கின்ற செயல்கள் ஆகிய இவை அனைத்தும்,மந்திரம் முதலாகிய பொருள்களும் நானே.

ஆயில்உல கங்களை அளித்துஒளி வளர்க்கும்
தாயினொடு தந்தையவர் தந்தைதலை களும்நான்
போயின வினைப்பயன் அளித்தல்புரி வேன்நான்
ஏயும்மறை மூன்றினுடன் ஓம்எனும் எழுத்துயான். (13)

ஆராய்ந்து பார்க்கும் போது உலகங்களைப் படைத்து ஒளியுடன் இருக்கச் செய்யும் தாயுடன் தந்தையும், அவரது முன்னோர்களும் நானே. முற்பிறப்புக்களில் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்ற கர்மபலன்களைக் கொடுக்கின்ற அதிகாரியும் நானே. பொருந்தும் இருக்கு, யசுர், சாம வேதங்களுடன் ஓம் என்னும் எழுத்தும் யானே.

எல்லார்க்கும் கதியும்நான் இருவினைப்பா ரகனும்நான்
எல்லார்க்கும் தலைவன்நான் எப்பொருட்கும் சான்றுநான்
எல்லார்க்கும் உறைவிடம்நான் யார்க்கும்இடர் தீர்ப்பேன்நான்
எல்லார்க்கும் நல்லேன்நான் எப்பொருட்கும் வித்துநான். (14)

எல்லோர்க்கும் புகலிடமாக இருப்பவன் நான். நல்வினை தீவினை என்னும் இருவினைப் பயன்களின் வழியே அனைவரையும் காப்பவன் நான். நானே எல்லோர்க்கும் தலைவன். அனைத்துப் பொருள்களுக்கும் சாட்சி நான். அனைவருக்கும் உறைவிடமும் நானே. அனைவரின் துன்பங்களைத் தீர்ப்பவனும் நானே. எல்லோர்க்கும் நல்லவனும் நானே. எல்லாப் பொருளுக்கும் மூலமும் நானே.

தாங்கிய நீரைஎல்லாம் இரவியாய்த் தலத்துநின்று
வாங்குகின் றேனும்மீள மழைகளாக் கொடுக்கின்றேனும்
ஈங்குமெய் உணரில்யானே ஆதலால் யாதுஒன்றேனும்
ஆங்குஅருச் சனைசெய்கின்றார் என்னையே அருச்சிக்கின்றார். (15)

பூமியில் முன்னர்ப் பெய்த நீரை எல்லாம் சூரியனாகிப் பூமியின்கண் நின்று வாங்கிக் கொள்கின்றவனும், மீண்டும் மழைகளாகக் கொடுக்கின்றவனும் யார் என்பதை இங்கே உண்மையாக அறிந்தால் எல்லாம் நானே. ஆதலால் யாது ஒரு தெய்வத்தையாவது அருச்சனை செய்து வழிபடுகின்றவர் என்னையே ஆராதிக்கின்றனர்.

ஞானம்ஆய் ஒன்றுஆய் நின்ற என்னையே நாநாவாகப்
போனதீ வினையின் மாந்தர் வேள்வியால் பூசித்து அத்தால்
வானம்ஆம் உலகம் ஏறி வாழ்ந்துமண் இடையே வீழ்ந்திட்டு
ஈனம்ஆம் ஆசை யாலே இறப்பது பிறப்பது ஆவார். (16)

பாவ கர்மத்தினின்றும் விடுபட்ட மனிதர்கள், ஞான வடிவுடன் ஒன்றாய் நிற்கின்ற என்னையே, இந்திரன், ஆதித்யன் என்று பல வடிவங்களில் வழிபாடு செய்து வேள்விகளால் போற்றி, அதனால் சுவர்க்கத்தை அடைந்து, அங்கு உள்ள பேரின்பங்களை அனுபவித்து வாழ்ந்து, மண்ணுலகிலே மீண்டும் வீழ்ந்து, இழிவான ஆசையாலே இறப்பதும் பிறப்பதும் ஆக இருக்கின்றார்.

மின்னைஏய் வேலாய் என்னை மேவுவார் வேண்டிற்று எல்லாம்
பின்னையே என்னாது அன்றே அளித்துஅவை காப்பேன் வானோர்
மன்னையே முதல்ஆம் தெய்வம் வணங்குகின் றாரும் மற்றுஎன்
தன்னையே வணங்கு கின்றார் தாம்அறி யாத தேகாண். (17)

மின்னலுக்கு நிகரான வேலுடைய அருச்சுனா, பரம்பொருள் ஆன என்னைத் தினந்தோறும் சிந்திக்கும் துறவிகள் வேண்டியவற்றை எல்லாம் பின்னர்த் தருகிறேன்

என்று காலம் தாழ்த்தாது அன்றே கொடுத்து அவற்றைக் காப்பேன். வானவர் தலைவனான இந்திரன் முதலான தேவதைகளைச் சிறப்புடன் வேள்வி முதலியவற்றால் வழிபடுபவர் உள்ளபடி அவர்களின் வடிவமாக உள்ள என்னையே வழிபாடு செய்கின்றனர். அந்தப் பிற தேவதைகளின் அடியவர்கள் தாம் அறியாமலேயே என்னை வழிபடுகின்றனர்.

தேவரை அடைந்தோர் தேவர் ஆவர்கள் பிதிர்கள் தம்மை
மேவவே அடைந்தோர் அந்தப் பிதிர்களாய் விளங்கா நிற்பார்
யாவர்கள் யாவர் பாலார் அவர்களே ஆவர் என்றால்
ஆவஎன் அடைந்தார் யானே ஆவதற்கு ஐயம் உண்டோ. (18)

இந்திரன் முதலான தேவர்களை வணங்குபவர் அத்தேவர்களே ஆவர். முன்னோர்களைச் சிராத்தம் முதலிய கருமங்களால் பொருந்த ஆராதித்தோர், மரணத்திற்குப் பின் அந்தப் பிதிர்களாகவே ஆவர். எவர்கள் யாதொரு பூதங்களை வணங்குகிறார்களோ, அவர்கள் அந்தப் பூதங்களே ஆவர் என்றால், பரம்பொருள் ஆன என்னை அடைந்தவர் நானாகவே ஆவதற்குச்சந்தேகம் உண்டோ?

போதுஅலர் இலைகாய் நீரே பெற்றதே கொண்டு போற்றிக்
காதலால் தூய அன்பர் தந்ததே களித்துக் கொள்வன்
ஆதலால் ஈவ நோற்ப உண்பஎன்று இவைகளே கொண்டு
ஈதுஎலாம் எனக்காய்த் தந்தால் என்னையே எய்தல் ஆம்ஆல். (19)

இலை, பூ, நீர், பழம் முதலியவற்றுள் சுலபமாய்க் கிடைக்கத் தக்கதே கொண்டு என்னை வழிபட்டுப் போற்றி அன்பினால் தூயநிலை அடைந்த பக்தர்கள் எனக்குத் தந்ததையே மகிழ்வுடன் எற்றுக் கொள்வேன். ஆதலால் ஈவனவும், நோற்பனவும், உண்பனவும் என்ற இவைகளைக் கொண்டு இவை அனைத்தையும் பரம்பொருள் ஆன எனக்குத் தந்தால் வினைக் கட்டுகளை விட்டவனாய் என்னையே நீ அடையலாம்.

எப்பொருள் தனக்கும் யான்ஒத்து இருத்தலால் எனக்கு யாரும்
ஒப்பர்கள் இனியர்இன்னா தார்என ஒருவர் இல்லை
இப்படி அறியும் அன்பர் பக்கலே யானும் நிற்பன்
அப்படி அவரும் என்பால் அங்ஙனம் அமர்ந்து நிற்பார். (20)

என்பால் அன்புடனும் அன்பின்றியும் இருக்கின்ற அனைத்து உயிர்கள் இடத்தும் நான் சமம் ஆகவே இருத்தலால், பரம்பொருள் ஆன எனக்கு யாவரும் சமம் ஆனவர்களே. விரும்பத்தக்கவர், விரும்பத் தகாதவர் என்று எனக்கு ஒருவரும் இல்லை. என்னை இவ்வாறு அறிந்து வணங்கும் பக்தர்களுக்கு நானும் அருள் செய்வேன். அத்தகைய பக்தர்களும் என்னிடத்தில் அவ்வாறே பொருந்தி நிற்பார்கள்.

ஊணையே முதலாய் என்பால் ஒருக்கிஎன் உணர்வார் நாளும்
நாணையே விட்டுத் தீமை புரியினும் அவர்கள் நல்லார்
ஏணைஏய் புயத்தாய் என்றும் கேடுஇலா இன்பம் அல்லாது
ஆணையே ஒருகேடு இல்லை எங்கணும் அவருக்கு ஐய. (21)

வலி பொருந்திய தோளை உடைய அருச்சுனா, உணவு முதலாகத் தான் உண்ணும் பொருள்களை எனக்கு அர்ப்பணித்து என்னை வணங்குபவர் எப்பொழுதும் அச்சத்தை நீக்கி, தீமை செய்தாலும் அவர்கள் நல்லவரே என்று மதிக்கத்தக்கவர். அவ்வடியவர்களுக்கு எப்பொழுதும் கேடில்லாத பேரின்பமான வீடுபேறு உண்டாவதே அன்றி எவ்விடத்திலும் ஒரு கேடு இல்லை. இது சத்தியம்.

வணிகரும் மற்ற வேளாண் மாந்தரும் மகளிர் தாமும்
பணிவொடும் என்னைப் பேணிப் பற்றுஅறுத் திடுவர் என்றால்
அணிமுடி அரசர் மேன்மை அந்தணர் அடைவ ராகில்
தணிவுஅரும் பிறவி தீரச் சாற்றவேண் டுவதும் உண்டோ. (22)

வியாபாரத்தில் சிறந்த வணிகரும், மற்ற உழவுத் தொழில் செய்பவர்களும், பெண்களும் பக்தியோடு என்னை வணங்கி, விஷயங்களில் ஆசையை விட்டுவிடுவர் என்றால், அழகு பொருந்திய கிரீடத்தை உடைய அரசர்களும், மேலான அந்தணர்களும் என்னை வழிபாடு செய்வார் ஆனால், நீங்குதற்கு அரிய பிறவி நீங்கிப் பரமகதி அடைவர் என்று சொல்லவும் வேண்டுமோ?

மின்னையே அனைய வாழ்வில் நின்றநீ விருப்பி னோடும்
என்னையே வணங்கி என்றும் என்னையே நினைதி ஆகில்
என்னையே அடைதி என்றே இயம்பினான் இலங்கு வாள்கண்
பின்னைஏய் முறுவ லோடும் பேய்முலை உண்ட பெம்மான். (23)

ஒளிர்கின்ற வாள் போன்ற கண்களை உடையவனும், திருமகளின் திருமுகத்தில் பொலிந்த முறுவலுடன், பூதகியின் மார்பிலே உள்ள நஞ்சினை உண்ட பெருமான் ஆகிய கண்ண பெருமான் அருச்சுனனை நோக்கி, மின்னலைப் போன்ற மனித வாழ்வில் நிற்கின்ற நீ பக்தியோடு பரம்பொருளான என்னை வணங்கி, எப்போதும் என்னையே நினைப்பாய் ஆனால் ஆனந்த வடிவான என்னையே நீ அடைவாய் என்று அருளிச் செய்தான்.

ஒன்பதாவது மாயா விகார அத்தியாயம் நிறைவுற்றது.



# பத்தாவது விபூதி யோக அத்தியாயம்

அரிய எனது நிலைமையைமுன்பு அளவே சொன்னேன் அதுகேட்டே
உரிய மனனில் களிகூர உவவா நின்ற உனக்கு அதனை
விரிய மொழிவன் கேள்என்று வேதத் தலைக்கே வீற்றுஇருக்கும்
கரிய முகிலான் செவ்வாயால் காதல் கூரக் கட்டுரைப்பான். (1)

யாவராலும் அறிதற்கு அரிய பரம்பொருள் ஆன என் பெருமையை (விபூதியை) முன்னர் அளவாகச் சொன்னேன். அவ்வாறு அருளியதைக் கேட்டே உனக்கு உரியதான மனத்தின் கண்ணே களிப்பு மிகும்படி மகிழ்ச்சியுடன் நின்ற உனக்கு அப்பெருமையை விரிவாக அருளிச் செய்வேன் கேள் என்று வேதத்தின் உச்சியில் வீற்று இருக்கும் கரிய முகில் வண்ணன் ஆன கண்ண பெருமான் தனது செவ்வாயினால் அருச்சுனனுக்கு அன்பு மிகும்படி அருளிச் செய்வான்.

தேவர்களும் முனிவர்களும் அசுரர்களும் சித்தர்களும்
யாவர்களும் அறியார்என் பெருமையைஎன் பழைமையினால்
சாவகையும் பிறப்பும்இலா எனைஅறியத் தகுவார்அப்
பாவவினை அறவிட்டுப் பரகதியை அடைகிற்பார். (2)

இந்திரன் முதலான தேவர்களும் முனிவர்களும் அசுரர்களும் சித்தர்களும் மற்று உள்ள யாவரும் என் பெருமையை அறியார்கள். எனது வடிவம் ஆனது தேவர் முதலியவர்களுக்குக் காரணம் ஆனமையால் இவர்கள் என் அருளினால் அல்லாமல் என் பெருமையை அறியார்கள். இறப்பும் பிறப்பும் இல்லாத என்னை, தம் ஆன்மாவாக அறியத் தகுந்தவர் அனைத்துப் பாவ வினைகளையும் அறும்படி விட்டு முத்தியை அடைவர்.

புத்திபொறை தவஞானம் புகழ்பழிதீக் கொலைஒழிவு
சத்தியம்நல் சமைதமைநல் செபம்தானம் சாவுபிறப்பு
அத்திகொடு நிறைவுஇன்பம் இடர்அஞ்சல் அஞ்சாமை
இத்தனையும் தோன்றுவதுஎன் னிடைநின்றே எனத்தெளிவாய். (3)

சராசரங்களை ஒழுங்கு செய்யும் அறிவு, பொறுமை, தவம், ஞானம், புகழ், பழி, அனைத்து உயிர்களையும் துன்புறுத்தாமை, உண்மை பேசுதல், உலக விஷயங்களில் அந்தக்கரணங்களையும் புறக் காரணங்களையும் ஈடுபடுத்தாமை, நல்ல செபம், தானம், இறப்பு, பிறப்பு, நல்வாய்ப்பினால் கிடைத்த தூய பொருள்களைக் கொண்டு மகிழ்தல், சுகம், துக்கம், பயம், பயமின்மை ஆகிய இவ்வளவு செயல்களும் என்னிடம் இருந்தே தோன்றுகின்றன என்பதை நீ அறிவாயாக.

எனைத்து விதத்த தவத்துஎழு வோரும்
அனைத்தையும் நிற்ப நடப்பன வாக
வனைத்த மனுக்களும் நால்வரும் என்றன்
நினைப்பில் உதித்தனர் என்பது நேர்வாய். (4)

எப்படிப்பட்ட கூறுபாடான தவங்களை உடைய பிருகு முதலிய சப்த மகரிஷிகளும், அனைத்தையும் நிற்பன நடப்பனவாக உண்டாக்கிய சுவாயம்பு முதலான பதினான்கு மனுக்களும், சனகர் முதலான நான்கு முனிவர்களும் படைப்பின் தொடக்கத்தில் எனது உறுதியின் (சங்கற்பம்) மாத்திரத்தால் உதித்தனர் என்பதையும் ஒப்புக் கொள்வாய்.

இப்பரிசு என்னை அறிந்தவர் என்பால்
வைப்பர்கள் சிந்தையை மன்உயி ரோடும்
அப்பரி சேஅறி யாரையும் ஆங்கே
உய்ப்பர் உரைப்பர் உவப்பர் களிப்பார். (5)

இப்படி என்னை குருசாத்திர உபதேசத்தால் உள்ளபடி அறிந்தவர்கள் பரம்பொருளான என்னிடத்தில் நிலைத்த தன்மை உடைய பிராணனையும் தம் சிந்தையையும் வைப்பர். தாம் எப்படியோ அப்படியே மாணாக்கரையும் பரம்பொருள் ஆகிய என்னிடத்தே சித்தத்தையும் உயிரையும் அர்ப்பணம் பண்ணும்படி செய்வர். தம்மை ஒத்த அறிஞர் வந்தால் நெருக்கம் கருதி என்னைப் பற்றியே போதிப்பர். இதனால் மகிழ்ச்சி அடைவர். இன்பம் அடைவர்.

நிரந்தரம் இப்பரிசு என்னை நினைப்பார்க்கு
அரந்தை கெடுத்துஎனை ஆயும் மனத்தைப்
புரந்து கொடுத்தவர் தேர்பொருள் ஆயே
வரங்களும் முற்ற அளித்த வரத்தால். (6)

எப்பொழுதும் இவ்வாறே என்னை அன்புடன் நினைப்பவர்க்கு உண்டான துன்பம் போக்கி, எனது உண்மை வடிவத்தை ஆராயும் புத்தியைக் காத்துத் தந்து, அவர் வேண்டும் வரங்களையும் குறைவின்றி அருளிச் செய்து அவ்வரத்தினால் அவர் அறியும் பொருளாய்.

மற்றவர் நெஞ்சின் மயக்குஇருள் எல்லாம்
அற்றம்இல் ஞான விளக்குஒளி யாலே
பற்றுஅறு விப்பன் எனப்பழை யோன்முன்
கொற்றவன் மற்றுஇது கூற வலித்தான். (7)

அவரது அந்தக்கரணங்களில் உள்ள அஞ்ஞானத்தால் உண்டான மறைப்புச் சக்தி ஆகிய இருள் முழுவதையும் மறைவில்லாத ஞான விளக்கின் ஒளியினாலே நாசம் ஆகும்படி செய்வேன் என்று அருளிச் செய்தான். இவ்வாறு அருளிச் செய்த பகவான் முன் அருச்சுனன் வேறு சொல்லக் கருதினான்.

பேதம்உடைய பிறப்பு அகன்றான் பிறழா நிறைவு பெருஞ்செல்வம்
ஆதி தேவன் பரப்பிரமம் அழிவுஇல் லாதான் ஆரணங்கள்
ஓத அரிய உத்தமன்இங்கு எல்லாம் உயிர்ப்பான் எனஉன்னை
நீதி முனிவர் உரைத்தஎலாம் நீயே அருளிச் செய்தனையால். (8)

பலவகை வேறுபாடுடைய பிறப்பினை அடையாதவன், ஒன்றிலும் பிரிவில்லாது எங்கும் வியாபித்தவர், நிறைவுடைய பெருஞ்செல்வம், ஆதி தேவன், மேலான பிரம்மம், அழிவு அற்றவன், வேதங்களால் சொல்லுதற்கு அரிய உத்தமன், இங்கு அனைத்தையும் உயிர்ப்பிப்பவன் என்று இவ்வாறு உன்னை மெய்ம்மையான முனிவர்கள் அனைவரும் அருளிச் செய்த அனைத்தையும் நீர் என்னிடத்து நேரே அருளிச் செய்தீர்.

எல்லாப் பொருட்கும் தனிவித்தே எல்லாப் பொருட்கும் ஈசனே
நல்லார் புகழும் தேவர்கட்கும் உலகங் களுக்கும் நாயகனே
அல்லால் அறிவார் ஆர்என்னை யானே அறிவன் எனஅருளும்
சொல்லால் உளஅப் பொருள்எல்லாம் மெய்யே யானும் துணிந்து ஒழிந்தேன். (9)

அனைத்து உயிர்களுக்கும் ஒப்பற்ற காரணம் ஆனவனே, அனைத்து உயிர்களுக்கும், ஈசனே, நல்லவர்கள் புகழும் தேவர்களுக்கும், உலகங்களுக்கும் தலைவனே, என்னைப் பற்றி யான் அறிவித்தால் அல்லாது யாரும் அறியமாட்டார். ஆனால் ஒருவரின் உபதேசமும் இன்றி என்னை யானே அறிவேன் என அருளிச் செய்த சொல்லால் உள்ள அப்பொருள்கள் எல்லாம் சத்தியமே. நானும் அதனை உறுதி செய்து கொண்டு சந்தேகம் தெளிந்தேன்.

மெய்வகைய உலகின்இடை வேறுவே றாய்நிற்பது
எவ்வகைய உருவம்உனைச் சார்ந்ததுஎன அறிகில்லேன்
அவ்வகைய எப்பொருளும் ஒளியாமல் அடியேனுக்கு
உய்வகைய நெறிஆக உரைத்துஅருள்என் றேஉரைப்பான். (10)

வெவ்வேறாய் நிற்பனவான உலகத்திலே எப்படிப் பட்ட உருவங்கள் மெய்மையான தன்மையினை உடைய உனது பெருமை (விபூதி) என்று நான் அறிந்திலேன். அப்படிப் பட்ட உன்னுடைய பெருமையை விளக்கும் அனைத்துப் பொருள்களையும் உம்மையே தஞ்சம் என்று நம்பிய அடியவனுக்குப் பிழைக்கும் படியான வழி அதுவேயாக உரைத்து அருள்க என்று வினவிப் பின்னரும் கூறினான்.

பருகாநின் றேற்குஉனது திருவாக்காம் பராமிருதம்
ஒருகாலும் ஆர்கின்றது இலைஅடியேற்கு உரைஎன்ன
வருகாலம் நிகழ்காலம் செல்காலம் என்றஇவற்றில்
பெருகாத குறையாத பெருமாயன் பேசுவான். (11)

உமது திருவாக்கு ஆகிய மேலான அமுதத்தைப் பருகும் எனக்கு ஒருபோதும் திகட்டுவது இல்லை. இதனால் அடியேனுக்கு இன்னும் நீர் உபதேசித்து அருள்க என்று அருச்சுனன் கேட்க, இறந்த காலம், எதிர்காலம், நிகழ்காலம் ஆகிய முக்காலங்களிலும் வளர்தலும் குறைதலும் இல்லாத பெருமை உடைய மாயன் ஆகிய கண்ணன் பேசத் தொடங்கினான்.

இறந்தஎன் விபூதிக்குஓர் எல்லை இன்மையின்
பிறந்தன முடிவுஉறப் பேச ஒண்ணுமோ
அறந்தரு மனத்தினாய் அவற்றி லேசில
சிறந்தன கூறுவன் என்று செப்புவான். (12)

அறம் செய்ய விரும்பும் மனத்தை உடைய அருச்சுனா, எல்லாவற்றையும் கடந்த என்னுடைய பெருமைக்கு ஓர் எல்லை இல்லாமையால் உண்டான அவைகளைப் பற்றி முடிவாகப் பேச இயலுமோ? ஆதலால் அவற்றிலே சில சிறந்த விரிவான பெருமைகளை உனக்குக் கூறுகின்றேன் நீ கேள் என்று கூறத் தொடங்கினான்.

ஓதில் பெருகும் பூதங்கட்கு எல்லாம் இதயத்துள்உயிர்நான்
பேதித் திடும்இப் பொருட்குஎல்லாப் பிறப்பு நிலைகேடு ஆவேன்நான்
ஆதித் தியரில் விட்டுணுநான் மருத்து வரின்ம ரீசியும்நான்
சோதிக் கதிரில் ஒளிர்இரவி என்று சொல்லப் படுவேன்நான். (13)

என் பெருமைகளில் முக்கியமானவைகளைப் பற்றிச் சொன்னால், எங்கும் விரிந்து நிற்கும் உயிர்களுக்கு எல்லாம் இதயத்தில் நானே ஆன்மாவாக இருக்கின்றேன். பலவிதமாக இருக்கும் இவ்வுயிர்களுக்கு எல்லாம் பிறப்பும், நிலைபேறும், அழிவும் நானாகவே இருக்கின்றேன். ஆதித்தியர் பன்னிருவருள் விஷ்ணு என்னும் பெயருடன் நான் இருக்கின்றேன். ஏழு மருத்துக்களில் மரீசியும் நானே. ஒளி மயமான பொருள்களில் நான் சூரியனாக இருக்கின்றேன்.

சந்தி ரன்நான் நாண்மீனில் சாமம் நான்ம றைகளினில்
இந்தி ரன்நான் தேவர்களில் இந்தி ரியங்க ளில்மனம்நான்
எந்தி ரம்ஆம் உருவுகளில் சேத னம்நான் உருத்திரரில்
மந்தி ரம்ஆம் சங்கரன்நான் இயக்க ரில்லைச் சிரவணன்நான். (14)

வானில் உள்ள விண்மீன்களில் அனைத்திற்கும் அதிபதியான சந்திரனாக நான் இருக்கின்றேன். இருக்கு முதலான வேதங்கள் நான்கினில் நான் சாம வேதமாக இருக்கின்றேன். தேவர்களில் அனைத்துத் தேவதைகளுக்கும் அதிபதியான இந்திரனாக நான் இருக்கின்றேன். அனைத்து இந்திரியங்கள் உள்ளும் நான் மனமாக இருக்கின்றேன். இயந்திரம் போலச் சுழன்று கொண்டு இருக்கும் உயிர்களில் அறிவுடைய (சேதனம்) பொருளாக நான் இருக்கின்றேன். உருத்திரர் பதினொருவருள் மந்திர வடிவான சங்கரனாக நான் இருக்கின்றேன். இயக்கர்களில் குபேரனாக நான் இருக்கின்றேன்.

மலைகளில் மாமேருவும்நான் வசுக்களில்பா வகனும்யான்
தலைவர்களில் அறுமுகன்நான் சலநிலையில் சாகரம்நான்
இலயம்இலா யாகத்தில் செபயாகம் ஆவேன்நான்
நிலைஉடைய எனும்இவற்றில் இமவானாய் நின்றேன்நான். (15)

மலைகளில் பெரிய மேரு மலையாக நான் இருக்கின்றேன். எட்டு வசுக்களில் அக்கினியாக நானே இருக்கின்றேன். தலைவர்களுள் தேவ சேனாபதியான ஆறுமுகக் கடவுளும் நானே. நீர் நிலைகளுள் நான் கடலாக இருக்கின்றேன். கெடுதல் இல்லாத யாகங்கள் பலவற்றுள் ஜப வடிமான யாகமும் நானே. உலகிலே நிலையாக உள்ள அனைத்துப் பொருள்களிலும் நான் இமய மலையாக நிற்கின்றேன்.

பெருமுனியில் பிருகுவும்நான் புரோகிதரில் பீதகன்நான்
மருவியவாக்கு அவற்றுஓம்நான் மரங்களிலே அரசதும்நான்
பொருஅரிய நாரதன்நான் புத்தேள்மா முனிவர்களில்
திருஇயல்கந் தருவர்களில் சித்திரத்தேர் அவனும்யான். (16)

பெரிய முனிவர்களில் பிருகு முனிவனும் நானே. புரோகிதருள் இந்திரனின் புரோகிதரான பிரகஸ்பதியும் நானே. பொருந்திய அனைத்து வாக்குகளிலும் ஓங்கார ஒலியாக இருப்பதும் நானே. அனைத்து மரங்களிலும் அரச மரமாக இருப்பதும் நானே. தேவமுனிகளின் நடுவில் உவமை சொல்லிட இயலாத நாரத முனியும் நானே. சிறந்த கானம் உடைய கந்தருவருள் சித்திரரதன் என்னும் கந்தருவனும் நானே.

சித்தர்களில் கபிலமுனி தேசிகளில் கடல்பிறந்த
உத்தமம்ஆம் புரவிஎனும் உச்சைச்சி ரவம்நானே
அத்தம்உடை விலங்குகளில் யான்அயிரா வதம்ஆவேன்
வித்தகமா னுடப்பிறப்பில் வேல்வேந்தர் ஆவேன்நான். (17)

சித்தர்களில் கபில முனிவனாக இருப்பதும் நானே. குதிரைகளுக்குள் பாற்கடலில் பிறந்த உச்சைச் சிரவம் என்னும் குதிரையாக நான் இருக்கின்றேன். யானைகளில் அயிராவத யானையாக நான் இருக்கின்றேன். அறிவுடைய மானிடப் பிறப்பில் வேலுடைய அரசனாகப் பிறப்பவனும் நானே.

படைகளில் வச்சிரம் பாம்பில் வாசுகி
அடைவுஅரும் அனந்தன்நல் நாகர் தங்களில்
கொடைபயில் சுரபிகோ குலத்தில் கூறிய
அடைவொடும் இவைஎலாம் யான்என் றேஅறி. (18)

படைகளில் ததீசி முனிவரின் எலும்பினால் செய்யப் பட்ட வச்சிரப் படையும் நானே. பாம்புகளுள் வாசுகியும் நானே. நல்ல நாகர்களுக்கு உள்ளே உவமை கூறுதற்கு அரியதான அனந்தனும் நானே. பசுக் கூட்டத்தில் வேண்டியவற்றைக் கொடுக்கும் காமதேனுவும் நானே. இவை எல்லாம் சொல்லிய முறையால் அனைத்தும் நானே என்று அறிவாயாக.

**வருணனும் இயமனும் வரைவுஇல் காமமும்**
**பெருமைசெய் அசுரரில் பிரக லாதனும்**
**இருமையின் எண்ணலில் காலம் யான்எனச்**
**செருமலி தோளினாய் தெளியத் தேறுவாய். (19)**

போரினை விரும்பும் தோள்களை உடைய அருச்சுனா, நீரிலே சஞ்சரிக்கும் உயிர்களுக்கு அரசன் ஆன வருணனும், இயமனும், புத்திர உற்பத்திக்கு ஏதுவான காமனும், பெருமை தரக் கூடிய அசுரர்களுள் பிரகலாதனும், மிகுதியாகக் கணிக்கப் பட்டவைகளுள் காலமும் நானே என்று சந்தேகம் நீங்கும்படி தெளிவாய் அறிந்து கொள்க.

**பொராஅரும் கருடன்நான் புள்ளின் மாக்களில்**
**விராவரும் மடங்கல்நான் வாயுவே கம்நான்**
**இராமன்நான் எறிபடை வீரர் தங்களில்**
**கராமும்நான் மீன்களில் ஆற்றில் கங்கைநான். (20)**

பறவைகளில் கருடன் நானே. விலங்குகளில் நெருங்குதற்கு அரிய சிங்கம் நான். வேகமான பொருள்களில் காற்று நான். அம்பெய்யும் வீரர்களில் நான் இராமன். மீன்களில் மகர மீன் நான். ஆறுகளில் புனிதமான கங்கை நான்.

**மிக்கசொல் தொகையில் வாதம்நான் அரிய**
**விச்சையில் பிரம விச்சைநான்**
**அக்கரங் களில்அ காரம்நான் அழிவில்**
**காலம்நான் அதுவும் அன்றியே**
**தக்கதொந் துவச மாசம்நான் இருவினைப்**
**பயன்கள் தருவே னும்நான்**
**மிக்கமன் உயிர்க ளைக்கொல் வேனும்**
**அவைஉற் பவம்செயு வேனும்நான். (21)**

மேலானதாக விளங்கும் வாதம், ஜல்பம், விதண்டை என்னும் இம்மூன்றில் வாதம் நான் ஆகின்றேன். வீடுபேற்றிற்கு ஏதுவான வித்தைகளில் பிரம்ம வித்தையாக நானே இருக்கின்றேன். எழுத்துக்களில் அகரமாக நானே இருக்கின்றேன். அழிவற்ற காலமாகவும் நானே இருக்கின்றேன். அதுவும் அன்றிக் கூட்டுச் சொற்களில் துவந்துவ சமாசம் என்ற உம்மைத் தொகைச் சொல் ஆக உள்ளேன். இருவினைப் பயன்களைக் கொடுப்பவனும் நானே. உயிர்களை அழிப்பவனும் நானே. மீண்டும் படைப்பவனும் நானே.

**பெண்க ளில்புகழ் திருசொல்மே தைபொறை**
**திண்மை பேசுநினைவு என்னவே**
**எண்ப குத்தஎழு வோரும் நான்இருது**
**ஆறில் வந்தஇள வேனில்நான்**
**நண்ப நற்பெரிய சாமம்நான் உரிய**
**சாமம் ஏழினும் நலத்தினால்**
**மண்க ளிப்ப வருதிங்க ளில்புகழ**
**நின்றமார் கழியும் மற்றுநான். (22)**

நண்பனே, அருச்சுனா, பெண்களிலே புகழ், செல்வம், வாக்கு, பொறுமை, மேதை, திண்மை, நினைவு என்று வேதம் வகுத்து உரைத்த ஏழு தன்மைகளும் நானே. ஆறு பருவ காலங்களில் நான் வசந்த காலமாக இருக்கின்றேன். கானத்திற்கு உரிய சாமகானம் ஏழனுள் 'ப்ருஹத்சாம' என்ற சிறந்த சாம கானமாக நான் இருக்கின்றேன். தாம் செய்கின்ற உதவிகளினால் மண்ணுலகத்தோர் மகிழும்படி வருகின்ற பன்னிரண்டு மாதங்களில் நான் மார்கழியாக இருக்கின்றேன். மேலும் சிறந்து விளங்கும் மற்றைப் பொருள்களாகவும் நானே இருக்கின்றேன்.

கல்ஆரும் தோள்உடையாய் கவிகளில்கா யத்திரிநான்
தொல்ஆயங் களில்சூது துணிவார்பால் துணிவதுநான்
வெல்வார்பால் வெற்றியும்நான் மிகுதிறலோர் பால்திறம்நான்
நல்லார்பால் நன்மையும்நான் ஞானிகள்பால் ஞானமும்நான். (23)

மலை போன்ற தோள்களை உடைய அருச்சுனா, மந்திரங்களில் நான் காயத்திரி மந்திரம். வஞ்சிக்கும் பொருள்களில் பழைமையான சூது நான். முயற்சியுடன் துணிந்து செயல் செய்பவர் பயனடைய அத்துணிவாக நானே இருக்கின்றேன். வெல்லும் நினைவுடன் இருப்பவர்க்கு அவ்வெற்றியும் நானாகவே இருக்கின்றேன். மிகுந்த வலிமை உடையவருக்கு அவ்வலிமையாக விளங்குவதும் நானே. நல்லவர்களிடத்துள்ள தர்மம், வைராக்கியம் முதலிய நன்மையும் நானே. ஞானிகளிடம் ஞானமாக விளங்குவதும் நானே.

கண்ணனும்நான் யாதவரில் கவிகளிலே உசனாநான்
தண்அளிசேர் பாண்டவரில் தனஞ்சயன்நான் ஆகின்றேன்
விண்உலவும் முனிவர்களில் வேதவியா தனும்நானே
எண்அரிய மறைவுகளில் இயம்பாமை ஆவேன்நான். (24)

யாதவர்களில் உனக்குப் பிரம்ம வித்தையை உபதேசிக்கும் வசுதேவ புத்திரன் ஆன கண்ணனும் நானே. கவிகளிலே சுக்கிரன் என்ற கவியும் நானே. கருணை பொருந்திய பாண்டவரில் அருச்சுனன் நான் ஆகின்றேன். மேல் உலகங்களில் உலவிக் கொண்டு இருக்கின்ற முனிவர்களில் வேத வியாசராக விளங்குபவனும் நானே. எண்ணுதற்கு அரிய ரகசியப் பொருள்களில் மௌனமாக நான் இருக்கின்றேன்.

இரும்புவனம் அனைத்தினுக்கும் வித்துநான்
எனைப்போக்கி யாதும் இல்லை
வருந்தினும்என் பெருமைக்கு வரம்புஉரைக்க
முடியாது வகுத்துச் சொன்னேன்
பெருந்திருவை உடையனமெய்ப் பெருமுயற்சி
யனஎன்று பேசும் இந்த
அரும்பொருள்கள் அனைத்தும்எனது ஒளியினால்
வருவனஎன்று அறிதி நீயும். (25)

பெருமை பொருந்திய இவ்வுலகம் அனைத்தினுக்கும் காரணம் நானே. பரம்பொருள் ஆன என்னை நீக்கி எப்பொருளும் இல்லை. எத்திறமை உடையவரும் என் பெருமைக்கு எல்லை கூற முடியாது. இப்படிப்பட்ட என் பெருமையை உத்தேசமாக வகுத்துக் கூறினேன். இவ்வுலகில் பெருமை பொருந்திய சிறப்பு உடையனவும், உண்மையான முயற்சி உடையனவும் என்று சொல்லும் இந்த அரும்பொருள்கள் அனைத்தும் எனது சுயம்பிரகாசமான அம்சத்தால் தோன்றியன என்பதை நீயும் அறியக் கடவாய்.

பலஇனி உரைத்துஎன் இந்தப் பல்உயிர் அனைத்தும் எல்லா
உலகமும் ஒடுங்கி நிற்பது என்னில்ஓர் இடத்தின் உள்ளே
கலவலன் அவற்றோடு என்றான் கஞ்சனார் உயிர்போய்த் துஞ்ச
அலைகடல் வளரா தேபேர்ந்து ஆயர்பால் வளர்ந்த பெம்மான். (26)

*கம்சனின் அரிய உயிர் நீங்கி அவன் இறக்குமாறு செய்ய அலையுடைய திருப்பாற் கடலிலே கண் வளராது பெயர்ந்து சென்று ஆயர்மனையில் குழந்தையாய் வளர்ந்த பகவான் அருச்சுனனை நோக்கி, என்னுடைய பெருமையை அநேகமாக உனக்குக் கூறினேன். உத்தமனான உனக்குக் கூறி என்ன பயன்? இங்கு உள்ள உயிர்கள் அனைத்தும், எல்லா உலகங்களும் அடங்கி நிற்பது, பரம்பொருள் ஆகிய எனது ஓர் அம்சத்தின் உள்ளே, நான் அவைகளிடத்தில் இல்லை என்று அருளிச்செய்தான்.*

பத்தாவது விபூதி யோக அத்தியாயம் நிறைவுற்றது.






# பதினொன்றாவது விசுவரூப அத்தியாயம்

சுருள்ஆர் கின்ற துழாய்முடியாய் சொல்லும் மனமும் தொடர்வுஅரியாய்
உருள்ஆர் சகடம் இறஉதைத்தாய் உயிர்கட்கு எல்லாம் உள்உயிரே
இருள்ஆர் பவத்தே கிடந்துஉழைக்கும் என்பால் இரங்கி நீஇசைத்த
அருள்ஆர் அமுதுஎன் செவிகளால் ஆரப் பருகி அயர்வுஒழிந்தேன். (1)

சுருள் பொருந்திய துளப மணிமாலை அணிந்த முடிஉடையவரே, வாக்காலும் மனத்தாலும் பற்றுதற்கு அரியவரே, உருளையாய் வந்த சகடாசுரன் மடியும்படி உதைத்தவரே, உயிர்களுக்கு எல்லாம் உள்ளுயிராய் இருப்பவரே, சோகம் நிறைந்த சம்சாரக் கடலில் மூழ்கி வருந்தும் எளியனான என்னிடத்துக் கருணை கொண்டு நீர் அருளிச் செய்த திருவாக்கு ஆகிய அரிய அமுதை என்னுடைய செவிகள் ஆகிய வாயினால் நிறையப் பருகி என்னுடைய மோகம் நீங்கினேன்.

தெரியா வகைநீ எங்கும்ஆய் நின்ற அந்தத் திருக்கோலம்
அரியாய் மெய்யே அடியேற்கும் காண லாமோ எனஅன்பால்
பரியா நின்ற சிந்தையொடும் பார்த்தன் வினவப் பழமறைதேர்
கரியான் அவனுக்கு அப்பரிசே காட்ட வேண்டிக் கட்டுரைப்பான். (2)

ஒருவராலும் காண்பதற்கு அரிய பெரியோனே! ஒருவருடைய கண்ணுக்கும் தோன்றாதபடி நீர் எங்கும் வியாபித்து நிற்கின்றீர். அந்த அற்புதமான திருக்கோலத்தை உள்ளபடியே அடியேனும் காணலாமோ? என அன்பினால் வருந்திய மனத்தோடு அருச்சுனன் வினவ, பழமறைகளால் ஆராயப்பட்ட பகவான் அவ்வருச்சுனனுக்கு அவன் விரும்பியவாறு காட்ட வேண்டி அதன்படி அருளிச் செய்வான் ஆயினன்.

எண்ணில் இயற்கையது எண்ணில் நிறத்தது
பண்ணி ஒருத்தர் படைத்துஅறி யாதது
விண்ணின் இயற்கை சுருங்க விரிந்தது
கண்ணின் அளப்பஅரிது ஆயது காணாய். (3)

என் திருவுரு பலவிதமான எண்ணற்ற இயற்கைகளை உடையது. அளவற்ற வண்ணங்களை உடையது. கற்பனையாக ஒருவர் படைத்து அறியாதது. வானத்தின் இயற்கை தன்னை நோக்கச் சுருங்கும்படி விரிந்தது. கண்ணாலும் அளவிடுதற்கு அரியது. அருச்சுனா! அதனை நீ காண்பாய்.

மருத்துவர் சூரியர் அட்ட வசுக்கள்
உருத்திரர் என்இடை யேஉளர் யாரும்
அருத்திசெய் அற்புதம் ஆய அநேகம்
கருத்துஉற என்இடை யேஉள காணாய். (4)

நாற்பத்து ஒன்பது மருத்துக்களும், பன்னிரண்டு சூரியரும், எட்டு வசுக்களும், பதினொரு உருத்திரரும், அசுவினி குமாரர் இருவரும் என்னிடையே உள்ளார். யாவரும்

காண விரும்பும் அற்புதமான அநேக வடிவங்களும் என்னிடத்தே உள்ளன. இதனை உன் கருத்தில் ஏற்றுக் கண்டு கொள்வாய்.

என்றுஅரு ளிச்செய் தவன்கண் இரண்டு
நன்றுஅறி யாஎன ஞானம் அளித்திட்டு
அன்றுஅவ னுக்குஅருள் செய்வகை யேஆய்
நின்ற வருக்குஅறி யாவகை நின்றான். (5)

என்று இவ்வாறு அருளிச் செய்து, அவ்வருச்சுனனின் கண்கள் இரண்டும் தம் புண்ணிய வடிவத்தை நன்கு அறியமாட்டா என்று எண்ணி, ஞானக் கண்ணை அருளி அவனுக்கு அருளிச் செய்த வண்ணமே பேருருவம் கொண்டு அவனைத் தவிர மற்றவர்கள் அறியாதவாறு நின்றான்.

அங்குமால் கொள்கோலம் இங்குஅளந்து கூறல் ஆகுமோ
கொங்குஉண் மாலைஆடை சாந்துகொண்ட கோலம் மேவியே
எங்கும்ஆகி எல்லையின்றி எண்ணில் கோடி பல்கதிர்
மங்குல்வானில் வந்துஉதித்த தொக்கு மற்றுஅ தன்கணே. (6)

அருச்சுனனுக்கு உபதேசம் செய்த அக்குருசேத்திரத்தில் பகவான் கொண்டு அருளிய பேருருவத்தை இங்கு ஒருவரால் வரையறுத்துக் கூறுதல் எளிது ஆகுமோ? ஆயினும் வண்டு தேனினை உண்ணும் படியான மாலைகளும், பொன்னிற ஆடைகளும், சந்தனம் முதலான நறுமணப் பொருள்களும் கொண்டுள்ள வடிவத்துடன் அருச்சுனன் காணுமாறு நின்றார். எல்லை இன்றி எங்கும் விரிந்து பரந்து நிற்கும் அக்காட்சி எண்ணற்ற பலகோடிச் சூரியர்கள் ஒரே சமயத்தில் வந்து உதித்ததைப் போல் இருந்தது. மற்றும் அப்பேருருவத்தின் கண்ணே!

ஏய்வகைய தாள்களொடு தோள்களும் அநேகம்
சாய்பெற அணிந்தஅணி தானும்முன் அநேகம்
வாய்களும் அநேகம்ஒளிர் வாள்முகம் அநேகம்
ஆயுதம் அநேகம்எழும் அற்புதம் அநேகம். (7)

பொருந்தும் தன்மை உடைய பாதங்களும், கைகளும் அநேகம். முன்பக்கம் அழகு பெறுமாறு அணிந்து இருக்கும் ஆபரணங்களும் அநேகம். வாய்களும் அநேகம். நல்ல ஒளி கொண்ட முகங்களும் அநேகம். சக்கரம், கதை முதலிய ஆயுதங்களும் அநேகம். உயர்வான அற்புதப் பொருள்களின் தரிசனமும் அநேகம்.

அவ்வகைய மாயன்அமர் கோலம்அதன் உள்ளே
எவ்வகைய வாயபொருள் யாவும்எதிர் காணா
உய்வகையன் ஆயினன் எனாஉவகை கூரச்
செய்வதுஅறி யாவிசயன் இவ்வகைசெய் தானால். (8)

பகவான் கொண்டு அருளிய முன் சொல்லிய தன்மைகளைக் கொண்ட பேருருவத்தின் உள்ளே எப்படிப் பட்ட தன்மையுடைய பொருள்கள் அனைத்தையும் நேரே தரிசித்து யான் பிழைக்கும் தன்மை உடையவன் ஆயினேன் என்று இன்பம் மேலிடத் தான் செய்வது இன்னது என அறியாது நின்ற அருச்சுனன் இனிக் கூறும் செய்கைகளைச் செய்யத் தொடங்கினான்.

மண்உற வணங்கும்மயிர்க் குச்உடல் நிரைக்கும்
கண்ணும்மன மும்கரைய நின்றுகை முகிழ்த்தே
எண்ணும்உல கங்களையும் யாவரையும் மேல்நாள்
பண்ணும்அவன் முன்புசில நின்றுபகர் வுற்றான். (9)

தனது தலையானது பூமியில் பொருந்தும்படி பேருருவம் கொண்டு அருளிய கண்ண பகவானை வணங்கினான். மயிர்க்கூச்சு உடல் நிறைந்திட, கண்ணும் மனமும் களித்து உருக நின்று, இருகரங்களையும் குவித்து, உலகங்களையும் அவ்வுலகங்களில் உள்ள அனைத்து உயிர்களையும் முன்னே படைத்தவனான பகவான் திருமுன்னர் சில சொற்களைச் சொல்லத் தொடங்கினான் அருச்சுனன்.

தேவரும் வணங்கு தேவ நின்திருக் கோலத்து உள்ளே
யாவரும் எல்லை காணாப் பொருள்எலாம் இசையக் கண்டேன்
மூவரின் முதற்புத் தேளை முனிவர்க ளோடும் கண்டேன்
மேவரும் நாகம் கண்டேன் விண்ணவர் குழாமும் கண்டேன். (10)

யாவராலும் வணங்குதற்குரிய கடவுளரும் வணங்கும் கடவுளே, உம்முடைய அழகிய பேருருவத்தின் உள்ளே யாவரும் அளவு காண இயலாத தாவர சங்கம வடிவான பொருள்கள் அனைத்தும் உமக்கு இசைவாக இருக்கும்படி கண்டேன். மும்மூர்த்திகளில் முதல்வனான நான்முகனை முனிவர்களோடும் கண்டேன். வாசுகி முதலிய நாகங்களையும் கண்டேன். தேவர் கூட்டத்தையும் கண்டேன்.

கண்களும் வயிறும் தோளும் முகங்களும் கருதி நோக்கில்
எண்பல உடைய வாய உருவுகள் அநேகம் கண்டேன்
தண்கதிர் முடியும் தண்டும் சக்கரப் படையும் ஏந்தி
ஒண்கதிர் கனலோடு ஒன்றாய் அனையநின் உருவின் உள்ளே. (11)

குளிர்ந்த கதிர்களை உடைய மகுடமும், கதையும், சக்கரப்படையும் தரித்து அருளி, அழகிய சூரியன் அக்கினி என்னும் அவைகளோடும் ஒன்றாய் விளங்கும் உன்னுடைய பேருருவத்தின் கண்ணே கண்களும், வயிறும், தோளும் முகங்களும் எண்ணிப் பார்க்கில் அநேகமாக உடைய பல வடிவங்களைக் கண்டேன்.

இந்தஉரு என்னஉரு என்றுஅறிய கில்லேன்
அந்தம்அறி யேன்நடுவும் ஆதியும் அனைத்தும்
நந்தல்அறி யாதுஅதனை நான்மறையும் நாடித்
தந்தபொருள் ஆயதனை மாயைதரு சார்பை. (12)

இந்த உருவமானது எந்த உருவம் என்று நான் உறுதி செய்திலேன். இறுதி, நடுவு, முதல் ஆகிய இவை அனைத்தையும் அறியேன். அழிவிலாத பிரம்மத்தை நான்கு வேதங்களும் ஆராய்ந்து முமுட்சுக்களும் அறியும்படி உபதேசித்த வஸ்துவை மாயையால் உண்டான உலகுக்குச் சார்பினை.

என்றும்உள தாயதை இயல்தருமம் எல்லாம்
நின்றுபிற ழாவகை நிறுத்துநெறி வாழ்வைச்
சென்றுகுறை யாததனை என்பழைய தேவைக்
கன்றுதொட ராப்பரிசு நின்றுஎன்எதிர் கண்டேன். (13)

என்றும் நிலை பெற்றதை, இயல்பான முழுமையான அறத்தைத் தன் நிலையில் இருந்து மாறுபடாதபடி நிலை நிறுத்தும் செல்வத்தை, ஒருநாள் பெருகி ஒருநாள் குறையாததனை, என் பழைமையான தெய்வத்தை, கன்றைத் தொடரும் பசுவின் தன்மை போல என் எதிரிலே நின்றிட நான் தரிசித்தேன்.

வலம்தரு திறத்தொடு வருங்கதிர் இரண்டே
அலர்ந்துஎழ விழிப்பதை அடும்கனல் நெருப்பை
மலர்ந்துஎழு முகத்ததை மயங்கஉலகு எங்கும்
கலந்துசுடல் உற்றதை வியந்துஎன்எதிர் கண்டேன். (14)

வெற்றியைத் தரும் திறமையோடு, வருகின்ற சூரிய சந்திரரையே விரிந்து எழுமாறு கண்களாக விழித்து நிற்பதை, சேர்ந்தாரைக் கொல்லும் சூடுடைய நெருப்பை விரிந்த முகமாக உடையதை, எல்லாம் மயங்கும்படி உலகு எங்கும் பரந்து தம் ஒளியால் சுடுகின்ற உம் பேருருவத்தை என் எதிரே கண்டு வியந்து தரிசித்தேன்.

நிலத்தினொடு வான்உற நிமிர்ந்துதிசை நேர்போய்
விலக்கம்அற நீஉனது மேனியை விரித்தால்
அலக்கண்அடை யாதவர்கள் ஆர்அடைய ஐயா
கலக்கம்உறு கின்றஉல கங்கள்இவை காணாய். (15)

பூமியோடு வானம் நிறையும்படி உயர்ந்து, திசைகளில் நேரே சென்று விலகுதல் இன்றி நீ உமது வடிவத்தை விரியச் செய்தால், அற்புதத்தோடு உக்கிரமாய் உள்ள உன் திருமேனியைக் கண்டு துன்பம் அடையாதவர்கள் யாவர்? உலகங்கள் யாவும் கலங்கி அச்சம் அடைவதை நீர் காண்பீராக.

வணங்கஇமை யோர்கள்அரு மாதவர் வழுத்தக்
கணங்கொடு வியந்துபுகழ் சித்தர்தொகை கண்டேன்
உணங்கும்உயிர்த் தானவர்கள் கந்தருவர் உள்ளோர்
இணங்கிஇனர் என்றுஅறி கிலாரைஎதிர் கண்டேன். (16)

தேவகணங்கள் வணங்கவும், அருமையான பெரிய தவத்தினை உடைய முனிவர்கள் வணங்கவும், கூட்டமாகக் கூடிக்கொண்டு வியந்து புகழும் சித்தர் கூட்டங்களைக் கண்டேன். சோர்ந்து நிற்கும் உயிரை உடைய அசுர கணங்களையும், கந்தருவர்களையும், மேலும் இத்தன்மையோர் என அறியத் தகாதவர்களையும் என் எதிரே நிற்கும் உம்முடைய பேருருவத்தில் கண்டேன்.

வான்அடைய விம்மிவரு ணம்பல உடைத்தாய்ப்
பேய்நடைய வாயபிறை போல்எயிறு பேழ்வாய்
தான்உடைய வாயபன் முகம்பல தழைக்கும்
யான்அடைய லாம்வகையது அன்றுஇவ்உரு எந்தாய். (17)

எம் தந்தையாகிய பகவானே, வானமெங்கும் விரிந்து அநேக வண்ணங்களை உடையதாய்ப் பேயின் ஒழுக்கத்தை விரும்பிய பிறை போன்ற பற்களையும், பெரிய வாய்களையும் உடையனவாகிய பற்பல முகங்கள் பலவாக வளர்ந்து நிற்கும். ஆதலால் இந்த வடிவம் யான் அடையத் தக்க தன்மையதன்று.

தஞ்சம்இவ் உலகுக்குஎல்லாம் ஆய்நின்ற தன்மைகண்டேன்
உஞ்சினன் எனினும்மற்றுஉன் உருவுஉறக் காணக்காண
நெஞ்சமும் நடுங்காநிற்க நிலைஇலை திசையும்காணேன்
அஞ்சல்என்று அருளவேண்டும் அகிலமும் ஆயஎந்தாய். (18)

எல்லா உலகுமாய் நின்ற பெருமானே, இவ்வுலகுக்குத் தஞ்சமாயும் உலகம் முழுதுமாய் நீரே நிற்கின்ற தன்மை கண்டேன். இதனால் நான் பிழைத்தேன் ஆயினும் உமது பேருருவத்தைப் பார்க்கப் பார்க்க, ஒன்றுக்கும் அஞ்சாத என் நெஞ்சம் நடுங்கி எதிரே

நிற்கும் வலிமையை இழந்து உள்ளேன். வேறு திசைகளையும் நான் காணவில்லை. தாங்கள் அஞ்சேல் என்று அருள் செய்திட வேண்டும்.

**நூற்றுவர் தாமும்தங்கள் சேனையும் அவர்கட்காக**
**ஏற்றுஎதிர் அரசர்தாமும் என்படை தாமும்உன்றன்**
**கூற்றுஉறழ் எயிற்றில்பட்டுக் குறைஉடல் ஆகிநின்று**
**காற்றுஉறு தீயின்அன்ன முகங்களில் வீழக்கண்டேன்.** (19)

கௌரவர்களாகிய நூற்றுவரும், அவர்களது படைகளும், அவர்களுக்காகப் போரை மேற்கொண்டு எங்களை எதிர்த்து வந்துள்ள சல்லியன் முதலான அரசர்களும், என் படைகளும், அவற்றைச் சார்ந்த அரசர்களும் உமது எமனுக்கு நிகரான வளைந்த பற்களில் பட்டு, குறை உடல் உடையவர்கள் ஆகி நின்று, காற்றோடு சம்பந்தித்த நெருப்பினுக்கு ஒப்பான உம்முடைய முகங்களில் விழும்படிக் கண்டேன்.

**ஓதரு நதிகள் எல்லாம் கடல்அடைந் தாற்போல் உன்னில்**
**போதரு பொருள்கள் எல்லாம் நின்உளே புகுதக் கண்டேன்**
**தீதனில் விட்டில் பாய்ந்தால் போலநின் முகங்கள் உள்ளே**
**மாதவ உயிர்கள் எல்லாம் வீழ்ந்துமாய்குனவும் கண்டேன்.** (20)

இவ்வளவு என்று சொல்லுதற்கு அரிய அனைத்து ஆறுகளும், பெருங்கடலிலே புகுந்தாற் போல எல்லாப் பொருள்களும், உன்னால் உண்டான உயிர்களும் உன்னிடத்தே புகுந்திடக் கண்டேன். தீயினுள் விட்டிற் பூச்சி பாய்ந்தாற் போல, பகவானே, சூரியனைப் போன்ற உன் முக மண்டலத்தின் உள்ளே உயிர்கள் எல்லாம் வேகத்தோடு வீழ்ந்து மாய்வதையும் கண்டேன்.

**ஒளியினால் உலகம் எல்லாம் ஒழித்துஅவை ஊண்போ தாமல்**
**வெளியில்நா நீட்டி நீட்டி வெறும்சுவை கொள்ளா நின்றாய்**
**தெளிகிலேன் உன்னை உன்றன் செய்கையும் தெரிக்க மாட்டேன்**
**அளியினால் அடியேற்கு உன்னை உள்ளவாறு அருளிச் செய்வாய்.** (21)

ஒளி மிக்க உன் முகங்களால் உலகம் (முன்சொன்ன துரியோதனாதியர் முதலியோர் உயிர்) அனைத்தையும் உணவாக உண்டு அவைகளும் போதாமல் வெளியிலே நாவை நீட்டி நீட்டி வெறும் சுவையை உட்கொள்கின்றீர். இப்படிப் பட்ட உன்னுடைய உக்கிரத் தன்மை பற்றி யான் ஒரு தெளிவும் இல்லாது இருக்கின்றேன். உமது செய்கைதான் என்ன? என்பதையும் அறிய இயலாதவனாய் உள்ளேன். அடியவன் மேல் கருணை கொண்டு உம்மை உள்ளபடி அருளிச் செய்வீராக!

**என்றுஅவன் வணங்கிக் கேட்ப யாவும்ஆய் எல்லை இன்றி**
**நின்றவன் உரைப்பான் உன்னை ஒழியநின் றவரை எல்லாம்**
**கொன்றுஉயிர் பருகல் உற்றேன் கடையுகம் குறுகல் உற்ற**
**அன்றுஉலகு அடைய மாய்க்கும் அவன்யான் அறிநீ ஐயா.** (22)

இவ்வாறு அருச்சுனன் வணங்கிக் கேட்க, எல்லை இன்றி எங்கும் நிறைந்து உள்ள பகவான் கண்ணன் உரைக்கத் தொடங்கினான். அருச்சுனனான உன்னைத் தவிர, பூமிக்குப் பாரமாய் இருக்கின்ற துரியோதனாதியரை எல்லாம் அழித்து அவர்கள் உயிரை உண்ண இவ்வடிவு கொண்டேன். யுகம் முடிவு அடையும் போது உலகம் முழுவதையும் அழிப்பேன். அப்படி அழிக்கும் கால வடிவுடைய பரம்பொருளும் நான் ஆகின்றேன். இவ்வாறாக என்னையும் என் செயலையும் உணர்ந்து கொள்!

இறந்தாரே எனக்கருதுஇங்கு இவர்கள்எலாம் என்னாலே
அறம்தானும் அதுநீயே ஆங்குஅவரைக் கொன்றாயேல்
சிறந்தாய அரசினையும் செயத்தினில்வாழ் திருவினையும்
பிறந்தார்கள் பெறாதபெரும் புகழினையும் பேண்என்றான். (23)

*அருச்சுனா, இங்கு உன் பகைவர்கள் ஆகிய துரியோதனாதியர் யாவரும் என்னால் இறந்தனர் என்றே கருது. அவரை நீ கருவி மாத்திரமாய்க் கொன்றாய் ஆகில் அது அறத்தையும், புகழையும் தருவதாகும். உயர்ந்தது ஆகிய அரசினையும், வெற்றித் திருவையும், மண்ணினில் பிறந்தார் இதுவரை பெறாத பெரும் புகழினையும் அடைய விரும்பிப் போருக்குத் தயார் ஆவாய் என்று அருளிச் செய்தான் பகவான் கண்ணன்.*

இவ்வகை மொழியக் கேட்ட விசயன்என் செய்தான் என்னில்
கைதலை மிசைய வாகக் கட்டுரை குழறக் கண்ணீர்
பையவே நெஞ்சிற் சோரப் பயத்தொடும் பரிவி னோடும்
மைவரை எடுத்த வள்ளல் பெருமையை வழுத்தல் உற்றான். (24)

*இவ்வாறு பகவான் அருளியதைக் கேட்ட அருச்சுனன் என்ன செய்தான் என்று திருதராட்டிரரே நீர் கேட்கில், அவன் தன் கைகளைத் தலையின் மீது வைத்துக் கொண்டு, சொற்கள் தடுமாற, கண்ணீர் மெல்லவடிந்து மார்பின் மேலே வடிய, அச்சத்தோடும் அன்போடும் மேகம் சூழ்ந்த கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த கண்ண பெருமானின் பெருமையைத் துதிக்கத் தொடங்கினான்.*

ஞானம்முதல் இந்தியங்கள் அனைத்திற்கும் நாயகனே
ஊனவினைத் தளைஅறுப்பாய் உன்னுடைய புகழ்கேட்கில்
வானவரும் சித்தர்களும் மனங்களித்து மகிழ்வுஎய்தத்
தானவரும் அரக்கர்களும் சாய்துயரப் படுவர்களால். (25)

*ஞானேந்திரியம் முதலான அனைத்து இந்திரியங்களையும் நடத்துபவரே, ஊனமாகிய வினை விலங்கை அறுப்பவரே, உம்முடைய புகழைச் செவிகளால் கேட்கத் தேவர்களும், சித்தர்களும் மனங்களித்து மகிழ்ந்து இருக்க, அசுரரும், இராட்சதரும் மரண பயத்தை அடைவார்கள்.*

கையும் பதமும் திருவாயும் கண்ணும் செய்ய கருமுகிலே
ஐயம் பொருளும் அறிவுஅரியாய் அயனார் தாயே அந்தம்இலாய்
மெய்யும் பொய்யும் இல்லாதாய் எல்லாம் ஆகி விரிந்தாயே
உய்யும் பரிசு நினைந்தவர்கள் உன்னை வணங்கா தவர்உளரோ. (26)

*திருக்கரங்களும், திருப்பாதங்களும், திருவாயும், திருக்கண்களும் சிவப்பாகக் காணப்படும் கரிய மேகமே, இருபத்தைந்து தத்துவங்களாலும் அறிதற்கு அரியவரே, நான்முகனுக்குத் தாய் ஆனவரே, முடிவு இல்லாதவரே, மெய்யும் பொய்யும் இல்லாதவரே, எல்லாம் ஆகி எங்கும் பரந்திருப்பவரே, இந்தச் சம்சாரக் கடலிலிருந்து விடுபட விரும்பினோர் உன்னை வணங்காது இருப்பார்களோ?*

ஆதி தேவன் ஆவாய்நீ யாக்கைக்கு அமைந்த ஆர்உயிர்நீ
ஏதும் அறியப் படாதவன்நீ எல்லாம் கடைக்கால் புகல்இடம்நீ
ஓதின் உணர்கின் றாயும்நீ உணர்வால் உணரப் படும்பொருள்நீ
நீதி யமனாய் அழிப்பாய்நீ நீரும் காற்றும் ஆவாய்நீ. (27)

முழுமுதற் கடவுள் நீரே, அனைத்து உடல்களுக்கும் உயிராக அமைந்தவர் நீரே. யாவராலும் அறியப் படாத பழைமை உடையவரும் நீரே. உலகம் அனைத்தும் இறுதியில் சென்று ஒடுங்கும் இடமும் நீரே. இன்னும் சொல்லப் போனால் அனைத்தையும் அறிந்தவர் நீரே. அறிவால் அறியப்படும் உலகம் முழுமையும் நீரே. நீதி உடைய எமனாய் நின்று உலகை அழிப்பவரும் நீரே. நீராகவும், காற்று ஆகவும் இருப்பவர் நீரே.

ஏயும் பரிசுஇவ் உலகுஎல்லாம் என்றும் பிறப்பித் திடுகின்ற
தாயும் பிதாவும் ஆவாய்நீ தந்தை தந்தை தாதையும்நீ
ஆயும் படியே அல்லாத ஐயா உன்னை அடியேன்என்
மாயும் பிறவித் துயர்தீர நூறுஆ யிரக்கால் வணங்கினனே. (28)

பொருந்தும்படி இவ்வுலகங்களை எல்லாம் எப்பொழுதும் உண்டாக்குகின்ற தந்தையும் தாயும் ஆனவர் நீர். தந்தைக்குத் தந்தையாயும், பிதாமகராயும் ஆனவர் நீர். ஆய்வு செய்ய இயலாத அனைத்துத் தேவதைகளுக்கும் உரிய பகவானே, உம்மை அடியேன் என்னுடைய மாயும் பிறவித் துன்பங்கள் நீங்கும் பொருட்டு அநேகமாயிரம் முறை வணங்கினேன்.

என்பேர் இடும்பை கெடும்வண்ணம் இன்னம் தொழுதேன் எந்தாய்உன்
முன்பே தொழுதேன் உன்னுடைய பின்பே முறையால் வணங்கினனால்
அன்பே அடியேன் ஆர்உயிரே அகலா இந்தப் பெரும்பிறவி
வன்பே கெடஉன் தனைஎங்கும் மறித்தும் மறித்தும் வணங்கினனே. (29)

என் கடவுளே, என்னுடைய பெரிய உலக துக்கங்கள் கெடும்படி இன்னும் வணங்கினேன். உன் முன்னரும் வணங்கினேன். உமது பின்புறத்திலும் விதிப்படி வணங்கினேன். அன்பரே, என் அரிய உயிர் போன்றவரே, ஞானத்தால் அன்றி நீங்காத இந்தப் பெரிய பிறவியின் வலிமை கெடும் பொருட்டு எங்கும் பரவி உள்ள உம்மை எல்லாத் திசைகளிலும் மீண்டும் மீண்டும் வணங்கினேன்.

தேவதேவ நின்னில்வேறு தேவர்ஏது செய்திடும்
பாவம்ஏது அறங்கள்ஏது பற்றுயாது வீடுஎது
சாவதுஏது வாழ்வதுஏது அனைத்தும்ஆய தன்மைநீ
யாவதுஏதும் ஒன்றும்நான் அறிந்திலேன்என் மாயனே. (30)

கடவுளருக்கு எல்லாம் கடவுளே! என்னுடைய மாயனே, உன்னைக் காட்டிலும் வேறு கடவுள் உண்டோ? அறமும் பாவமும் நீ இல்லையேல் இல்லை. பொருள்களின் மேல் பற்றும், அதனை விடுத்த பின் கிடைக்கும் வீடுபேறும் ஏது? இறத்தலும் வாழ்தலும் ஏது? அனைத்திலும் ஒன்றாய் இருக்கும் தன்மை உடையவன் நீ. நீ இன்றி எதுவும் உண்டாகுமோ?நான் அறியவில்லை.

நீதிவேதம் வான்உளோர் நிலத்துஉளோர் நினைந்துநைந்து
ஓதிஓதி உள்கசிந்து உணர்ந்தும்உன்னை முன்னமே
சாதிபேதம் ஆகிவாழ் சராசரங்க ளுக்குஎலாம்
ஆதிமுலம் என்றுநான் அறிந்திலேன்என் மாயனே. (31)

என் மாயனே, நீதியும் வேதமும் நீ. வானில் உள்ளவரும், நிலத்தில் உள்ளவரும் நினைந்து வருந்தி உன் பெருமையைச் சொல்லிச் சொல்லி உள்ளம் கசிய உன்னை உணர்ந்தும், முன்னரே சாதி வேறுபாடுகளுடன் வாழும் இந்தச் சராசரங்களுக்கு எல்லாம் ஆதிமூலமாக விளங்குபவன் நீ என்பதை நான் அறிந்திலேன்.

சாயைபோலும் வாழ்வுமாடு வீடுதந்தை தாய்எனும்
பேயைஏறி மாறியே பிறந்துஇறக்கும் ஈதுஎலாம்
தூயைஆகி யாதும்ஓர் தொடக்குஇலாது நின்றநின்
மாயைஆவது என்றுநான் அறிந்திலேன் என்மாயனே. (32)

*என் மாயனே, நிழல் போன்று தோன்றி மறையும் வாழ்வு, செல்வம், வீடு, தந்தை, தாய் என்கின்ற பேய்களைப் பற்றி, மாறி மாறிப் பிறந்து இறக்கும். இவை எல்லாம் தூயதாகி யாதொரு தொடர்பும் இன்றி நின்ற உன் மாயையால் உண்டாவது என்பதை நான் அறிந்திலேன்.*

ஏறுமல்லு வென்றுகுன்று எடுத்தவண்ணம் எண்ணியே
கூறும்அல்லல் தீரஉம்பர் கூறுகின்ற கொண்டலே
வேறும்அல்லை ஒன்றும்அல்லை மெய்ம்மைகூறும் அப்பொருள்
ஆறும்அல்லை என்றுநான் அறிந்திலேன் என்மாயனே. (33)

*என் மாயனே, நீ கோசல அரசன் நக்னஜித்தின் மகளான ஸத்யா என்ற நப்பின்னைக்காகக் காளைகளை வென்றும், கம்ஸன் ஏவிய சாணூரண் முதலிய மல்லர்களை வென்றும் ஆயர்களைக் காக்கக் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த வண்ணத்தினையும் கூறிக் கூறித் தங்கள் துன்பம் தீருமாறு தேவர்கள் வேண்டிக் கொள்ளும் மேக வண்ணனே, நீ வேறாகவும் இல்லை, ஒன்றாகவும் இல்லை, உண்மையாகக் கூறப்படும் அப்பொருள் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதை நான் அறிந்திலேன்.*

யாதவாஎன் மைத்துனா அடாஅசோதை இன்உயிர்க்
காதல்ஆய காலிஆய கண்ணகண்ண என்றுநான்
ஓதல்ஆவது அன்றியே உரைத்ததீமை யாவையும்
ஆதகாதது என்றுநான் அறிந்திலேன்என் மாயனே. (34)

*அடா யாதவா, என் மைத்துனா, யசோதைக்கு இனிய உயிர் போன்ற புதல்வனே, பசுக்களை மேய்க்கும் இடையா, கண்ணா கண்ணா என்று நான் சொல்லத் தகாத இச்சொற்களைச் சொன்னதும் தவிர மேலும் சொல்லிய தீய சொற்களை எல்லாம் சொல்லக் கூடாதவை என்று முன்னரே நான் அறிந்திலேன் என் மாயனே!*

என்னுடைய தோழன்என வேகருதி யாதும்
உன்னுடைய மேன்மையினை ஒன்றும்உண ராதே
வன்மையினில் நின்மொழி மறுத்துஎதிர் உரைத்த
புன்மொழிகள் ஆனவை பொறுத்துஅருளு கண்டாய். (35)

*என்னுடைய தோழன் என மதித்து எல்லாவற்றிலும் மேலான பரம்பொருளான உன்னுடைய பெருமையைச் சிறிதும் மதியாமல் வன்மையோடு உன் திருவார்த்தைகளை மறுத்து எதிர்மறையாகக் கூறிய அற்ப மொழிகளைப் பொறுத்து அருள வேண்டும்.*

உண்ணல்விளை யாடுதல் உறங்குதல் இருத்தல்
பண்ணல்உறு போதுகளில் உன்பழைமை தன்னை
எண்ணிஅறி யாமையினில் வந்தபிழை எல்லாம்
கண்ணகரு ணாகர பொறுத்துஅருளு கண்டாய். (36)

*கண்ணனே, கருணாகரா, உண்ணுதல், விளையாடுதல், உறங்குதல், வீற்றிருத்தல் ஆகிய இவைகளைச் செய்கின்ற காலங்களில் உமது பழைமையான பெருமையை எண்ணி அறியாமையால் வந்த பிழை அனைத்தும் பொறுத்து அருள வேண்டும்.*

உண்டாய உலகுஅனைத்தும் ஈன்றாய் நீயே
எவராலும் உன்உண்மை உணர்ந்து கூறிக்
கொண்டாடப் படுவாய்நீ மெய்ம்மை நல்கிக்
குருவாகிக் குற்றங்கள் தீர்க்கின் றாய்நீ
என்றாலும் மறைஅனைத்தும் உன்னின் மிக்கார்
இல்லைஎன நின்றுஏது எடுத்துக் காட்டக்
கண்டாலும் நின்பெருமை காண மாட்டார்
கண்இலா தவர்வேறு காண்பது உண்டோ. (37)

தோன்றிய சராசர வடிவமான உலகங்கள் அனைத்தும் படைத்தவர் நீரே. இத்தகைய உன் உண்மை வடிவத்தை உணர்ந்து அனைவராலும் பரம்பொருளாய்ப் புகழ்ந்து துதிக்கப் படுகின்றவரும் நீரே. குருவடிவாய் வந்து உண்மையைக் காட்டி எமது குற்றங்களைத் தவிர்க்கின்றவரும் நீரே என்று பெரியோர் கூறினும் வேதங்கள் அனைத்தும் உம்மைவிட மேலோர் இல்லை என்று ஒரு முகமாக நின்று ஏதுக்களை எடுத்துச் சொல்லக் கண்டாலும் உமது அருளைப் பெறாதவர் உமது பெருமையைக் காண மாட்டார். கண் இல்லாதவர் வேறு உருவங்களைக் காண இயலுமா?

அறியாத பருவத்து மகன்செய் குற்றம்
அரும்தாதை பொறுத்தெனவும் ஆவி போலப்
பிறியாத தோழன்செய் குற்றம் நட்பில்
பெரியோர்கள் பொறுத்தெனவும் பேதை யேனாய்க்
குறியாது செய்துவரும் குற்றம் எல்லாம்
குணமாகக் கொண்டுஅருள வேண்டும் என்றே
வெறிஆரும் மலர்ப்பதங்கள் இடையே வீழ்ந்து
வேண்டிக்கொண்டு இவைஇன்னும் விளம்பல் உற்றான். (38)

விவரம் அறியாத இளம்பருவத்தினை உடைய மகன் செய்யும் குற்றத்தை அரிய தந்தை பொறுத்துக் கொண்டாற் போலவும், உயிர் போல நீங்காத பிரியமுடைய தோழன் செய்யும் குற்றத்தை நட்பில் மிக்கோர் பொறுத்துக் கொண்டாற் போலவும், அறியாமை உடைய நான் உம்மைக் குறித்துச் செய்து வரும் குற்றம் எல்லாம் குற்றமற்றதாகக் கொண்டு அருள வேண்டும் என்றும், மணம் தங்கும் தாமரை மலருக்கு ஒப்பான திருவடிகளில் விழுந்து வேண்டிக் கொண்டு இவைகளை மேலும் சொல்லத் தொடங்கினான்.

பண்டு கண்டுஅறி யாப்பழங் கோலத்தைக்
கண்டு நெஞ்சம் கலங்கிக் களிக்குமால்
தண்டு நீள்முடி சங்கொடு சக்கரம்
கொண்ட கோலத்தை யேகொண்டு அருளுவாய். (39)

முன்னே ஒருபோதும் கண்டு வணங்கி அறியாத பழைய பேருருவத்தைத் தரிசித்து மனமானது பயத்தினால் கலங்குதல் மட்டுமின்றி, மகிழவும் செய்கிறது. ஆதலால் என் மேல் கருணைகூர்ந்து தண்டமும், நீண்ட முடியும் சங்கும் சக்கரமும் கொண்ட கோலத்தையே தரித்து அருளக் கடவாயாக.

என்றுஅவன் உரைத்திடலும் எவ்உருவும் ஒன்றாய்
நின்றவன் உரைத்துஅருளு வான்நிறை ஒளித்தாய்
முன்தரு முதற்பொருளும் ஆய்முழுதும் ஆய
என்றன்உரு வத்தினைமுன் யாவர்அறி கிற்பார். (40)

என்று பணிந்து அருச்சுனன் கூறியவுடன் எவ்வகையான உருவங்களும் ஓர் உருவாய் நின்ற பகவான் கூறுகின்றார். முழுமையான ஒளி உடையதாய் ஆதியில் தோன்றிய முதற் பொருளாய் முழுமையாய் நின்ற பரம்பொருளான என்றன் பேருருவத்தினை உன்னைக் காட்டிலும் வேறு ஒருவரும் அறிந்திலர்.

வேதநெறி யாலும்மிகு வேள்விகளி னாலும்
மாதவம் அதாலும்மகிழ் தானவகை யாலும்
காதலர்கள் காணமுடி யாவடிவு கண்டாய்
ஏதம்அறி யாஎனது யோகவலி யாலே. (41)

அருச்சுனா, இம்மானிட உலகில் வேத நெறியினாலும் மிகுதியான வேள்விகளினாலும், மிகப் பெரிய தவத்தாலும், பிற உயிர்கள் மகிழக் காரணம் ஆன தான வகையாலும், தரிசிக்கும் விருப்பம் உள்ளவர்களாய் இருந்தாலும் காண இயலாத இப்பேருருவத்தை என் குற்றம் அற்ற யோக மாயையின் சாமர்த்தியத்தினால் நீ தரிசித்தாய்.

இப்பரிசு உரைத்துஅருளி ஈர்இருகை யேஆய்
அப்பழைய கோலம்அது வாய்அருளி அங்கே
மெய்ப்பயம் அகற்றிவிச யற்குஇசைய வேறே
ஒப்பவரின் மிக்கவர் இலாதவன்உ ரைப்பான். (42)

இத்தகைய தன்மைகளை வாசுதேவன் அருச்சுனனுக்கு உரைத்து அருளி, சங்கு, சக்கரம், கதை, பத்மம் தரித்த நான்கு கைகளுடனும், தான் முன்பு கொண்ட கோலத்தையே கொண்டு பேருருவ தரிசனத்தால் அருச்சுனனுக்கு உண்டான பயத்தைப் போக்கி, அவனுக்கு இசையும்படி தனக்குச் சமம் ஆனவரும் தன்னைவிட மிகை இல்லாதவருமான பகவான் உரைத்தான்.

கண்டவர் இல்லை நீமுன் கண்டஇக் கோலம் காண
அண்டரும் விரும்பா நின்றார் ஆதலால் அன்பு கூரும்
தொண்டரும் ஆகி என்னை அன்றிஓர் தொடக்குஇ லாமை
கொண்டவர் அடைவர் என்றான் கோகுலம் மேய்த்த கோமான். (43)

அருச்சுனா, நீ முன்னர்த் தரிசித்த இப்பேருருவத்தைக் கண்டவர் யாரும் இல்லை. என்னைத் தரிசிக்கும் ஆசையுடன் இந்திரன் முதலான தேவர்களும் உள்ளனர். ஆதலால் என்னிடம் அன்பு மிகக் கொண்ட பக்தர் ஆகி என்னை அன்றி வேறு ஒன்றில் பற்று இல்லாத தன்மையை உடையவர் என்னை அடைவர் என்றான், கோகுலத்தில் பசுக்கூட்டங்களை மேய்த்த கண்ணன்.

பதினொன்றாவது விசுவரூப அத்தியாயம் நிறைவுற்றது.

# பன்னிரண்டாவது பக்தி யோக அத்தியாயம்

ஏயநான் எதிரே கண்ட உருவமே இசைகிற் பாரோ
தூயநான் மறைக்கும் எட்டாப் பொருளையே தொடர்கிற் பாரோ
தாய்அனாய் பெரியோர் என்று தனஞ்செயன் வினவத் தான்ஓர்
ஆயனாய் நிரைகள் மேய்க்கும் மாயன் வேறுஅருளிச் செய்வான். (1)

தாயைப்போன்ற பகவானே, மனத்துக்குப் பொருந்தும்படி நான் எதிரே நின்று தரிசித்த உருவத்தையே சிந்திப்பவரோ? தூய்மையான நான்கு வேதங்களுக்கும் எட்டாத பொருளைத் தினமும் சிந்திப்பவரோ? எவர் யோகம் அறிந்த பெரியவர் ஆவார்? என்று தனஞ்சயன் வினவ, தான் ஓர் ஆயனாய், பசுக் கூட்டங்களை மேய்க்கும் பகவான் அவ்விருவருடைய பேதங்களை அருளிச் செய்தார்.

மன்னநீ காண நான்முன் காட்டிய வடிவை நெஞ்சால்
உன்னல்வாய் மொழியி னாலே உரைத்தல்செய் பவர்கள் எல்லாம்
என்அலால் பிறிதுஒன்று எய்தார் யாரினும் நல்லர் இங்குச்
சொன்னவர் அன்றி மற்றை அவர்கள்தம் துறையும் கேளாய். (2)

அருச்சுனா, நீ தரிசிக்கும்படி பரம்பொருள் ஆகிய நான் உனக்கு முன்னே காட்டிய எனது பேருருவத்தை மனத்தினால் சிந்தித்தலும், வாக்கினால் கூறுதலும் ஆகியவற்றைச் செய்பவர்கள் யாவரும் பரம்பொருளான என்னை அடைவதன்றிப் பிறிதொரு பொருளை அடையார். எல்லாரினும் நல்லவர் என்று இங்குச் சொன்னவர்கள் அன்றி பிரம்மத்தைச் சிந்திப்பவர்தம் நெறிகளையும் கேட்பாய்.

உரைசெயற்கு அரிதாய் நெஞ்சின் உணர்விடப் படாதாய் எங்கும்
புரைஅறக் கலந்து போக்கு வரவுஇன்றிப் பொலிந்தது ஒன்றைக்
கரைசெயற்கு அரிய ஆய புலன்களைக் கடந்து காண்பான்
அரசமற்று யானே என்னின் அன்னியம் என்ன லாமோ. (3)

புகழ்ந்து பேசுதற்கு அரியதாய், மனத்தினால் அறியப்படாததாய், எங்கும் நிறைந்து அசையாது விளங்குகின்ற சிறந்ததான ஒன்றை, யாவராலும் எல்லை காணுதற்கு அரியதான இந்திரியங்களைக் கடந்து, அறிபவன் பிரம்ம வடிவம் ஆகிய நானே ஆகின்றான். அவனை என்னைவிட வேறு என்று சொல்லலாமோ?

காரணம் இறந்துஒன் றிற்கும் காட்சியில் படாதது ஒன்றைச்
சேர்பவர் வருத்தம் வேறு செப்பிடல் ஆவது அன்றால்
ஓர்வரிது இதுதான் வாழும் உயிர்களால் ஆவது ஒன்றோ
ஆர்அவர் பெருமை தன்னை அளவுஅறுப் பார்கள் ஐயா. (4)

அருச்சுனா, தனக்கு ஒரு காரணமும் இன்றி, ஓர் இந்திரியத்திற்கும் புலன் ஆகாத ஒன்றை அடைந்து நிற்பவர்க்கு வருத்தம் மிக அதிகம். அவர்கள் தேகாபிமானத்தை முற்றிலும் ஒழித்தல் கடினம் ஆனது ஆதலால் வேறு துன்பங்களோடு சேர்த்துச்

*சொல்லத் தக்கது அன்று. அரிதிலும் அரிதான இப்பரம்பொருள் பற்றிய நிட்டைதான் தேக அபிமானத்தோடு வாழும் மனிதர்களால் அடையத் தக்கது ஆகுமோ? அவ்வாறு அடைந்திடின் அவர் பெருமையை வரையறுத்துக் கூறுபவர்கள் யார்?*

**யாவர்கள் சிலவர் எல்லா வினையும்என் கண்ணே விட்டிட்டு**
**யாவர்தம் அறிவுஎன் பாலே ஆக்குவார் அவர்கள் தம்மைச்**
**சாவது முதலாய் உள்ள துயர்க்கடல் நின்றும் தாங்கி**
**யாவர்க ளேனும் காலம் சிறிதிலே எடுக்கின் றேன்நான். (5)**

*யாவர் சிலர் எல்லா வினைகளையும் என்னிடத்தே அர்ப்பணம் செய்து விட்டு, யாவர் தம் அறிவைச் சிதற விடாமல் என்பாலே வைப்பரோ, அவர்களை மரணம் முதலான துக்கக் கடலில் இருந்தும் தாங்கி, யாவர் ஆயினும், சிறிது காலத்திற்கு உள்ளே நான் கரை சேர்க்கிறேன்.*

**மெய்உற உன்னை என்னிலே வைத்தால்**
**என்னில் வேறுஇன்றி ஒன்றுஆதற்கு**
**ஐயுற வில்லை அதுசெய முடியாது**
**ஆயின்அப் பியாசமே பயில்வாய்**
**பொய்அற அதுவும் புரிகிலாய் எனில்உன்**
**வினைகள்என் பொருட்டினால் புரிவாய்**
**செய்யும்அவ் வினைகள் அப்படிச் செயாயேல்**
**வினைப்பயன் தவிரவே செய்வாய். (6)**

*உண்மையாக உன் மனதை என்னிடத்திலே வைத்தால் என்னில் வேறு இன்றி ஒன்றாவதற்குச் சந்தேகம் இல்லை. அப்படி என்பால் சித்தத்தை வைக்க இயலாது என்றால் அப்பியாச யோகத்தைப் பயில்வாய். பொய் இன்றி அந்த யோகத்தைச் செய்யாவிடில் உன் கர்மங்களைப் பரம்பொருளான என் மகிழ்ச்சியின் பொருட்டே செய்வாய். செய்யும் அக்கர்மங்களை அவ்வாறு செய்ய உனக்குச் சக்தி இல்லையாயின் என்னைச் சரண் அடைந்து மனத்தை வசம் ஆக்கி, அனைத்துக் கருமங்களின் பலனையும் தியாகம் செய்.*

**அத்தி ஞானம் வினையின் அதனினும்**
**மெய்த்தி யானம் மிகும்அதின் மேல்அதாம்**
**வித்தின் ஆய வினைப்பயன் வீடுதல்**
**சித்த சாந்தி அதற்பின் செறியுமால். (7)**

*அப்பியாசத்தைவிட ஞானம் சிறப்புடையதாம். அந்த ஞானத்தை விட உண்மையான தியானமே சிறந்தது ஆகும். தியானத்தினும் கர்ம பலத்தியாகம் சிறந்ததாகும். அந்தத் தியாகத்தின் பின்னர் சித்தம் அமைதி அடையும்.*

**இருவகை உயிர்க்கும் இனியனாய் இன்ப**
**துன்பம்யான் என்னதுஎன்று அறியாது**
**ஒருபொரு ளாலும் குறைவுபாடு இன்றி**
**உள்ளமும் ஒருவழிப் படரப்**
**பொருவரும் துணிவும் கருணையும் புரிந்து**
**புலன்தெரி உணர்வைஎன் பாலே**
**மருவிநின்று ஒழுகும் யோகிஎன் பவன்காண்**
**மன்னமற்று எனக்குவேறு இனியான். (8)**

அருச்சுனா, தாவர சங்கம வடிவான இருவகை உயிர்களுக்கும் நட்புடையவனாய், இது துன்பம், இது இன்பம், இது நான், இது என்னது என்று தனக்கு வேறாக ஒன்றையும் அறியாது, எந்தப் பொருளாலும் குறைபாடு இன்றி, சித்தமும் ஒரு முகப்பட்டுச் செல்ல, ஒப்பற்ற ஆன்மாவின்பால் உறுதியையும் துக்கிகளிடத்துக் கருணையும் காட்டி, இந்திரிய வாயிலாய் விஷயங்களை ஆராயும் புத்தியை என்பால் அர்ப்பணம் செய்து சஞ்சரிப்பவனே யோகி ஆவான். பரம்பொருளான எனக்கு அதிக இனிமையானவன்.

உலகமும் தானும் வேறுஇலா மையினால்
தான்ஒரு பொருட்கும் அஞ்சாதே
அலகுஇலா உயிர்கட்கு இனியன் ஆதலினால்
அவைகளும் தன்னை அஞ்சாதே
புலவர் ஆனவர்கள் புகழவே நிகழ்வான்
பொறாமையும் மயக்கமும் களிப்பும்
இலகிடா நெஞ்சத்து யோகிஎன் பவன்காண் (9)
யாரினும் எனக்குவேறு இனியான்.

உலகமும் தானும் வேறு வேறு இல்லாமையால், தான் எந்த ஓர் உயிருக்கும் அச்சப் படாமல் எந்த ஓர் உயிர்களிடத்தும் இனியன் ஆதலால், அந்த எண்ணற்ற உயிர்களும் தன்னைப் பற்றி அச்சப்படாமலும், அறிஞர்கள் வணங்கும்படி இருப்பவனாய், பொறாமையும், மகிழ்வும், மயக்கமும் தோன்றாத சித்தம் உடைய யோகி என்பவனே என்மேல் பற்றுடைய யாவரினும் எனக்கு மிக விருப்பமானவன்.

ஒன்றினும் ஆசை இன்றிஇந் தியங்கள்
தம்வழி ஒழுகிடாது ஒருக்கி
நன்றியி னோடு தீங்கினின் ஒத்து
நல்வினை தீவினை துறந்து
பொன்றினும் நோவுஉற்று அழுதல்செய் யாதே
பூரித்தல் வாடுதல் இன்றி
என்றும்முன்பு இழந்த பொருட்குஇரங் காதே (10)
வரும்பொருட்கு இச்சைசெய் யாதே.

எந்தப் பொருளிலும் பற்றின்றி, இந்திரியங்களை விஷயங்களில் செல்ல விடாமல் ஒடுக்கி, நன்மை, தீமைகளைச் சமமாய்க் கருதி, நல்வினை, தீவினைகளைத் துறந்து, தேகத்திற்கு அழிவு வரினும் துன்புற்று அழுதிடாமல், மகிழ்தலும், வெறுத்தலும் எப்பொழுதும் இன்றி, முன்பு இழந்து போனதற்கு வருந்தாமலும், வரும் பொருளில் இச்சையின்றியும்.

இகழ்பவர் நட்டார் என்பது இன்றியே இன்ப துன்பம்
திகழ்அவ மானம் மானம் சீதமோடு அழலின் தீமை
புகழ்பழி இவற்றுள் ஒத்துப் பொருந்திவாழ் இடம்ஒன்று இன்றி (11)
நிகழ்தரும் யோகி கண்டாய் மற்றுஎனக்கு உரிய நீரான்.

இகழ்பவர், நட்புடையவர் என்பது இல்லாமல் சமமாக இன்ப துன்பம், வினை வசத்தால் தோன்றும் மான அவமானங்கள், சூடு, குளிர்ச்சி, துதி, நிந்தை ஆகியவற்றைச் சமமாய்க் கருதி, பொருந்தி வாழும் இடம் ஒன்று இல்லாமல் சஞ்சரிக்கும் யோகியே பரம்பொருளான எனக்கு மிகவும் பிரியம் உடையவன்.

செயத்தகு வதுவும் ஆகிச் சேர்ந்தவர் செல்லல் தீர
உயக்கொடு போவது ஆய பொருளையான் உரைத்த வண்ணம்
இயற்பட உணர்கிற் பாருக்கு யான்மிக இனியன் என்றான்
மயக்குஅற ஒருவ ராலும் அறிவுஅரிது ஆய மாயோன். (12)

முயற்சியால் செய்யத் தக்கதாய், அடைந்தோர் துன்பம் தீர்ந்து பிழைக்கும்படி, அதில் இருந்து முத்திக்குக் கொண்டு போவது ஆகிய பொருளை, நான் கூறிய படியே, தனக்கு இயல்பான முயற்சியோடு அறிந்த முமுட்சுக்கள் ஆகிய அடியவர்களுக்குப் பரம்பொருள் ஆகிய நான் மிகவும் இனியவன் என்று அருளினார், மயக்கமற ஒருவராலும் அறிவதற்கு அரிதாகிய ஸ்ரீ பகவான்.

பன்னிரண்டாவது பக்தி யோக அத்தியாயம் நிறைவுற்றது.



# பதின்மூன்றாவது க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம்

விடம்படு பணாமுடி அரங்கின்மிசை ஏறி
நடம்பயிலும் நாயகன் மறித்துமிகும் ஞானம்
சடம்படு பிணிப்பிறவி என்றஇவை தரிக்கும் (1)
உடம்பொடுஉயிர் ஆனவை உரைத்துஅருளல் உற்றான்.

நஞ்சு பொருந்திய காளிங்கன் என்னும் பாம்பின் முடியாகிய அரங்கின் மீது ஏறி நடனம் செய்யும் பகவான் மீண்டும் மேலான ஞானமும், ஜடமும், அதில் உண்டான நோயும், பிறவியும் என்ற இவைகளை அணிந்திருக்கும் உடம்போடு (க்ஷேத்திரம்) உயிரானவை (சேஷத்திரக்ஞன்) பற்றிச் சொல்லத் தொடங்கினான்.

உடம்புஎன உரைப்பதுஉயிர் உண்பவைகள் எல்லாம்
இடம்பட விளைப்பதுஎதிர் காணல்உறும் ஈதால்
திடம்படவும் மற்றுஇது தெரிந்துஉணரும் மெய்யைக் (2)
கடம்படும் உயிர்ப்பொருள் எனப்பகர்வர் கற்றோர்.

அருச்சுனா, உயிரால் அனுபவிக்கப் படும் இன்ப துன்பங்கள் முழுவதையும் பூமியைப் போல விரிவாக உண்டாக்குவதால் எதிரே காணப்படும் இச்சரீரமே உடம்பு (க்ஷேத்திரம்) என்று சொல்லப் படுகின்றது. உறுதியாக இவ்வுடலாகிய க்ஷேத்திரத்தை ஆராய்ந்து அறியும் ஜீவான்மாவை இவ்வுடலில் பொருந்தி அனுபவிப்பவன் (க்ஷேத்திரக்ஞன்) எனக் கற்றோர் கூறுவர்.

மன்னஉடல் யாவையினும் மன்னிஅறி வாய்நின்று
உன்னும்உயிர் யான்இவை இரண்டினையும் ஓர்கால்
தன்மையினின் யாதுஅறியும் மற்றுஅதனை ஞானம் (3)
என்னஉணர் வாய்இது எனக்கும்இசைவு ஆமால்.

அருச்சுனா, எல்லா உடலிலும் பொருந்தி அறிவாகி நின்று, அந்த உடலை நான் எனது என்று கருதி நிற்கும் ஆன்மா நானே. உடல் ஆன்மா ஆகிய இவ்விரண்டினையும் ஒரு பொழுது அவற்றின் தன்மைகளோடு எது அறியுமோ? அதனையே ஞானம் என்றுநீ அறியக் கடவாய். இது பரம்பொருளான எனக்கும் சம்மதமே.

மற்றுஇவ்உடல் தன்னின்வர வும்குணமும் வந்தாங்கு
உற்றுஅமை விகாரமும் உயிர்த்தொகுதி தானும்
நற்றவர்கள் வேறுபட ஓதினர்கள் நானும் (4)
சொல்தொகையி னால்இவை சுருங்கமொழி வன்கேள்.

இந்திரியங்களோடு கூடிய இந்த உடலின் தோற்றமும், குணமும், தோன்றிப் பொருந்தும் வேறுபாடுகளும், ஆன்மாவொடு ஒன்றான விதமும் நல்ல தவமுடைய

செயத்தகு வதுவும் ஆகிச் சேர்ந்தவர் செல்லல் தீர
உயக்கொடு போவது ஆய பொருளையான் உரைத்த வண்ணம்
இயற்பட உணர்கிற் பாருக்கு யான்மிக இனியன் என்றான்
மயக்குஅற ஒருவ ராலும் அறிவுஅரிது ஆய மாயோன். (12)

*முயற்சியால் செய்யத் தக்கதாய், அடைந்தோர் துன்பம் தீர்ந்து பிழைக்கும்படி, அதில் இருந்து முத்திக்குக் கொண்டு போவது ஆகிய பொருளை, நான் கூறிய படியே, தனக்கு இயல்பான முயற்சியோடு அறிந்த முமுட்சுக்கள் ஆகிய அடியவர்களுக்குப் பரம்பொருள் ஆகிய நான் மிகவும் இனியவன் என்று அருளினார், மயக்கமற ஒருவராலும் அறிவதற்கு அரிதாகிய ஸ்ரீ பகவான்.*

பன்னிரண்டாவது பக்தி யோக அத்தியாயம் நிறைவுற்றது.



# பதின்மூன்றாவது க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம்

விடம்படு பணாமுடி அரங்கின்மிசை ஏறி
நடம்பயிலும் நாயகன் மறித்துமிகும் ஞானம்
சடம்படு பிணிப்பிறவி என்றஇவை தரிக்கும்
உடம்பொடுஉயிர் ஆனவை உரைத்துஅருளல் உற்றான். (1)

நஞ்சு பொருந்திய காளிங்கன் என்னும் பாம்பின் முடியாகிய அரங்கின் மீது ஏறி நடனம் செய்யும் பகவான் மீண்டும் மேலான ஞானமும், ஜடமும், அதில் உண்டான நோயும், பிறவியும் என்ற இவைகளை அணிந்திருக்கும் உடம்போடு (க்ஷேத்திரம்) உயிரானவை (சேஷத்திரக்ஞன்) பற்றிச் சொல்லத் தொடங்கினான்.

உடம்புஎன உரைப்பதுஉயிர் உண்பவைகள் எல்லாம்
இடம்பட விளைப்பதுஎதிர் காணல்உறும் ஈதால்
திடம்படவும் மற்றுஇது தெரிந்துஉணரும் மெய்யைக்
கடம்படும் உயிர்ப்பொருள் எனப்பகர்வர் கற்றோர். (2)

அருச்சுனா, உயிரால் அனுபவிக்கப் படும் இன்ப துன்பங்கள் முழுவதையும் பூமியைப் போல விரிவாக உண்டாக்குவதால் எதிரே காணப்படும் இச்சரீரமே உடம்பு (க்ஷேத்திரம்) என்று சொல்லப் படுகின்றது. உறுதியாக இவ்வுடலாகிய க்ஷேத்திரத்தை ஆராய்ந்து அறியும் ஜீவான்மாவை இவ்வுடலில் பொருந்தி அனுபவிப்பவன் (க்ஷேத்திரக்ஞன்) எனக் கற்றோர் கூறுவர்.

மன்னஉடல் யாவையினும் மன்னிஅறி வாய்நின்று
உன்னும்உயிர் யான்இவை இரண்டினையும் ஓர்கால்
தன்மையினின் யாதுஅறியும் மற்றுஅதனை ஞானம்
என்னஉணர் வாய்இது எனக்கும்இசைவு ஆமால். (3)

அருச்சுனா, எல்லா உடலிலும் பொருந்தி அறிவாகி நின்று, அந்த உடலை நான் எனது என்று கருதி நிற்கும் ஆன்மா நானே. உடல் ஆன்மா ஆகிய இவ்விரண்டினையும் ஒரு பொழுது அவற்றின் தன்மைகளோடு எது அறியுமோ? அதனையே ஞானம் என்றுநீ அறியக் கடவாய். இது பரம்பொருளான எனக்கும் சம்மதமே.

மற்றுஇவ்உடல் தன்னின்வர வும்குணமும் வந்தாங்கு
உற்றுஅமை விகாரமும் உயிர்த்தொகுதி தானும்
நற்றவர்கள் வேறுபட ஓதினர்கள் நானும்
சொல்தொகையி னால்இவை சுருங்கமொழி வன்கேள். (4)

இந்திரியங்களோடு கூடிய இந்த உடலின் தோற்றமும், குணமும், தோன்றிப் பொருந்தும் வேறுபாடுகளும், ஆன்மாவொடு ஒன்றான விதமும் நல்ல தவமுடைய

செயத்தகு வதுவும் ஆகிச் சேர்ந்தவர் செல்லல் தீர
உயக்கொடு போவது ஆய பொருளையான் உரைத்த வண்ணம்
இயற்பட உணர்கிற் பாருக்கு யான்மிக இனியன் என்றான்
மயக்குஅற ஒருவ ராலும் அறிவுஅரிது ஆய மாயோன். (12)

முயற்சியால் செய்யத் தக்கதாய், அடைந்தோர் துன்பம் தீர்ந்து பிழைக்கும்படி, அதில் இருந்து முத்திக்குக் கொண்டு போவது ஆகிய பொருளை, நான் கூறிய படியே, தனக்கு இயல்பான முயற்சியோடு அறிந்த முமுட்சுக்கள் ஆகிய அடியவர்களுக்குப் பரம்பொருள் ஆகிய நான் மிகவும் இனியவன் என்று அருளினார், மயக்கமற ஒருவராலும் அறிவதற்கு அரிதாகிய ஸ்ரீ பகவான்.

பன்னிரண்டாவது பக்தி யோக அத்தியாயம் நிறைவுற்றது.



# பதின்மூன்றாவது க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம்

விடம்படு பணாமுடி அரங்கின்மிசை ஏறி
நடம்பயிலும் நாயகன் மறித்துமிகும் ஞானம்
சடம்படு பிணிப்பிறவி என்றஇவை தரிக்கும்
உடம்பொடுஉயிர் ஆனவை உரைத்துஅருளல் உற்றான். (1)

நஞ்சு பொருந்திய காளிங்கன் என்னும் பாம்பின் முடியாகிய அரங்கின் மீது ஏறி நடனம் செய்யும் பகவான் மீண்டும் மேலான ஞானமும், ஜடமும், அதில் உண்டான நோயும், பிறவியும் என்ற இவைகளை அணிந்திருக்கும் உடம்போடு (க்ஷேத்திரம்) உயிரானவை (சேஷத்திரக்ஞன்) பற்றிச் சொல்லத் தொடங்கினான்.

உடம்புஎன உரைப்பதுஉயிர் உண்பவைகள் எல்லாம்
இடம்பட விளைப்பதுஎதிர் காணல்உறும் ஈதால்
திடம்படவும் மற்றுஇது தெரிந்துஉணரும் மெய்யைக்
கடம்படும் உயிர்ப்பொருள் எனப்பகர்வர் கற்றோர். (2)

அருச்சுனா, உயிரால் அனுபவிக்கப் படும் இன்ப துன்பங்கள் முழுவதையும் பூமியைப் போல விரிவாக உண்டாக்குவதால் எதிரே காணப்படும் இச்சரீரமே உடம்பு (க்ஷேத்திரம்) என்று சொல்லப் படுகின்றது. உறுதியாக இவ்வுடலாகிய க்ஷேத்திரத்தை ஆராய்ந்து அறியும் ஜீவான்மாவை இவ்வுடலில் பொருந்தி அனுபவிப்பவன் (க்ஷேத்திரக்ஞன்) எனக் கற்றோர் கூறுவர்.

மன்னஉடல் யாவையினும் மன்னிஅறி வாய்நின்று
உன்னும்உயிர் யான்இவை இரண்டினையும் ஓர்கால்
தன்மையினின் யாதுஅறியும் மற்றுஅதனை ஞானம்
என்னஉணர் வாய்இது எனக்கும்இசைவு ஆமால். (3)

அருச்சுனா, எல்லா உடலிலும் பொருந்தி அறிவாகி நின்று, அந்த உடலை நான் எனது என்று கருதி நிற்கும் ஆன்மா நானே. உடல் ஆன்மா ஆகிய இவ்விரண்டினையும் ஒரு பொழுது அவற்றின் தன்மைகளோடு எது அறியுமோ? அதனையே ஞானம் என்றுநீ அறியக் கடவாய். இது பரம்பொருளான எனக்கும் சம்மதமே.

மற்றுஇவ்உடல் தன்னின்வர வும்குணமும் வந்தாங்கு
உற்றுஅமை விகாரமும் உயிர்த்தொகுதி தானும்
நற்றவர்கள் வேறுபட ஓதினர்கள் நானும்
சொல்தொகையி னால்இவை சுருங்கமொழி வன்கேள். (4)

இந்திரியங்களோடு கூடிய இந்த உடலின் தோற்றமும், குணமும், தோன்றிப் பொருந்தும் வேறுபாடுகளும், ஆன்மாவொடு ஒன்றான விதமும் நல்ல தவமுடைய

செயத்தகு வதுவும் ஆகிச் சேர்ந்தவர் செல்லல் தீர
உயக்கொடு போவது ஆய பொருளையான் உரைத்த வண்ணம்
இயற்பட உணர்கிற் பாருக்கு யான்மிக இனியன் என்றான்
மயக்குஅற ஒருவ ராலும் அறிவுஅரிது ஆய மாயோன். (12)

முயற்சியால் செய்யத் தக்கதாய், அடைந்தோர் துன்பம் தீர்ந்து பிழைக்கும்படி, அதில் இருந்து முத்திக்குக் கொண்டு போவது ஆகிய பொருளை, நான் கூறிய படியே, தனக்கு இயல்பான முயற்சியோடு அறிந்த முமுட்சுக்கள் ஆகிய அடியவர்களுக்குப் பரம்பொருள் ஆகிய நான் மிகவும் இனியவன் என்று அருளினார், மயக்கமற ஒருவராலும் அறிவதற்கு அரிதாகிய ஸ்ரீ பகவான்.

பன்னிரண்டாவது பக்தி யோக அத்தியாயம் நிறைவுற்றது.



# பதின்மூன்றாவது க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம்

விடம்படு பணாமுடி அரங்கின்மிசை ஏறி
நடம்பயிலும் நாயகன் மறித்துமிகும் ஞானம்
சடம்படு பிணிப்பிறவி என்றஇவை தரிக்கும்
உடம்பொடுஉயிர் ஆனவை உரைத்துஅருளல் உற்றான். (1)

நஞ்சு பொருந்திய காளிங்கன் என்னும் பாம்பின் முடியாகிய அரங்கின் மீது ஏறி நடனம் செய்யும் பகவான் மீண்டும் மேலான ஞானமும், ஜடமும், அதில் உண்டான நோயும், பிறவியும் என்ற இவைகளை அணிந்திருக்கும் உடம்போடு (க்ஷேத்திரம்) உயிரானவை (சேஷத்திரக்ஞன்) பற்றிச் சொல்லத் தொடங்கினான்.

உடம்புஎன உரைப்பதுஉயிர் உண்பவைகள் எல்லாம்
இடம்பட விளைப்பதுஎதிர் காணல்உறும் ஈதால்
திடம்படவும் மற்றுஇது தெரிந்துஉணரும் மெய்யைக்
கடம்படும் உயிர்ப்பொருள் எனப்பகர்வர் கற்றோர். (2)

அருச்சுனா, உயிரால் அனுபவிக்கப் படும் இன்ப துன்பங்கள் முழுவதையும் பூமியைப் போல விரிவாக உண்டாக்குவதால் எதிரே காணப்படும் இச்சரீரமே உடம்பு (க்ஷேத்திரம்) என்று சொல்லப் படுகின்றது. உறுதியாக இவ்வுடலாகிய க்ஷேத்திரத்தை ஆராய்ந்து அறியும் ஜீவான்மாவை இவ்வுடலில் பொருந்தி அனுபவிப்பவன் (க்ஷேத்திரக்ஞன்) எனக் கற்றோர் கூறுவர்.

மன்னஉடல் யாவையினும் மன்னிஅறி வாய்நின்று
உன்னும்உயிர் யான்இவை இரண்டினையும் ஓர்கால்
தன்மையினின் யாதுஅறியும் மற்றுஅதனை ஞானம்
என்னஉணர் வாய்இது எனக்கும்இசைவு ஆமால். (3.)

அருச்சுனா, எல்லா உடலிலும் பொருந்தி அறிவாகி நின்று, அந்த உடலை நான் எனது என்று கருதி நிற்கும் ஆன்மா நானே. உடல் ஆன்மா ஆகிய இவ்விரண்டினையும் ஒரு பொழுது அவற்றின் தன்மைகளோடு எது அறியுமோ? அதனையே ஞானம் என்றுநீ அறியக் கடவாய். இது பரம்பொருளான எனக்கும் சம்மதமே.

மற்றுஇவ்உடல் தன்னின்வர வும்குணமும் வந்தாங்கு
உற்றுஅமை விகாரமும் உயிர்த்தொகுதி தானும்
நற்றவர்கள் வேறுபட ஓதினர்கள் நானும்
சொல்தொகையி னால்இவை சுருங்கமொழி வன்கேள். (4)

இந்திரியங்களோடு கூடிய இந்த உடலின் தோற்றமும், குணமும், தோன்றிப் பொருந்தும் வேறுபாடுகளும், ஆன்மாவொடு ஒன்றான விதமும் நல்ல தவமுடைய

முனிவர்கள் வேறுபடக் கூறினர். பரம்பொருள் ஆகிய நானும் தொகுத்த சொற்களால் இவைகளைச் சுருக்கமாகக் கூறுகின்றேன். கேள்.

**எப்பொருளி னும்பெருகி எங்கும்உள ஆகும்**
**அப்பெரிய பூதம்அவை ஐந்தும்அவை ஈனும்**
**ஒப்புஅரிய நானும்அது வந்துமுன் உதிக்கப்**
**பொய்ப்பகைஇல் புந்திஅ வியத்தம்அவை தாமும்.** (5)

எவ்வகைப் பட்ட பொருள்களிலும் வியாபித்து, எவ்விடத்தும் இருக்கும், பெரிய பூதங்கள் ஐந்தும், ஒப்பற்ற அவற்றை உண்டாக்கும் நான் என்ற அகங்காரமும், அவ்வகங்காரம் ஆனது தோன்றி அப்பூதங்களுக்கு முன்னே தோன்றுதற்குப் பகை இல்லாத மாயை வடிவான புத்தியும், அவ்வியக்தம் என்னும் அந்த எட்டுப் பொருள்களும்.

**காதல்இல்இவ் எட்டும்வினைக் காரணம்அது ஒன்றும்**
**ஓதல்அரிது ஆயபுலன் ஐந்தும்அவை உண்ணும்**
**ஆதல்அறி யாதபொறி ஐந்தும்அவை யாலே**
**ஏதவினை செய்கரணம் மூன்றினொடு இரண்டும்.** (6)

விரும்பத் தக்கனவாக இல்லாத இவ்வெட்டும், பாவ புண்ணிய வினைகளுக்குக் காரணமான அந்தக்கரணம் ஒன்றும், சொல்லுதற்கு அரிது ஆன ஞானேந்திரியங்கள் ஐந்தும் அவற்றால் அனுபவிக்கப்படுகின்ற இன்ப துன்பங்களை அறியாத விஷயங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்களாலும், விஷயங்களாலும் குற்றம் பொருந்திய செயல்களைச் செய்யும் கர்மேந்திரியங்கள் ஐந்தும்.

**இற்றிவை அனைத்தும்இடர் இன்பம்முதல் யாவும்**
**துற்றுஅமை விகாரதை தொடர்ந்ததொகை கண்டாய்**
**நற்றவ உடம்புஎன இயம்புவது நல்லோர்**
**உற்றஉட லுக்குஉரிய ஞானமும் உரைப்பாம்.** (7)

நல்ல தவத்தை உடைய அருச்சுனா, இவ்வாறு கூறிய ஐம்பூதம் முதல் கர்மேந்திரிய பரியந்தமான இவை முழுதும் அன்றியும் இச்சை, வெறுப்பு, இன்பம், துன்பம், இந்திரியங்களோடு கூடிய உடல், ஆகிய இவை முழுதுமாய் நெருங்கிப் பொருந்தி உள்ள வேறுபாடான தன்மைகளோடு கூடிய இத்தொகையைத் தான் கண்டாய், பெரியோர் உடம்பு என்று கூறுவது. இவ்வாறான உடலுக்கு உரித்தாகிய ஞான சாதன குணங்களைப் பற்றி இனிக் கூறத் தொடங்குவோம்.

**மானமும் பிறர்தனை மதிக்கப் பண்ணலும்**
**ஊனமும் பிறஉயிர்க்கு உறுகண் செய்கையும்**
**யான்எனும் செருக்கும்இவ் இகப ரங்களில்**
**ஆனபேர் ஆசையோடு அறுக்கும் ஆற்றலும்.** (8)

தம் குணங்களைச் சிறப்பித்துப் பேசுதலும், பிறர் தன்னை நன்கு மதிக்கும்படி தனது தருமத்தை நிலை நாட்டுதலும், குறைபாடும், பிற உயிர்களுக்குத் துன்பம் செய்வதும், நான் என்னும் அகங்காரமும், இவ்வுலக மேல் உலக இன்பங்களில் உள்ளதான பேராசையும் ஆகிய இவற்றைக் கெடுக்கும் ஆற்றலும்.

**பெற்றநல் மனையொடு பெண்டிர் பாலர்பால்**
**உற்றுஎழும் அவாவிடல் உடம்பின் தூய்மையும்**
**மற்றஐம் பொறிகளில் வாயில் வாழ்க்கையும்**
**செற்றமும் சிறியவர் குழுவும் தீர்தலும்.** (9)

தான் அடைந்திருக்கும் நல்ல வீட்டுடன், மனைவி மக்கள் இடத்தில் பொருந்திய ஆசைப் பெருக்கினை விடுதலும், உடலின் தூய்மையும், வீடு பேற்றிற்குப் *பிரதிகூலமான* சப்தாதி விஷயங்களை அனுபவிக்கும் வாழ்க்கையும், வெறுப்பும், மூடர்களின் கூட்டுறவும் ஆகிய இவற்றை விடுதலும்.

ஒருபெரும் பொருளையே உளத்துள் வைத்தலும்
இருவினை கடப்பவர் இடங்கள் எய்தலும்
குருவினை வழிபடு குணமும் குற்றம்இல்
உருவினை உள்ளவாறு உணரும் உண்மையும். (10)

ஒப்பற்ற பரம்பொருளான என்னையே மனத்துள் வைத்தலும், புண்ணிய பாவம் என்னும் இருவினைகளைக் கடப்பவர் வாழும் நதிக்கரை, மனிதர்கள் முதலிய கூட்டம் இல்லாத இடங்களை அடைதலும், குருவை வழிபடும் தன்மையும், குற்றம் அற்ற ஆன்மாவை உள்ளவாறு பகுத்தறியும் விவேகமும்.

முன்திகழ் பிறப்பொடு மூப்புஇ றப்பினால்
சென்றுஅடை இடும்பையைச் சிந்தை செய்கையும்
என்றுஇவை அனைத்தும்மற்று இவற்றி னால்இனிச்
சென்றுஅடை பொருளினைத் தெரிந்து கேள்எனா. (11)

முன்னே தோன்றிய பிறப்பு, மூப்பு, இறப்புக்களால் வந்து சேரும் துன்பங்களை அடிக்கடி சிந்தித்தலும் என்ற இவை எல்லாம் ஞான சாதனம் ஆதலால் ஞானமாம். இந்த ஞான சாதன குணங்களால் சென்று அடைகின்ற விருப்பமான பொருளை (வீடுபேற்றை) இனி நீ தெரிந்து கொள்வாயாக.

ஆதிஅந்தம் இலதுஅழி யாதுநின்ற பெருமையது
ஓதில்உண்டுஅது இலைஎனும் ஊனம்இன்றி ஒளிர்வது
நீதியின்கண் அகிலமும் ஆகிஎங்கும் நிறைதலின்
ஓதஅரும்கை செவிதலை கால்கள்எங்கும் உடையது. (12)

அருச்சுனா, அந்த அறியப்படும் பொருள் ஆனது முதலும் முடிவும் இல்லாதது. அழியாது நின்ற பெருமையை உடையது. இன்னும் அதனைப் பற்றிச் சொல்லப் போனால் உண்டு, இல்லை என்று கூறும் குறைபாடு இல்லாமல் விளங்குவது, நீதி முறையுடன் நோக்கும் இடத்து, உலகமும் ஆகி எங்கும் நிறைந்து இருத்தலால், சொல்லுதற்கு அரிய கை, செவி, தலை, கால்களை எங்கும் உடையதாய் இருக்கின்றது.

காணும் புலன்கள் அனைத்தினுக்கும் கண்ணாய் நின்று காட்டுவது
பேணும் புலன்கள் தனக்குஒன்றும் இல்லாது இயன்ற பெற்றியது
பூணும் பற்றுத் தனக்குஇன்றி எல்லாம் தானே பொறுப்பதுஅது
மாணும் குணங்கள் இன்றிஅவை மன்னி அனுப விப்பதுஅது. (13)

அறியப்படும் அப்பொருள் ஆனது காணும் இந்திரியங்கள் அனைத்திற்கும் அறிவாய் நின்று அவ்வவ்வியாபாரம் உண்டாக்குவது, விரும்பப்பட்ட இந்திரியங்கள் உண்மையாகவே தனக்கு யாது ஒன்றும் இல்லாமலேயே பொருந்தும் தன்மையுடையது. எப்பொருள்களோடும் சேர்ந்து நிற்கும் சம்பந்தமானது இன்றியே எல்லாவற்றையும் தானே பொறுப்பது. மாட்சிமைப் பட்ட குணங்கள் தனக்கு இல்லாமலேயே அவைகளைப் பொருந்தி நிலையாக அனுபவிப்பது அந்த உயிர். (க்ஷேத்திரக்ஞன்)

பூதம்ஐந்தின் அகத்தினொடு புறத்தினும் பொலிகின்றதுஇங்கு
ஏதம்இன்றி நடப்பநிற்பன வாய்இருப்பது அதுஇன்னதுஎன்று
ஓதரும்படி நுண்ணிதுஆகியது ஒன்றுஅதுஆகி இருந்துமெய்ப்
பேதம்வந்தது போலநின்று பிறங்கவும் படுகின்றதே. (14)

இங்கு பஞ்ச பூதத்தின் உள்ளிலும், வெளியிலும் பரவி இருப்பது அப்பொருள். குற்றம் இன்றி நடப்பனவாயும், நிற்பனவாயும் இருப்பது, அப்பொருள் இத்தன்மையது என்று சொல்லவும் அறியவும் கூடாதபடி நுண்மையானது, அது உண்மையில் ஒன்றாகி இருந்தும் வேறுபாடு உண்டானதைப் போல உடல்கள் தோறும் விளங்குகின்றது.

அருவம்ஆய்அதி தூரம்ஆயது அணித்தும்ஆயது அனைத்தும்ஆய்
உருவம்யாவும் அளித்துமீள ஒழிக்கும்நாளில் ஒழிப்பது
பொருவிலாஒளி கட்கும்உள்ஒளி ஆகியேபொலி கின்றதுஇங்கு
இருமைவீடிய ஞானமோடுஅதன் ஞேயம்ஆகி இசைந்தது. (15)

உருவம் இல்லாததாய் அதிகத் தூரத்தில் இருப்பது. எல்லாம் தானே ஆகி அருகிலே இருப்பது. உருவங்கள் அனைத்தையும் உண்டாக்கி, மீண்டும் அழிக்கும் போது அழிப்பது. ஒன்றுடன் உவமை சொல்ல இயலாதபடி அனைத்து ஒளிகளுக்கும் உள் ஒளியாகி விளங்குவது. இங்கு வேறுபாடு அற்ற ஞான வடிவாகவும், அதனால் அறியப்படும் பொருளாயும் இருப்பது.

ஆனஇப்பொருள் முன்புஉரைத்த அவற்றினால்அறி யும்பொருள்
ஊனம்அற்ற மனத்தினாய்நல் உடம்புமற்ற உடம்புசேர்
ஞானம்முற்றும் அவற்றினால்அறி யப்படும்பொருள் நன்மையும்
ஈனம்அற்ற திறத்தினோடு சுருக்கமாக இயம்பினேன். (16)

குறைபாடு அற்ற நல்ல சித்தம் உடைய அருச்சுனா, இவ்வாறான இந்த அறியப்படும் பரம்பொருள் ஆனது, முன்னர்க் கூறிய ஞான சாதன குணங்களால் அறியும் பொருளாகும். க்ஷேத்திரமும், தனக்கு வேறான க்ஷேத்திரத்திலே பொருந்திய ஞான சாதனங்கள் முழுவதையும், அவற்றினால் அறியப்படும் பொருளால் (பிரம்மத்தால்) உண்டாகும் நல்ல இயல்புகளையும் குறைவு இல்லாத கூறுபாட்டுடன் சுருக்கமாக உனக்குக் கூறினேன்.

எள்ளல்ஆனது இகந்துயான்முன் உரைத்தஇப்பொருள் ஈதுஎலாம்
உள்ளவாறுஎனது அன்பர்தாம்தெரிந்து உற்பவங்கள்என்று ஓதிடும்
கள்ளம்ஆர்தரு மாயைவேலை கடந்துகாதல் செய் இன்பமாம்
வெள்ளம்ஆம்எனை எய்துவார்என வேறுகூற விரும்பினான். (17)

என்னை இகழ்வதை நீக்கி, யான் முன்னர் அருளிச் செய்த க்ஷேத்திரம், ஞானம், அறியத்தக்கது (ஞேயம்) என்னும் இப்பொருள்கள் மூன்றனையும் உள்ளபடி எனது அன்பர்கள் உணர்ந்து, தோற்றம் என்று சொல்லப் பட்ட குற்றம் நிறைந்த மாயை ஆகிய கடலைக் கடந்து, பிறவிக்கு அஞ்சினோர் விரும்பும் பேரின்ப வெள்ளமாம் என்னை அடைவார் என்று அருளிச் செய்து இன்னும் வேறு ஒன்றைச் சொல்லப் பகவான் அருள் செய்தார்.

ஓதிய உடம்பிற்கு உயிர்க்கும் உண்மையாய்
ஆதிகண்டு அறிபவர் யாரும் இல்லையால்
தீதுஇல்இவ் இரண்டனின் செய்கை என்எனில்
நீதியின் இவற்றையும் நிகழக் கூறுவாம். (18)

முன்னே கூறிய க்ஷேத்திரத்திற்கும் அதனுள் இருக்கும் க்ஷேத்திரக்ஞனுக்கும் உண்மையான காரணத்தை ஆராய்ந்து அறிபவர் ஒருவரும் இல்லை. ஆதலால் குற்றம் அற்ற உடலும், (க்ஷேத்திரம்) ஆன்மாவும் (க்ஷேத்திரக்ஞன்) ஆகிய இவ்விரண்டினது செய்கைகளையும் என்ன என்று நீ கேட்பாயாகில் வேதங்களின் வழியாக உனக்குத் தோன்றும்படி இனிக் கூறுவோம்.

நண்ணிய குணத்தின் வேறுஇன்மை நாட்டலால்
கண்ணிய வினைகளுக்கு உடம்பு காரணம்
எண்ணிய துன்பமோடு இன்பம் என்றஇவை
உண்ணிய காரணம் உயிர்என் கின்றதே. (19)

பொருந்திய சத்துவம் முதலிய குணங்களை விட உடம்பு (க்ஷேத்திரம்) வேறு இல்லாமையால் செய்யக் கருதிய செயல்களுக்கு அவ்வுடம்பே (க்ஷேத்திரமே) காரணம். எண்ணிய இன்ப துன்பம் என்னும் இவைகளை அனுபவிக்கக் காரணமாக இருப்பதே ஆன்மா (க்ஷேத்திரக்ஞன்) என்று சொல்லப்படுவது.

இவ்உயிர் இவ்உடம்பு இதனி லேஇருந்து
அவ்வுடல் பயந்திடும் குணங்கள் ஆனவை
துவ்விடும் இறந்திடும் தோன்றும் இக்குணம்
எவ்வம்நான் உடையன என்று இருத்தலால். (20)

இந்த ஆன்மா என்பவன் இம்மாய வடிவான உடம்பிலே (க்ஷேத்திரத்திலே) இருந்து அவ்உடலினால் உண்டாக்கப்பட்ட சத்துவம், ராஜசம் முதலிய குணங்களை அனுபவிக்கும். குற்றமுடைய இந்தக் குணங்களில் நான் என்னுடையன என்று பற்று இருப்பதால் பிறக்கும் பின்னர் இறந்திடும்.

உண்பன யாவையும் உண்கின் றானும்மெய்க்
கண்கொடுஎப் பொருளையும் காண்கின் றானும்என்
நண்பஎப் பொருட்கும்ஒத்து இருக்கும் நாதனும்
எண்செய்துஇவ் உடம்பிலே நின்ற ஈசனே. (21)

என் தோழனாகிய அருச்சுனா, உடலை வலிமை உடையதாகச் செய்து அதன்கண் நிற்கின்ற உடலுக்கு உரிய ஆன்மா, உண்பவைகளான இன்ப துன்பங்கள் உண்ணும் அனுபவம் உடையவனாக, உண்மையான தமது பார்வையைக் கொண்டு, எப்பொருளையும் அருகில் இருந்து பார்க்கின்றவன் ஆகவும், எவ்வகைப் பட்ட பொருளிலும் அது அதுவாகவே இருக்கும் மேலான பரமான்மாவும் ஆகும்.

இப்படி உயிரையும் யாக்கை தன்னையும்
மெய்ப்பட அறிந்தவன் வேட்டவே நுகர்ந்து
ஒப்புரவு அன்றியே ஒழுகி வாழினும்
பொய்ப்படு பிறவியின் மறித்தும் போகலான். (22)

இப்படி முற் கூறிய ஆன்மாவையும் (க்ஷேத்திரக்ஞனையும்), உடலையும் (க்ஷேத்திரத்தையும்) குரு உபதேசத்தினால் உண்மையாக அறிந்தவன் தன்னால் விரும்பப்படும் இன்பங்களை அனுபவித்து, சாத்திர விதியை அனுசரியாமலேயே நடந்து வாழ்ந்தாலும் பொய் ஆகிய பிறவியின்கண் மீண்டும் செல்லான்.

செறியும்இப் பொருளினைச் சிலர்தி யானம்ஆம்
குறியினால் தம்முளே காண்கு வார்சிலர்
அறிவரும் சாங்கிய யோகம் ஆகிய
நெறியினால் எங்குமாய் நிற்பக் காண்பரால். (23)

*அனைத்து உயிர்களிலும் நிறைந்து இருக்கும் இவ்வான்மாவைச் சிலர் தியான வடிவமான ஆன்ம சிந்தனையில் தம் புத்தியிலே காண்பர். சிலர் அறிதற்கு அரிய சாங்கிய யோகம் (சிரவண, மனை) ஆகிய நெறியினால் எங்குமாய் நிற்கக் காண்பர்.*

இருமையும் அறிவதற்கு இடம்இ லாதவர்
ஒருமகன் தெய்வம்என்று உரைத்த ஒன்றையே
அருமையில் அருச்சனை செய்வ ரால்அதன்
பெருமையில் அவர்களும் பிறவி மேவிடார். (24)

*முற்கூறிய தியானம், சாங்கிய யோகம் என்னும் இருவகை வழிகளாலும் அறிவதற்கு இயலாத சில மந்த புத்தி உடையோர் தெய்வம் என்று குருநாதர் உரைத்த இது ஒன்றையே தினமும் சிரத்தையோடு வழிபடுவர். அதன் பெருமையால் அவர்களும் பிறவியைப் பெற மாட்டார்.*

போவன நிற்பவாம் யாக்கை பூண்டுகொண்டு
யாவரும் துயர்ப்படு கின்ற ஈதுஎலாம்
மேவரும் உடல்உயிர் வேறு பாட்டினை
ஆவகண்டு அறிவதுஓர் அறிவுஇ லாமையே. (25)

*நடப்பன, நிற்பன ஆகிய உடல்களைக் கொண்டு அனைவரும் துன்பப்படக் காரணமான இவை அனைத்தும் பொருந்துதற்கு அரிய உடல் (க்ஷேத்திரம்), உயிர் (க்ஷேத்திரக்ஞன்) வேறுபாட்டினை மாயா வசத்தால் ஆராய்ந்து அறியாததும் ஓர் அறியாமையே.*

கெடுகின்ற பூதங்கள் தோறும் கெடாதே
வடுஇன்றி நின்ற மறைப்பொருள் தன்னை
நடுஎன்று கண்டவன் நல்லன எல்லாம்
கடுகின்து ணைஒழி யாவகைக் கண்டான். (26)

*அழிகின்ற பூதங்கள் தோறும் அழியாமல் சகல குற்றங்களும் இன்றிச் சமமாய் நின்ற வேதப் பொருள் ஆன பரமேசுவரன் என்னும் ஆன்மாவை, அனைத்துப் பூதங்களிலும் ஏக வடிவாய்க் கண்டவன் மங்களங்கள் அனைத்தையும் கடுகு அளவாவது தவறாமல் காண்பான்.*

ஒத்துஎங்கும் ஆய ஒருமைப் பொருளினை
அத்தன் மையினால் அறியும் அவனே
செத்தும் பிறந்தும் திரியா வகைதனை
மெய்த்தன் மையிலே புகவிடு கின்றான். (27)

*அனைத்துப் பூதங்களிலும் சமமாய் நிறைந்திருப்பது ஆன, அனைத்து வேறுபாடுகளில் இருந்தும் விடுபட்ட ஆன்மாவை அத்தன்மையால் அறியும் அவனே இறந்தும் பிறந்தும் சுழலாதபடி தன்னை உண்மையான வீட்டுலகிலே புக விடுகின்றான்.*

உணர்வுஅவிகாரி என்றும் வினைஎலாம் உடம்பி னோடே
புணர்வன என்றும் கண்டான் பொய்இலா மெய்யைக் கண்டான்
இணர்மலர் முடியாய் எல்லா வினைகளும் செயினும் ஆன்மா
குணம்இலி ஆத லாலே அவற்றொடும் கூடி நில்லான். (28)

மலர்க் கொத்துக்களால் ஆகிய மாலையையும் மகுடத்தையும் அணிந்த அருச்சுனா, ஆன்மா வேறுபாடு அற்றது என்றும், உலகத் தொடர்பான அனைத்துக் கரும வினைகளும் உடம்புடன் தொடர்புடையன என்றும் கண்ட அறிவுடையவனே பொய் இல்லாத மெய்ப்பொருளைக் கண்டவன் ஆவான். அனைத்து வினைகளையும் செய்தாலும் ஆன்மா குணம் அற்றது ஆகையால் அக்கர்மங்களோடு தொடர்பு அற்று இருக்கும்.

உன்னிய வானம் எங்கும் ஒழிவுஅற நிறைந்த தேனும்
தன்னுடை நுண்மை யாலே பிறவொடும் சார்தல் உண்டோ
பன்னிய இதுபோல் எங்கும் பரந்துளன் எனினும் அங்கும்
மன்னிய ஈசன் அந்த உடம்பொடு மருவ மாட்டான். (29)

கருதிய வானமானது ஒழிவின்றி உள்ளும் புறமும் பரந்து இருந்தாலும் தனது நுண்மையாலே பிறவற்றுடன் தொடர்பு உடையது ஆக மாட்டாது. சொல்லிய இவ்வானம் போல, அனைத்து உயிர்களின் உள்ளும் புறமும் பரவி இருக்கும் ஈசன் ஆகிய ஆன்ம தேவன் அவ்வுடல்களோடு சம்பந்தப் பட மாட்டான்.

இரவிதான் ஒருவ னேஆய் நின்றுஇந்த உலகத்து எங்கும்
விரவிய இருளை நீக்கி விளக்குறுமாறு போலத்
தரவியா வரும்முன் இல்லாச் சராசர உடம்பு தோறும்
பரவியான் உரைத்த மாயோன் ஒருவனே பரந்து நிற்பான். (30)

சூரியன் தான் ஒருவனே நின்று இவ்வுலகத்தில் தோன்றிய இருளை நீக்கி, அவைகளை ஒளிமயம் ஆக்குதல் போல, தம்மை உண்டாக்கிட முன்னே ஒருவரையும் பெறாத, நடப்பன நிற்பனவான உடல்கள் தோறும் நின்று யான் முன் அருளிச் செய்த க்ஷேத்ரக்ஞனான ஆன்மா ஒருவனே அவைகளை ஒளிரச் செய்பவன்.

ஓரின்மேல் ஆகி நின்ற உயிரினோடு உடம்புக்கு உள்ள
பேரினோடு இறப்பு மூப்பு பிறப்புஎனும் இவற்றை வேறுஆய்ப்
பாரின்மேல் அறிவார் வீடு பற்றினார் என்றான் பார்த்தன்
தேரின்மேல் நின்றே வேத சிரத்தின்மேல் இருக்கும் சீரோன். (31)

அருச்சுனனின் தேரின் மீது நின்றபடியே வேதத்தின் முடிமேல் இருக்கும் கண்ண பகவான், ஆராய்ந்து பார்க்கும் இடத்து இந்திரியங்கள் அனைத்திற்கும் மேலாய் நிற்கின்ற ஆன்மாவோடு உடலையும் அதற்கு உள்ள இறப்பு, பிறப்பு என்னும் தர்மங்களையும் வேறாகக் கருதிப் பூமியில் அறிபவர் வீடுபேற்றினைப் பெற்றவர் ஆவர் என்று அருளிச் செய்தான்.

பதின்மூன்றாவது க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம் நிறைவுற்றது.

# பதினான்காவது குணாதீத அத்தியாயம்

செய்ய மாமலர் மேல்உறை செல்வியும்
வையம் ஆம்மட வாளும் மகிழ்ந்ததோள்
ஐயன் மெய்யைஅன் பால்அடி யோம்எலாம்
உய்ய மீள உரைக்கத் தொடங்கினான். (1)

அழகிய தாமரை மலரின் மேல் வீற்று இருக்கும் திருமகளும், உலகாளும் பூதேவியும் அணைந்து மகிழ்ந்த தோள்களை உடைய கண்ணபிரான் மெய்ம்மையான ஞானத்தைக் கருணையினால் நாங்கள் எல்லோரும் பிழைக்குமாறு மீண்டும் அருளிச் செய்யத் தொடங்கினான்.

நல்ல ஆறுஅறிவு யாதினும் நல்லது
அல்லல் தீர்தவத் தோர்க்குஅறிவு ஆவது
மல்உ லாவிய தோள்முடி மன்னயான்
சொல்லல் மேய அதன்துணிவு ஆயதே. (2)

வலிமை பொருந்திய புயத்தையும் மகுடத்தையும் உடைய அருச்சுனா, நன்மை தரும் யாகம், தவம் அனைத்தையும் விட உத்தமம் ஆனது,துன்பம் நீக்கிய தவத்தினை உடைய முனிவர்களுக்கு அறிவாய் இருப்பது,நான் சொல்லத் தொடங்கிய அந்த ஞானத்தின் துணிவு ஆனது.

இன்ன தன்மையின் ஞானத்து இயற்கையால்
என்னை வந்துஅடைந் தார்இவ் உலகினில்
பின்னை வந்துஅடை யார்இற வார்இதன்
தன்மை யாதுஎனில் ஆங்குஅதும் சாற்றுவாம். (3)

இப்படிப்பட்ட தன்மையை உடைய ஞானத்தின் இயற்கையால் என்னை வந்து அடைந்தவர்கள், இவ்வுலகிலே மீண்டும் படைக்கும் போது தோன்ற மாட்டார். உலக அழிவில் இறக்கவும் மாட்டார். இவ்வாறான ஞானத்தின் இயற்கை யாது என நீ வினவினால் அதனையும் பற்றி இனிக் கூறுவோம்.

மூத வானன் குணம்அவை மூன்றினும்
பேதம் ஆகும் பிரகிருதி தன்னிலே
காதலால் வைப்பன் யான்கரு அக்கருப்
பூதம் யாவும் புலப்படு கின்றவே. (4)

முதிர்ந்த தவம் உடைய அருச்சுனா, இனிமேல் கூறப்படும் சத்துவம், இராசசம், தாமசம் ஆகிய முக்குணங்களால் வேறுபாடு அடைகின்ற எனது மாயையில் ஆசை கொண்டு நான் உறுதியான கருப்பத்தை உண்டாக்குவேன். மறைந்து இருந்து செய்யும் அக்கர்ப்ப தானத்தினாலேயே பூதங்கள் அனைத்தும் தோன்றுகின்றன.

இந்த வண்ணத்தி னால்இவ் உலகிடை
வந்த யோனி எலாம்வரு வித்திடும்
தந்தை யான்அவை ஈன்றுஅளிக் கின்றதாய்
அந்த என்னுடை மாயையது ஆகுமால். (5)

முற்கூறிய விதத்தினால் இவ்வுலகத்திலே அனைத்து யோனிகளிலும் தோன்றிடக் காரணமான மூர்த்திகள் அனைத்தையும் தோற்றமளிக்கக் கர்ப்பதானம் செய்யும் தந்தை ஆகிய பரம்பொருள் நான். அம்மூர்த்திகளைப் பெற்று வளர்க்கின்ற தாய் என்னுடைய மாயை ஆகும்.

ஏன்று முன்னம் குணம்என்று இயம்பிய
மூன்று மூலப் பிரகிருதி தன்னிலே
தோன்றி உள்ளன தொல்அறிவைப் பற்றி
ஊன்றி நிற்ப அவற்றை உணர்த்துவாம். (6)

குணமாக முன்னர் நான் அருளிச் செய்த மூன்றும், மூலமான பிரகிருதியில் இருந்து தோன்றி இருக்கின்றன. பழைமையான அறிவு ஆகிய சீவான்மாவைப் பிடித்து இவ்வுடலின்கண் பலமாகக் கட்டியுள்ளன. இனி அவை பற்றி உணர்த்துவோம்.

சத்து வம்ரச சோடு தமசுஎன
உய்த்து வந்த பெயரை உடையன
வெத்து வந்துவ மும்தரு கிற்பன
மெத்து வந்தவற் றின்செயல் வேறுகேள். (7)

சீவான்மாவைப் பந்தப்படுத்தும் தொடர்பு உடைய குணங்கள் ஆகிய சத்துவம் எனவும், ரசசு (இரசோ குணம்) எனவும், தமசு (தாமசம்) எனவும் பெரியோர்களால் கூறப்பட்டு வந்த பெயர்களை உடையன.இன்ப துன்பங்களான எவ்வகைப் பட்ட இருமைகளையும் சீவான்மாவுக்குக் கொடுப்பனவாம். மிகுதியாய் வந்த அந்த சத்துவாதி குணங்களின் செய்கையின் வேறுபாட்டையும் கேள்.

பற்றும் மாசுஇன்மை யால்பளிங்கு ஒப்பது
உற்ற நல்அறி வானதுஉண்டு ஆக்குவது
எற்றும் இன்பம்அல் லால்துன்பம் என்பது
சற்றும் இல்லது சத்துவம் ஆவதே. (8)

சத்துவ குணமாவது குற்றம் இல்லாத தன்மையினால் பளிங்கு போல ஒளியுள்ளது. பயன் தரும்படியான நல்ல ஞானத்தை உண்டாக்குவது.என்றும் இன்பத்தைத் தவிரத் துன்பம் சற்றும் தராதது.

ஓது ராக உருவம் உடையது
தாது கல்புரை உள்நிறம் சார்ந்தது
பேது செய்வினை யோடுஅறி வைப்பின்னற்கு
ஏது ஆயது இராசதம் என்பதே. (9)

இரசோ குணம் என்று சொல்லப் படுவது ஆசையைத் தன்னிடத்தே உடையது.காவிக் கல்லின் நிறத்தை உள்ளே பொருந்தியது.மதியை மயக்கும் வினைகளோடு சீவாத்மாவைப் பந்தப்படுத்தக் காரணமாய் இருப்பது.

குறியும் நீலம் மயக்கமும் கோதுஇலா
நெறிகள் தம்மை இகழ்தலும் நித்திரை
செறிதல் ஆனது மற்றுஇவற் றால்திண்என்று
அறிவை மாய்க்கும் அதுதமம் ஆவதே. (10)

தமோ (தாமசம்) குணம் என்று சொல்லப் படுவது அறிகுறியும் கருநிறம் உடையதாய் மயக்கமும், குற்றம் அற்ற நல்லொழுக்கங்களை இகழும் தன்மையும், தூக்கமும், ஆகிய இவைகளால் திடமாக அறிவை மயக்கி வருத்துவது ஆகும்.

உரைசெய் சத்துவம் இன்பத்து உய்த்திடும்
இரசதம் வினைகளோடு அறிவை ஆர்த்திடும்
புரைசெய்துஇவ் அழுக்கையே பொருந்திப் போர்த்திடும்
தரைசெறி புகழினாய் தமம்என் கின்றதே. (11)

பூமியில் நிறைந்த புகழைப் பெற்ற அருச்சுனா,முன் சொன்ன சத்துவ குணமானது சீவனை இன்பத்திலே செலுத்தும். இரஜோ குணமானது உலகியல் வினைகளோடு சேர்த்து வைக்கும். தமோ குணம் என்பது அவசியம் அறிய வேண்டுவனவற்றை அறியாமல் செய்து, மாயையினால் ஆவரணவத்தை உண்டாக்கிப் பெரியோர் சேர்க்கையால் ஏற்பட்ட ஞானத்தை மறைக்கும்.

வாழும் சத்துவம் மற்றைய இரண்டையும் மறைத்துத்
தாழும் மற்றைய இரண்டும்அத் தமோகுணம் தழைப்பின்
வீழும் சத்துவ தமங்கள்அவ் இரசதம் விளைவில்
ஊழின் மற்றுஇவை இரண்டும் தாழ்ந்து ஒன்றுமிக்கு உளதுஆம். (12)

இரசோ குணம், தமோ குணம் ஆகிய இரண்டையும் மறைத்துச் சத்துவ குணம் வாழும். தமோ குணமானது வளர்ந்தால் இரசோகுணம் சத்துவ குணம் ஆகிய இரண்டும் அடங்கி விடும். இந்த இரசோ குணமானது வளர்ச்சி அடைந்தால் சத்துவ குணம் தமோ குணம் ஆகிய இரண்டும் அடங்கி விடும். சீவர்களின் வினையால் இங்கே கூறியபடி இவ்விரண்டு குணங்களும் அடங்கி ஒரு குணம் அதிகரித்து இருக்கும்.

ஒத்துநல் அறிவுமிக்கது யாதுஒரு போதுஅப்போது
சத்துவம் தழைத்தது ஆகும் தாங்கரும் வினைகளே கொண்டு
உய்த்துவந்து ஆசை கூர லோபம்வந்து உற்ற போது
மத்திம குணமே சால் வளர்ந்தது என்று அறிநீமன்னா. (13)

அருச்சுனா, யாது ஒரு காலத்திலே சமமாய் நல்ல அறிவு ஒளி மிகுதியாய் உண்டாகின்றதோ, அப்போது சத்துவ குணம் தழைக்கும்.தாங்கிட இயலாத வினைகளை உண்டாக்கிக் கொண்டு, தன்னை அதில் ஈடுபடுத்தி ஆசையானது தோன்றி அதிகரிக்கும்படி லோப குணம் வந்து அடைந்த காலத்தில் மத்திமம் ஆன இரசோ குணம் மிகவும் வளர்ந்தது என்று நீ அறிவாய்.

தக்கது தகாதுஎன்று ஒன்றைத் தான்அறி யாத போதும்
எக்கருமங்கள் மாட்டும் இகழ்ச்சியோடு இருக்கும் போதும்
ஒக்கமெய் மயக்கத் தோடும் உறக்கம்வந்து உற்ற போதும்
மிக்கது தமமே என்று விசயநீ அறிய வேண்டும். (14)

யாதானும் ஒரு பொருளை, இது தகுதியானது, தகுதி அற்றது என்று தான் அறியாத காலத்தும், எவ்வகைப் பட்ட வினைகளின் இடத்தும் இகழ்ச்சியோடு இருக்கும் காலத்தும்,

பொருந்திய மெய் மயக்கத்தோடும் கூட உறக்கம் வந்த காலத்தும் தமோ குணம் அதிகரித்தது என்று அருச்சுனா நீ அறிந்து கொள்ள வேண்டும்.

தக்க சத்துவமே நிகழ்ந்தபோது இறந்தோர்
தெய்வயோ னிகளிலே சார்வார்
மக்களில் பிறப்பார் இராசத குணமே வளர்ந்த
போதுஉ டம்பினைத் துறந்தோர்
மிக்குஎழும் தமமே விளைந்தபோது இறந்தோர்
விலங்குச்சா திகளிலே வீழ்வார்
ஒக்கமற்று இவற்றின் பலன்களும் தெரிய
உரைக்கிறேன் இவற்றையும் உணர்வாய். (15)

மேலான சத்துவ குணம் வளரும் போது மரணம் அடைந்தோர் தேவ யோனிகளிலே பிறப்பர். இராசத குணம் வளர்ந்த போது உடலினை நீக்கினோர் மானிடராய்ப் பிறப்பர். மிகுந்து எழுகின்ற தமோ குணம் வளர்ச்சி அடைந்த போது மரணம் அடைந்தோர் விலங்குகளாய்ப் பிறப்பர்.இதற்குச் சமம் ஆக இச்சத்துவம் முதலான குணங்களின் வேறு பயன்களையும் உனக்கு விளங்குமாறு கூறி அருள்கின்றேன். இவைகளையும் நீ அறிவாய்.

அருங்குணம் ஆய சத்துவ பலம்ஆம்
அழுக்குஅறல் இராசத பலம்ஆம்
பெருந்துயர் உழத்தல் தமோபலம் ஆகும்
பேதைமை பேசிய முறையே
பொருந்திய இந்தக் குணங்கள்மூன் றாலும்
பூதசா லங்களுக்கு எல்லாம்
வரும்திரு ஆய ஞானமோடு லோப
மயக்கம்என்ற இன்னன வருமால். (16)

அடைதற்கு அரிய குணம் ஆகிய சத்துவ தர்மத்தின் பயன் மலம் அற்றதாம். இராசத குணத்தின் பயன் பெரிய துன்பத்தை அனுபவித்தல். தாமத குணத்தின் பயன் அஞ்ஞானம். முன் சொல்லிய இவ்வொழுங்கின்படியே பொருந்திய இக் குணங்கள் மூன்றாலும் உயிர்கள் அனைத்திற்கும் வருவன அழகாகிய ஞானம்,உலோபம், அஞ்ஞானம் என்று சொல்லப் படுகின்ற இத்தன்மையவான பலன்களாம்.

சத்துவ மாந்தர் பரகதி அடைவர்
தமத்துஉளோர் அதோகதி சார்வார்
மத்திம குணத்தோர் ஆயினோர் நடுவில்
மானுடப் பிறவியாய் வாழ்வார்
இத்திறம் ஆய உருவமே விகாரி
யான்அவி காரிஎன்று இவற்றை
மெய்த்திறன் ஆக அறிந்தவன் அறிந்த
பொழுதிலே வீட்டுஇன்பம் அடைந்தான். (17)

சத்துவ குணம் பொருந்திய மானிடர் பரலோகத்தை அடைவர். தமோ குணம் உடையோர் பசு முதலியனவாகப் பிறப்பர். இடைப்பட்டதான இரசோ குணத்தினை உடையோர் நடுவில் மானிடப் பிறவியாய் வாழ்வர். இத்தன்மையான சத்துவாதி குண வடிவங்களே கர்த்தா.அவற்றின் சாட்சியாக விளங்கும் நான் கர்த்தா இல்லை என்று உள்ளபடி அறிந்த மானிடன் அறிந்த பொழுதிலே வீட்டின்பத்தை அடைந்தவன் ஆகின்றான்.

உடம்புடன் இருந்தே உரைத்த இக்குணங்கள்
மூன்றையும் உள்ளவாறு அறிந்து
கடந்தவன் பிறப்புமூப்பு இறப்புஆதி
ஆகவே கட்டுஉ ரைக்கின்ற
விடம்புரை இடும்பை யாவையும் கடந்து
வீட்டுஇன்பம் விளைபவன் என்றான்
தடங்கடல் இடையே வளர்ந்தவன் அவற்கு
வேறுஇது தனஞ்சயன் உரைப்பான். (18)

அகலமான திருப்பாற் கடலின் கண்ணே கண்வளர்ந்த பகவான், உடலுடன் கூடி வாழ்பவனாக இருந்தே சொல்லிய சத்துவம் முதலான முக்குணங்களையும் உள்ளபடியே மாயத்தின் மயம் என்று அறிந்து அனைத்தையும் கடந்தவன், பிறப்பு, இறப்பு, மூப்பு முதலாக உறுதிபடச் சொல்லுகின்ற நஞ்சினை ஒப்பான துக்கங்கள் அனைத்தையும் தியாகம் செய்து வீட்டு இன்பத்தை விரும்புபவன் என்றான். அந்தப் பகவான் இடத்து அருச்சுனன் வேறு செய்திகளைக் கேட்கத் தொடங்கினான்.

கண்ணிய உலகில் கடப்ப அரிது ஆய
குணங்கள்மூன் றையும்கடந்து உயர்ந்த
புண்ணியர் இயல்பும் கடந்துஉறு நெறியும்
குறியையும் புகன்றுஅருள் என்ன
எண்ணிய உலகும் உலகில்வாழ் உயிரும்
இருவினை யாக்கையும் ஆகப்
பண்ணியும் அழித்து மேவிளை யாடும்
பரமன்வேறு இவ்வகை பணிப்பான். (19)

வீடு அடைவதற்குக் காரணமாகக் கருதிய இவ்வுலகில் ஒருவரால் கடத்தற்கு அரிது ஆகிய குணங்கள் மூன்றையும் கடந்து உயர்ந்த புண்ணியர்களின் இயல்பையும், அவர் அக்குணங்களைக் கடந்து நிற்கும் வழியையும், அவர்களின் இலக்கண வடிவான அடையாளங்களையும் பற்றி உபதேசித்து அருள்க என்று அருச்சுனன் கேட்க, பதினான்கு ஆக எண்ணப் படுகின்ற உலகங்களும், அவ்வுலகங்களில் வாழும் உயிர்களும் இருவினைக்கு ஈடாகிய உடல்களும் உண்டாகும்படி படைத்தும் அழித்தும் விளையாடும் பரமன் வேறு இவ்வாறு அருள் செய்தார்.

வாய்மைய அல்லாக் குணம்அவை மூன்றின்
காரிய மாய்வரு கின்ற
தூய்மையும் தொழிலும் மயக்கமும் என்று
சொல்லிய துறைஇவை மூன்றும்
சேய்மைய என்று பெறாதபோது அவாவல்
பெற்றபோது இரங்கல் செய்யாதான்
ஆய்நொது மலன்போல் குணங்களோடு இருந்தே
அவற்றினால் சலித்தி டான்அன்றே. (20)

மாயம் ஆகிய சத்துவம் முதலான குணங்கள் மூன்றினுடைய செயல்களாய் வருகின்ற தூய்மையும் செயலும் மயக்கமும் என்று சொல்லிய இம்மூவகைத் துறையும் தூரமாய் நீங்கின என்று, அடையாத போது விரும்புதலும், அடைந்த போது அவைகளை வெறுத்தலும் செய்யாதவன், தான் சாட்சி போல சத்துவம் முதலான குணங்களோடு கூடி

இருந்தே அக்குணங்களினால் தனது நிலையில் இருந்து அசைக்கப்படாதவன், குணத்திற்கு அப்பாற்பட்டவன்.

மானம்அவ மானம்வரும் இன்பம்இடர் மண்பொன்
ஆனமகிழ்வு அப்பிரியம் அன்பர்பகை ஆனோர்
ஊனஉரை யோடுபுகழ் உற்றபொழுது ஒப்பான்
ஈனம்உறு கின்றகுணம் ஆனவை இகந்தான். (21)

மான அவமானங்களிலும், வருகின்ற இன்ப துன்பங்களிலும், மண்ணிலும், பொன்னிலும் உண்டான மகிழ்ச்சி, மகிழ்ச்சி இன்மைக்கு உரிய பொருள்களிலும், பகைவர் இடத்திலும் அன்பர் இடத்திலும், புகழ்தலும் நிந்தையும் பொருந்தின காலத்தில் சமமாய் இருப்பவன், குற்றம் தருகின்ற குணங்களைக் கடந்தவன்.

இப்பரிசி னால்வரு குணங்களை இகந்தே
மெய்ப்பருவம் ஆயபெரு வீடுபெறு கிற்பார்
எப்பரிசி னாலும்இடை இன்றிஎழும் அன்பால்
ஒப்பவர் இலாதஎனை உன்னும்அவர் கண்டாய். (22)

இத்தன்மையினால் வருகின்ற குணங்களை நீக்கி உண்மைத் தன்மையான பேரின்ப வீட்டைப் பெறுபவர், எத்தன்மையினாலும் இடையில்லாது தோன்றும் அன்பாலே ஒப்புமை இல்லாத என்னையே அவர் நினைப்பர் என்பதை அறிவாய்.

ஒழியாது என்றும் யாவர்க்கும் யானே உணர்த்தி வருதலால்
அழியா அறிவும் [illegible] இன்பம் ஆனதுவும்
அழியா அறமும் என்உள்ளே உளஆ [illegible]
சுழியா நின்ற பெருவெள்ளத்து இடையே பண்டு துயில்கொண்டான். (23)

சுழியோடு கூடிய பெரு வெள்ளத்திலே முன் பள்ளி கொண்டு அருளிய பகவான் ஆகிய நான், நீங்காமல் எப்போதும் யாவருக்கும் நானே உணர்த்தி வருதலால் நிலையான அறிவும் ஞானமும், அமுதத்துக்கு ஒப்பான வீடுபேறும், அழியாத பேரின்பமும், என்னிடம் இருந்தே உண்டாகின்றன என்று அருளிச் செய்தான்.

பதினான்காவது குணாதீத அத்தியாயம் நிறைவுற்றது.

உடம்புடன் இருந்தே உரைத்த இக்குணங்கள்
மூன்றையும் உள்ளவாறு அறிந்து
கடந்தவன் பிறப்புமூப்பு இறப்புஆதி
ஆகவே கட்டுஉ ரைக்கின்ற
விடம்புரை இடும்பை யாவையும் கடந்து
வீட்டுஇன்பம் விளைபவன் என்றான்
தடங்கடல் இடையே வளர்ந்தவன் அவற்கு
வேறுஇது தனஞ்சயன் உரைப்பான். (18)

அகலமான திருப்பாற் கடலின் கண்ணே கண்வளர்ந்த பகவான், உடலுடன் கூடி வாழ்பவனாக இருந்தே சொல்லிய சத்துவம் முதலான முக்குணங்களையும் உள்ளபடியே மாயத்தின் மயம் என்று அறிந்து அனைத்தையும் கடந்தவன், பிறப்பு, இறப்பு, மூப்பு முதலாக உறுதிபடச் சொல்லுகின்ற நஞ்சினை ஒப்பான துக்கங்கள் அனைத்தையும் தியாகம் செய்து வீட்டு இன்பத்தை விரும்புபவன் என்றான். அந்தப் பகவான் இடத்து அருச்சுனன் வேறு செய்திகளைக் கேட்கத் தொடங்கினான்.

கண்ணிய உலகில் கடப்ப அரிது ஆய
குணங்கள்மூன் றையும்கடந்து உயர்ந்த
புண்ணியர் இயல்பும் கடந்துஉறு நெறியும்
குறியையும் புகன்றுஅருள் என்ன
எண்ணிய உலகும் உலகில்வாழ் உயிரும்
இருவினை யாக்கையும் ஆகப்
பண்ணியும் அழித்து மேவிளை யாடும்
பரமன்வேறு இவ்வகை பணிப்பான். (19)

வீடு அடைவதற்குக் காரணமாகக் கருதிய இவ்வுலகில் ஒருவரால் கடத்தற்கு அரிது ஆகிய குணங்கள் மூன்றையும் கடந்து உயர்ந்த புண்ணியர்களின் இயல்பையும், அவர் அக்குணங்களைக் கடந்து நிற்கும் வழியையும், அவர்களின் இலக்கண வடிவான அடையாளங்களையும் பற்றி உபதேசித்து அருள்க என்று அருச்சுனன் கேட்க, பதினான்கு ஆக எண்ணப் படுகின்ற உலகங்களும், அவ்வுலகங்களில் வாழும் உயிர்களும் இருவினைக்கு ஈடாகிய உடல்களும் உண்டாகும்படி படைத்தும் அழித்தும் விளையாடும் பரமன் வேறு இவ்வாறு அருள் செய்தார்.

வாய்மைய அல்லாக் குணம்அவை மூன்றின்
காரிய மாய்வரு கின்ற
தூய்மையும் தொழிலும் மயக்கமும் என்று
சொல்லிய துறைஇவை மூன்றும்
சேய்மைய என்று பெறாதபோது அவாவல்
பெற்றபோது இரங்கல் செய்யாதான்
ஆய்நொது மலன்போல் குணங்களோடு இருந்தே
அவற்றினால் சலித்தி டான்அன்றே. (20)

மாயம் ஆகிய சத்துவம் முதலான குணங்கள் மூன்றினுடைய செயல்களாய் வருகின்ற தூய்மையும் செயலும் மயக்கமும் என்று சொல்லிய இம்மூவகைத் துறையும் தூரமாய் நீங்கின என்று, அடையாத போது விரும்புதலும், அடைந்த போது அவைகளை வெறுத்தலும் செய்யாதவன், தான் சாட்சி போல சத்துவம் முதலான குணங்களோடு கூடி

இருந்தே அக்குணங்களினால் தனது நிலையில் இருந்து அசைக்கப்படாதவன், குணத்திற்கு அப்பாற்பட்டவன்.

மானம்அவ மானம்வரும் இன்பம்இடர் மண்பொன்
ஆனமகிழ்வு அப்பிரியம் அன்பர்பகை ஆனோர்
ஊனஉரை யோடுபுகழ் உற்றபொழுது ஒப்பான்
ஈனம்உறு கின்றகுணம் ஆனவை இகந்தான். (21)

மான அவமானங்களிலும், வருகின்ற இன்ப துன்பங்களிலும், மண்ணிலும், பொன்னிலும் உண்டான மகிழ்ச்சி, மகிழ்ச்சி இன்மைக்கு உரிய பொருள்களிலும், பகைவர் இடத்திலும் அன்பர் இடத்திலும், புகழ்தலும் நிந்தையும் பொருந்தின காலத்தில் சமமாய் இருப்பவன், குற்றம் தருகின்ற குணங்களைக் கடந்தவன்.

இப்பரிசி னால்வரு குணங்களை இகந்தே
மெய்ப்பருவம் ஆயபெரு வீடுபெறு கிற்பார்
எப்பரிசி னாலும்இடை இன்றிஎழும் அன்பால்
ஒப்பவர் இலாதஎனை உன்னும்அவர் கண்டாய். (22)

இத்தன்மையினால் வருகின்ற குணங்களை நீக்கி உண்மைத் தன்மையான பேரின்ப வீட்டைப் பெறுபவர், எத்தன்மையினாலும் இடையில்லாது தோன்றும் அன்பாலே ஒப்புமை இல்லாத என்னையே அவர் நினைப்பர் என்பதை அறிவாய்.

ஒழியாது என்றும் யாவர்க்கும் யானே உணர்த்தி வருதலால்
கிழியா அறிவும் கெடாவீடும் கேடுஇல் இன்பம் ஆனதுவும்
அழியா அறமும் என்உள்ளே உளஆ காநின் றனஎன்றான்
சுழியா நின்ற பெருவெள்ளத்து இடையே பண்டு துயில்கொண்டான். (23)

சுழியோடு கூடிய பெரு வெள்ளத்திலே முன் பள்ளி கொண்டு அருளிய பகவான் ஆகிய நான், நீங்காமல் எப்போதும் யாவருக்கும் நானே உணர்த்தி வருதலால் கெடாத ஞானமும், அமுதத்துக்கு ஒப்பான வீடுபேறும், அழியாத பேரின்பமும், நிலையான அறமும் என்னிடம் இருந்தே உண்டாகின்றன என்று அருளிச் செய்தான்.

பதினான்காவது குணாதீத அத்தியாயம் நிறைவுற்றது.

# பதினைந்தாவது பிரபஞ்ச அத்தியாயம்

சாயை அன்னஎன் வினைத்தளை அறுக்கவோ தகவுஇல்
பேயை இன்உயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான்
வேயை ஒன்றிய வரிசிலை விசயற்கு மீள
மாயை தன்னைஓர் மரம்ஒக்க வருணிக்கல் உற்றான். (1)

உடலை விட்டு நீங்காத நிழலைப் போல, பாவ புண்ணிய வடிவமான என்னுடைய வினை என்னும் விலங்கினை அறுக்கவோ? தகுதி அற்ற பூதகியின் இனிய உயிரை அழிக்கவோ? நந்த கோபன் திருமனையில் குழந்தையாய் வளர்ந்த பகவான், மூங்கிலால் வளைத்துக் கட்டப் பட்ட கட்டு அமைந்த வில்லை உடைய அருச்சுனனுக்கு மறுபடியும் இவ்வத்தியாயத்தில் உலகியல் தன்மை உடைய மாயையை ஒரு மரத்துக்கு ஒப்பாகச் சிறப்பித்துக் கூறத் தொடங்கினான்.

வேர்மேலது தலைகீழது வீவுஇல்லது வேதத்து
ஏர்மேவிய இலைமேவியது யாவும்புக றலினால்
ஆர்மேவிய அசுவத்தமது எனவேஅரசு அதனின்
பேர்மேயது பெருமாயைசெய் பிறவிப்பெரு மரமே. (2)

பெரிய மாயையினால் செய்யப் பட்ட சம்சார வடிவான (பிறவி என்கின்ற) பெரிய மரமானது மேன்மையானவற்றை வேராக உடையது. கீழ் ஆனவைகளைக் கிளைகளாக உடையது. அழியாத தன்மை உடையது. வேதத்தின் கர்ம காண்ட வாக்கியங்களை இலைகளாகப் பொருந்தியது. நிறைந்த அறம் மறம் என்ற மலர்களை உடையது. வேதங்கள் அனைத்தும் வருணித்தலால் அரசின் பெயரைப் பொருந்தியது.

இவ்வாறுஇதன் இயல்புஆகிய வகையாவெனில் யாதும்
ஒவ்வாவகை பெரிதுஆகிய பிரமத்துஉரு இடையே
வைவாள்வலி உழவாவரன் முறையேவரன் முறையே
மெய்வான்முதல் வரும்ஆதலின் மேல்ஆனது வேரே. (3)

கூரிய வாட் படையும் வலிமையும் உடைய வீரா, இவ்வாறு இதன் இயல்பு ஆகிய கூறுபாடுகள் யாவை என்றால், யாதொரு பொருளும் தனக்குச் சமானம் ஆகாதபடி பெரிது ஆகிய பிரம்மத்தின் வடிவத்தின் கண் இருந்து முறைப்படியே உண்டாகும் உண்மை போலத் தோன்றும் வானம் முதலான ஜகத்துக்கு மேலான காரணம் ஆன அந்தப் பிரம்மமே மூலமாம்.

ஊழால்வரும் உலகுஆகியும் உயிர்ஆகியும் எழலால்
கீழ்ஆனது தலையாஉறும் முதல்ஈறுஇடை கிளர்வாய்ச்
சூழ்ஆகிய பிறவித்தொடர் ஒருகாலமும் அடையப்
பாழ்ஆம்வகை அழியாமையில் அழியாததோர் படியே. (4)

உயிர்களின் வினை வசத்தால் தோன்றும் உலகங்கள் ஆகியும் உயிர்கள் ஆகியும் எழுவதால் கீழான பொருள் கிளைகளாகப் பொருந்தும். தோற்றம், இருத்தல், அழிவு ஆகியன பெருகிப் பந்த வடிவாகிய பிறவித் தொடர் யாதொரு காலத்தும் முழுவதும் சூனியம் ஆகும்படி அழியாமையால் அது அழியாத தன்மை உடையதே.

கருநாள்முதல் வினையால்அது வளர்காதல்செய் தலினால்
அருநான்மறை அவையேஇலை அவைஆம்என அறிநீ
வருநாள்களில் ஒருநாள் பெறும் விழைகஇன்மையி னாலே
பெருநாடுஅறி அசுவத்தமது எனல்ஆயது பெயரே. (5)

கருவில் தோன்றிய நாள் முதலாகப் புண்ணிய பாவ வடிவான கர்மங்களால் அச்சம்சார (பிறவியாகிய) மரம் ஆனது வளரும் விருப்பம் உடையதாய் இருத்தலால் அரியதான நான்கு வேதங்களே இலைகளாம் என நீ அறிக. வருகின்ற நாள்களில் ஒருநாள் இருக்கும் என நம்பும்படி இல்லாமையினாலே பெரிய உலகம் அறியும் படியான பெருமை உடைய அசுவத்த மரம் என அதன் பெயர் சொல்லல் ஆயிற்று.

மற்றுஇப்படி நிகழ்கின்றஇம் மாயாமரம் இதனின்
பெற்றித்திறம் இதுஅல்லது பிறிதுஇன்மையி னாலே
உற்றுஇப்படி உணர்வார்பொருள் எல்லாமும் உணர்ந்தார்
இற்றுஇப்பெரு மரத்தின்திறம் இன்னும்சில உளகேள். (6)

இவ்வாறாக விளங்கும் இந்தச் சம்சார மரத்தினுடைய தன்மை ஆகிய கூறுபாடுகள் இவையே அன்றி, வேறு தன்மைகள் இல்லாமையாலே, இங்குக் கூறிய படியே இதனை நுட்பமாக அறிபவர் வேதத்தின் பொருள் முழுமையும் அறிந்தோர் ஆவர். இத்தன்மையதான இப்பெரிய சம்சாரப் பிறவியாகிய மரத்தின் கற்பனைகள் இன்னும் சில உள்ளன. நீ கேட்பாயாக.

கண்ணேஎனை அனையாய்பல பிறவிக்கதி வழியே
மண்ணேமுதல் கீழ்ஆம்உலகு இடையேவளர் வனவும்
விண்ணேமுதல் மேல்ஆம்உலகு இடையேமிடை வனவும்
எண்ஏறிய பவம்ஆகிய பணையால்இசை தருமே. (7)

என் கண்மணி போன்ற அர்ச்சுனா, பிறப்பு இறப்பு என்கின்ற சுழற்சியின் வழியே மண், கீழ் உலகம், விண்ணுலகம் இடையே வளர்கின்ற வாழ்க்கையில், எண்ணில்லாத பிறவிகளாகிய கிளைகளோடு வளர்கின்ற மரம்.

நெறியால்வரு தருவேர்பல நிலம்ஆம்உலகு இடையே
அறியாமையொடு உறவீழ்தலில் வேர்கீழினும் உளதுஆம்
பிறியாதுஎழு குணம்ஆகிய பெருநீர்மையில் வளரும்
பொறிஆகிய இவைதாம்தளிர் போல்மேயது பொலிவே. (8)

பல உலகங்களில் அனுபவித்த பலவிதமான இன்ப அனுபவங்களால் உண்டாகின்ற ஆசை, வெறுப்பு என்னும் வாசனைகளால் ஆகிய வேர் ஆனது, பல மானிட உலகின் கண் அறியாமையோடு விழுந்து கிடத்தலால் அம்மரத்திற்கு மூலமான வேர் கீழேயும் உள்ளதாம். நீங்காது எழுகின்ற சத்துவம் முதலிய குணங்களால் ஆகிய பெருந்தன்மைகளால் வளரும் ஒலி முதலிய விஷயங்களாகிய இவைதாம் துளிர் இலைகள் போல அழகாகப் பொருந்தி உள்ளன.

கனவும்திகழ் கழுதாழியும் மிகுகந்தர்வ நகரும்
எனவந்துஅழி தலினால்உரு வதுஇன்றியது யாது
முனம்வந்திடும் முதல்நாளொடு முடிவுஇன்மையி னாலே
தனதுஅந்தமும் முதலும்தெரி தரஇல்லது தானே. (9)

இம்மரம் கனவுப் பொருளும், பொய்யாய் விளங்குகின்ற கானல் நீரும் மேலான கந்தருவ நகரமும் போலத் தோன்றி அழிவதால் தனக்கு எனச் சிறிதும் உருவம் இல்லாதது. முன்னே தான் இல்லாமல் இருந்து உண்டாகும். ஆதி காலமும் முடிவும் இல்லாமையினால் சம்சார மரத்தின் இறுதியும் முதலும் எவ்வுயிராலும் அறிய இயலாதது.

மந்திரம் ஆய இந்த மரத்தினைத் துறவுஎன் கின்ற
தந்திர வாளால் வெட்டித் தற்பரம் ஆகி நின்றே
இந்திர சாலம் என்ன யாவையும் காட்டு கிற்கும்
அந்தம்இ லாத என்னை அடைகையே அடுப்பது ஐயா. (10)

இரகசியம் ஆகிய இந்தச் சம்சார மரத்தைத் தமது திடமான துறவு என்னும் வாளால் வெட்டி, பிரம்ம வடிவமாய் இருந்த வண்ணம் இருந்தே இந்திர சாலம் போல மாய மயமான இவ்வுலகம் அனைத்தையும் தோற்றுவிக்கின்ற முடிவு அற்ற என்னைச் சரண் அடைதலே வீடுபேற்றை அடைவதற்கு உரிய வழியாம்.

துன்னிய ஆசை கோபம் கடந்தவர் காணத் தோன்றும்
என்உரு இயற்கை கேட்கில் யாவையும் காட்டு கின்ற
மன்னிய ஒளிகள் காணா வகையதாய் வந்து சேர்ந்தார்
பின்இயல் வேறுஒன்று ஆகாப் பெற்றியன் என்று பேசும். (11)

விதி வசத்தால் தம்மை நெருங்கிய ஆசை, கோபம் ஆகியவற்றை அறவே நீத்த ஞானிகள் காணும் படியாகத் தோன்றும் என் வடிவத்தின் இயல்பினை நீ கேட்டால், அனைத்தையும் தன் ஒளியால் காட்டுகின்ற நிலையான சூரியன், சந்திரன், அக்கினி என்னும் ஒளிகளினாலே வெளிப்படுத்திக் காட்ட இயலாத சோதி சொரூபமாய், வந்து சேர்ந்தோர்கள் பின் தன் இயல்பு வேறு ஒன்றாக ஆகாமல் செய்யும் தன்மையன் என்று என்னைப் பற்றி வேதம் சொல்லும்.

குடம்தொறும் தோன்று கின்ற காயமும் குலைதற்கு ஏற்பத்
தடம்புனல் தோறும் தோன்றும் சந்திரன் தானும் என்ன
உடம்புகள் தோறும் வேறுஆய் உயிர்என நின்றே அந்த
இடம்படு புலன்கள் ஆறும் இயல்பினில் இயற்று வேன்நான். (12)

குடங்கள் தோறும் தோன்றுகின்ற வானமும், அசைகின்ற குளத்து நீர் தோறும் பிரதிபிம்பித்துத் தோன்றும் சந்திரனைப் போலும் உடம்புகள் தோறும் வேறு ஆகி, உயிர் போல நின்று அந்த உடல்களில் அடங்கியுள்ள இந்திரியங்கள் ஆறினையும் இன்பத்திற்குக் காரணமான அதன் இயல்பான விஷயங்களில் நான் செலுத்துவேன்.

பூக்கமழ் நாற்றம் கொண்டு பொருவளி போகு மாபோல்
தீக்கனல் கின்ற வேலோய் சீவன்என் கின்ற சீரோன்
ஆக்கையை எய்தும் போதும் அதனைவிட்டு ஏகும் போதும்
போக்குஅரிது ஆய ஆறு புலன்களைக் கொண்டு போமால். (13)

நெருப்புப் போல் ஒளி வீசும் வேலினை உடைய அருச்சுனா, பொருந்திய வாயுவானது பூக்களின் மணத்தைக் கொண்டு போமாறு போல ஈசுவரன் என்கின்ற சீவான்மா கர்ம

வசத்தால் சரீரத்தை அடையும் போதும், அதனை விட்டுப் பரலோகம் செல்லும் போதும் போக்குதற்கு அரியவான ஆறு புலன்களையும் கொண்டு செல்லும்.

மின்னே அனைய உடம்புதனை விடுவது அடைவது ஆய்விடயம்
தன்நேர் இல்லா தான்தானே ஆர்கின் றான்அத் தன்மையினை
என்னே காணார் அறியாதார் அறிவார் யோகத் தாலேதம்
முன்னே காண்பர் இதன்இயற்கை தெளிநீ இன்னும் மொழிவன்கேள். (14)

மின்னலைப் போலத் தோன்றி அழிகின்ற உடலை விடுவதும் அடைவதும் ஆகித் தனக்கு யாதொன்றும் இணை இல்லாத சீவான்மா ஆனவன் விஷயங்களை அனுபவிக்கின்றான். அப்படிப்பட்ட தன்மையினை அறிவு அற்றவர் அறியார். என்னே ஆச்சரியம்! அறிவாளிகள் தியானத்தாலே தமக்கு எதிரே கண்டு அறிவர். இவ்வான்மாவின் இயல்பினை நீ அறிந்து கொள்ளுமாறு மேலே கூறுகின்றேன். கேள்.

இந்தியங் களுக்கும் கண்நான் இரவிதீ இந்து வின்பால்
வந்துஎழு கதிரும் நானே மாநிலம் ஆகி நின்றே
கந்துஇயன்ற அனைய தோளாய் கந்தமே முதலாம் தன்மை
தந்துஉரம் தரித்துஈது எல்லாம் தாங்குகின் றேனும் நானே. (15)

பொருந்திய தூணைப் போன்ற புயத்தை உடைய அருச்சுனா, இந்திரியங்களுக்கும் கண் நான் ஆகின்றேன். சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய இவைகளிடம் தோன்றும் ஒளியும் நானே. பூமியாகி நின்று மணம்முதலான குணங்களை அதற்குத் தந்து எனது வலிமையை அவற்றில் வைத்து அதிலுள்ள தாவர சங்கம வடிவான இந்த உயிர்கள் அனைத்தையும் தாங்குகின்றவனும் நானே.

முந்து வான்சுவை மூர்த்தம் ஆகிய
இந்து வாகிநின்று உணவு யாவினும்
தந்து சேர்சுவை தகஅு வற்றிலே
நந்தி டாவகை வளர்க்கின் றேனும்நான். (16)

முதன்மையான வானத்தின் கண்ணே அனைத்துச் சுவைகளுக்கும் மூலமான சந்திரன் வடிவாய் நின்று, உண்ணத் தக்க பொருள்யாவிலும், அவ்வவற்றிற்கு உரிய சுவைகளைக் கொடுத்து அவை கெடாதபடி வளர்ப்பவனும் நானே.

தின்ப நக்குவ சுவைப்ப உண்பவாய்
நன்ப யன்செயும் நால்வகை உண்டியும்
இன்பம் ஆம்வகை யாக்கைகள் தோறும்நின்று
அன்ப அங்கியாய் அறுக்கின் றேனும்நான். (17)

அருச்சுனா, தின்பனவும், நக்குவனவும், சுவைப்பனவும், உண்பனவுமாய் நல்ல பயனைச் செய்யும் நான்கு கூறுபாடுகளை உடைய அன்னத்தையும் இன்பத்திற்கு ஏதுவாகும்படி உயிருள்ள உடல்கள் தோறும் உதரக் கனலாக நின்று அவற்றை ஜீரணம் செய்பவனும் பரம்பொருளான நானே.

நல்ல மாந்தர்நல் அறிவு நன்குஇலாப்
புல்லர் தங்கள்புல் அறிவும் போர்திகழ்
வில்அ மைந்ததோள் வீரர் வீரயான்
அல்லது இல்லைஎன்று அறிய வேண்டுமே. (18)

போரின் பொருட்டு வில் பொருந்திய தோளை உடைய வீரர்களுக்குள் வீரன் ஆன அருச்சுனா, புண்ணியச் செயல்களை உடைய நல்ல மானிடரின் நல்லறிவும், நன்மை இல்லாத பாவிகளுடைய சிற்றறிவும், பரம்பொருள் ஆன நானே அல்லாமல் வேறு இல்லை என்பது நீ அறிய வேண்டியதே.

அசைவுஇல் நான்மறை அறிவன் நான்அதன்
வசைஇ லாதமெய்ப் பொருளும் வாய்மைசேர்
இசையி னால்எடுத்து ஓது வேனும்நான்
விசைய கேள்இனும் வேறும் ஒன்றையே. (19)

அருச்சுனா, குறைவு இலாத நான்கு வேதங்களின் பொருள்களையும் அறிந்திருப்பவனும் நானே. குற்றம் அற்ற அவ்வேதங்களின் உண்மைப் பொருளும், மெய்யான இசையினால் எடுத்துப் போதிப்பவன் ஆன குருவும் நானே. இன்னும் வேறு ஒரு பொருளையும் நீ கேள்.

மருவு கின்றஇவ் உலகில் மாய்தலே
உருவம் ஆகமுன்பு உடையது ஒன்றுமே
அருவம் ஒன்றினால் அழிவது இன்மையே
பொருவ நின்றதுஓர் பொருளும் உண்டரோ. (20)

பொருந்தும் இவ்வுலகிலே அழிதலைத் தானே வடிவமாக முன்னர் உடைய ஒரு பொருளும், உருவம் அற்றதாய் ஒரு காரணத்தாலும் அழிவு இல்லாமையைத் தானே பொருந்தும்படி நிற்கும் ஒரு பொருளும் உண்டு.

மொழிசெய் கின்றஇவ் இரண்டும் முற்றவே
விழிஇயி னால்உற நோக்கில் மெய்ம்மையே
அழிவது ஆக்கையாம் அழிவு பாடுஇலாது
ஒழிவது என்எனின் உயிர்என் கின்றதே. (21)

அழிவது, அழிவின்மை என்று கூறுகின்ற இவ்விரண்டு பொருள்களையும் முழுவதும் அறிவினால் உள்ள படியே உற்று நோக்கினால் அழிவது என்று சொல்லப் படுவது உடல். அழிவின்றி நீங்குவது என்ன என்றால் சீவன் என்று சொல்லப் படுகின்றது.

இவைஇ ரண்டையும் கடந்து யாதும்ஓர்
நவையும் இன்றியே நாசம் இன்றியே
எவையும் இன்றியே இழிவும் இன்றியே
குவையில் நின்றதுஓர் குறிஇல் இன்பமே. (22)

முன்னர்ச் சொன்ன அழிவு, அழிவின்மை ஆகிய இரண்டிற்கும் வேறாகி, எந்த ஒரு குற்றமும் இல்லாமல், தோன்றி ஒடுங்குதல் முதலிய விகாரங்கள் இல்லாமல், எவையும் தன்கண் இன்றி, யாது ஒரு குறைபாடும் இல்லாமல் வியாபித்து நின்றது யாதொரு குறிப்பும் இல்லாத ஆனந்த வடிவமான பரம்பொருள் என்பது.

இந்த இன்பம்ஆம் என்னை உள்ளவா
சிந்தை யின்கணே தெளிதல் மேயினார்
பந்தம் ஒன்றுஇலார் பழைய இப்பொருட்கு
அந்தம் ஆதிவேறு அறிய ஒண்ணுமோ. (23)

முன் சொன்ன அனைத்துத் தன்மைகளையும் கடந்த ஆனந்த வடிவம் ஆகிய என்னை உள்ளபடி தமது சிந்தையால் அறியப் பெற்றோர் ஒன்றினாலும் பந்தம் அடையார். எல்லாவற்றிற்கும் முன்னதாய் உள்ள பரமான்மாவாகிய பொருளிற்கு இறுதியும் முதலும் வேறு உண்டு என்று அறிய இயலுமோ? (இயலாது).

வேதம் நாலும்நின்று உரைசெய் தாலும்ஒன்று
ஓதல் ஆவதுஅன்று உலகு அறிந்ததோ
காத லால்எனக்கு இனிய தோழன்நீ
ஆத லால்உனக்கு அறிய ஓதினேன். (24)

அருச்சுனா, இருக்கு (ரிக்) முதலான நான்கு வேதங்களும் ஒரே முகமாக நின்று சொல்லத் தொடங்கினாலும் சிறிதும் சொல்வது என்பது இயலாதது. உலகு தான் அறிந்துள்ளதோ? அன்று. நீ எனக்கு இனிய தோழன் ஆதலால் கருணை கொண்டு நீ அறியுமாறு கூறினேன்.

கண்ணைஓர் இடத்தும் இன்றி அதனிலே வைக்கில் காதல்
பண்ணையோடு ஆக்கு கின்ற வினைஎலாம் பயக்கும் என்றான்
வெண்ணையோ விதுரன் இட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த
மண்ணையோ உண்டு முந்நாள் வருபசி தீர்த்த மாயோன். (25)

ஆய்ச்சியர் கொடுத்த வெண்ணையை, கடல் சூழ்ந்த மண்ணை, விதுரன் கொடுத்த விருந்தை, உண்டு பசி தீர்ந்த கண்ணன், புத்தியை எப்பொருள்களின் மேலும் செலுத்தாமல் ஆனந்த வடிவான பரமான்மாவின் கண்ணே நிலையாக இருக்கச் செய்தால், சிரத்தையோடு செய்ய வேண்டிய கர்மங்கள் எல்லாம் செய்து முடிந்தனவே ஆகும் என்று அருளிச் செய்தார்.

பதினைந்தாவது பிரபஞ்ச அத்தியாயம் நிறைவுற்றது.



போரின் பொருட்டுவில் பொருந்திய தோளை உடைய வீரர்களுக்குள் வீரன் ஆன அருச்சுனா, புண்ணியச் செயல்களை உடைய நல்ல மானிடரின் நல்லறிவும், நன்மை இல்லாத பாவிகளுடைய சிற்றறிவும், பரம்பொருள் ஆன நானே அல்லாமல் வேறு இல்லை என்பது நீ அறிய வேண்டியதே.

அசைவுஇல் நான்மறை அறிவன் நான்அதன்
வசைஇ லாதமெய்ப் பொருளும் வாய்மைசேர்
இசையி னால்எடுத்து ஓது வேனும்நான்
விசைய கேள்இனும் வேறும் ஒன்றையே. (19)

அருச்சுனா, குறைவு இலாத நான்கு வேதங்களின் பொருள்களையும் அறிந்திருப்பவனும் நானே. குற்றம் அற்ற அவ்வேதங்களின் உண்மைப் பொருளும், மெய்யான இசையினால் எடுத்துப் போதிப்பவன் ஆன குருவும் நானே. இன்னும் வேறு ஒரு பொருளையும் நீ கேள்.

மருவு கின்றஇவ் உலகில் மாய்தலே
உருவம் ஆகமுன்பு உடையது ஒன்றுமே
அருவம் ஒன்றினால் அழிவது இன்மையே
பொருவ நின்றதுஓர் பொருளும் உண்டரோ. (20)

பொருந்தும் இவ்வுலகிலே அழிதலைத் தானே வடிவமாக முன்னர் உடைய ஒரு பொருளும், உருவம் அற்றதாய் ஒரு காரணத்தாலும் அழிவு இல்லாமையைத் தானே பொருந்தும்படி நிற்கும் ஒரு பொருளும் உண்டு.

மொழிசெய் கின்றஇவ் இரண்டும் முற்றவே
விழியி னால்உற நோக்கில் மெய்ம்மையே
அழிவது ஆக்கையாம் அழிவு பாடுஇலாது
ஒழிவது என்எனின் உயிர்என் கின்றதே. (21)

அழிவது, அழிவின்மை என்று கூறுகின்ற இவ்விரண்டு பொருள்களையும் முழுவதும் அறிவினால் உள்ள படியே உற்று நோக்கினால் அழிவது என்று சொல்லப் படுவது உடல். அழிவின்றி நீங்குவது என்ன என்றால் சீவன் என்று சொல்லப் படுகின்றது.

இவைஇ ரண்டையும் கடந்து யாதும்ஓர்
நவையும் இன்றியே நாசம் இன்றியே
எவையும் இன்றியே இழிவும் இன்றியே
குவையில் நின்றதுஓர் குறிஇல் இன்பமே. (22)

முன்னர்ச் சொன்ன அழிவு, அழிவின்மை ஆகிய இரண்டிற்கும் வேறாகி, எந்த ஒரு குற்றமும் இல்லாமல், தோன்றி ஒடுங்குதல் முதலிய விகாரங்கள் இல்லாமல், எவையும் தன்கண் இன்றி, யாது ஒரு குறைபாடும் இல்லாமல் வியாபித்து நின்றது யாதொரு குறிப்பும் இல்லாத ஆனந்த வடிவமான பரம்பொருள் என்பது.

இந்த இன்பம்ஆம் என்னை உள்ளவா
சிந்தை யின்கணே தெளிதல் மேயினார்
பந்தம் ஒன்றுஇலார் பழைய இப்பொருட்கு
அந்தம் ஆதிவேறு அறிய ஒண்ணுமோ. (23)

முன் சொன்ன அனைத்துத் தன்மைகளையும் கடந்த ஆனந்த வடிவம் ஆகிய என்னை உள்ளபடி தமது சிந்தையால் அறியப் பெற்றோர் ஒன்றினாலும் பந்தம் அடையார். எல்லாவற்றிற்கும் முன்னதாய் உள்ள பரமான்மாவாகிய பொருளிற்கு இறுதியும் முதலும் வேறு உண்டு என்று அறிய இயலுமோ? (இயலாது).

வேதம் நாலும்நின்று உரைசெய் தாலும்ஒன்று
ஓதல் ஆவதுஅன்று உலகு அறிந்ததோ
காத லால்எனக்கு இனிய தோழன்நீ
ஆத லால்உனக்கு அறிய ஓதினேன். (24)

அருச்சுனா, இருக்கு (ரிக்) முதலான நான்கு வேதங்களும் ஒரே முகமாக நின்று சொல்லத் தொடங்கினாலும் சிறிதும் சொல்வது என்பது இயலாதது. உலகு தான் அறிந்துள்ளதோ? அன்று. நீ எனக்கு இனிய தோழன் ஆதலால். கருணை கொண்டு நீ அறியுமாறு கூறினேன்.

கண்ணைஓர் இடத்தும் இன்றி அதனிலே வைக்கில் காதல்
பண்ணையோடு ஆக்கு கின்ற வினைஎலாம் பயக்கும் என்றான்
வெண்ணையோ விதுரன் இட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த
மண்ணையோ உண்டு முந்நாள் வருபசி தீர்த்த மாயோன். (25)

ஆய்ச்சியர் கொடுத்த வெண்ணையை, கடல் சூழ்ந்த மண்ணை, விதுரன் கொடுத்த விருந்தை, உண்டு பசி தீர்ந்த கண்ணன், புத்தியை எப்பொருள்களின் மேலும் செலுத்தாமல் ஆனந்த வடிவான பரமான்மாவின் கண்ணே நிலையாக இருக்கச் செய்தால், சிரத்தையோடு செய்ய வேண்டிய கர்மங்கள் எல்லாம் செய்து முடிந்தனவே ஆகும் என்று அருளிச் செய்தார்.

பதினைந்தாவது பிரபஞ்ச அத்தியாயம் நிறைவுற்றது.



# பதினாறாவது தேவாசுர சம்பத்து விபாக யோக அத்தியாயம்

மறந்து இருந்த மனத்துஇருள் நீங்கிடத்
திறம்தி றப்படச் செப்புதல் மேயினான்
அறம்தி றம்தெரிந்து ஆக்குதற்கு ஆகவே
பிறந்து இறந்துஉழல் கின்றபே ராளனே. (1)

அறங்களை அறிந்து கடைப்பிடிக்கும் பொருட்டுப் பிறந்து இறத்தல் ஆகிய நடிப்புத் தொழிலைச் செய்கின்ற கண்ணபிரான், விசயனுக்கு ஆன்மாவாகிய தன்னை அறியாமல் இருந்த மனத்து இருள் நீங்கிட, ஞான சாதன குணங்கள் அவனுக்கு உறுதியாகிட, கூறத் தொடங்கினான்.

தெய்வ ஆசுரர் என்றுஇத் திறத்தராய்
வைய மாந்தர்எல் லார்களும் வாழ்வர்இங்கு
ஐய கேள்அவர் தம்திறம் என்றுதன்
செய்ய வாய்திறந்து இவ்வணம் செப்புவான். (2)

அருச்சுனா, தேவர், அசுரர் என்று இவ்விரு தன்மையராய் இவ்வுலகில் வாழ்கின்ற மானிடர்கள் அனைவரும் வாழ்வர். அவர்களின் தன்மை பற்றி இவ்வத்தியாயத்தில் நான் கூறுவதைக் கேள் என்று தன் செவ்வாய் திறந்து இந்த வண்ணம் அருளிச் செய்யத் தொடங்கினார்.

அஞ்சுதல் இன்மையும் அறிவை ஆக்கலும்
நெஞ்சினை அடக்கலும் நிலைகெ டாமையும்
வெஞ்சினம் இன்மையும் மெய்மை கூறலும்
தஞ்சென வேள்வியும் தவமும் ஆக்கலும். (3)

பயம் இல்லாமையும், அறிவை ஆன்மாவில் நிலைத்திருக்கச் செய்தலும், சித்தத்தைப் புறநெறிச் செல்லாத வாறு அடக்குதலும், தன் நிலையில் இருந்து கெடாமையும், கொடிய கோபம் இல்லாமையும், சத்தியம் பேசுதலும், மறுமைக்குத் துணையான வேள்வி, தவம் முதலியவற்றைச் செய்தலும்.

மறைபயி றலும்தனை மதித்துஇ ராமையும்
குறளைகள் தவிர்தலும் கொல்கை மாற்றலும்
பிறர்பிழை பொறுத்த லும்பேர் ஒழுக்கமும்
அறன்வலித் தானமோடு அருளை ஆக்கலும். (4)

வேதத்தைப் பாராயணம் செய்தலும், தன்னைப் பெரியவனாகக் கருதிக் கொள்ளாமையும், பிறரைப் பற்றிக் கோள் சொல்லாமையும், பிற உயிர்களைக் கொல்லாமையும், பிறர் செய்த பிழைகளைப் பொறுத்தலும், பெருமைக்கு உரிய

ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தலும், அறம் என்னும் வலிமை பொருந்திய தானத்துடன் துயரம் அடையும் உயிர்கள்பால் கருணை காட்டலும்.

இருவகைத் தூய்மையும் இந்தி யங்களை
ஒருவழிப் படுத்தலும் உள்ளிட்டு அன்னவை
செருவரும் சிலையினாய் தெய்வத் தன்மையோர்
மருவிய தொழில்என மதிக்க வேண்டுமே. (5)

போருக்காக அரிய காண்டீபம் என்னும் வில்லை ஏந்திய அருச்சுனா, அகத்தூய்மை, புறத்தூய்மை ஆகிய இருவகைத் தூய்மைகளும், இந்திரியங்களை ஒருவழிப் படுத்தலும் உள்ளடக்கிய அவை முழுவதும் தெய்வத் தன்மையுடன் பிறந்தோர் தமக்குப் பொருந்திய தொழில்களாம் என்று மதிக்க வேண்டும்.

தீமைசெய் அசுரர் ஆனோர் செய்கையைத் தெரிக்கில் ஒன்றை
ஆம்வகை எனமற்று ஆகா தனஎன அறிதல் இல்லார்
தூய்மையும் தூய ஆய ஒழுக்கமும் தொடக்கு விட்டார்
வாய்மைஒன் றானும் இல்லார் மயக்கமே மருவா நின்றார். (6)

தீமையான செய்கைகளைச் செய்யும் அசுரத் தன்மையுடன் பிறந்த மானிடர்களின் தொழில்களைப் பற்றிச் சொன்னால் அறத்தைச் செய்வது அறம் அல்லாதனவற்றைச் செய்யாது தவிர்ப்பது என்றும் அறியாதவர், தூய்மையும், தூய்மை ஆன ஒழுக்கங்களைச் செய்யத் தொடங்குதலை விட்டவர் என்றும் உண்மையை ஒரு முறையேனும் பேசாதவர், அறியாமையைப் பொருந்தி நின்றவர் என்றும் சொல்லலாம்.

எண்ணிய உலகமும் உலகிற்கு ஈசனும்
புண்ணிய பாவமும் பொய்என் றேகொள்வர்
பெண்ணினோடு ஆண்புணர் கின்ற பெற்றியால்
நண்ணிய யாவையும் என்று நாட்டுவார். (7)

பிரமாணங்களால் உள்ளது எனக் கருதிய உலகமும், அவ் உலகைப் படைத்த ஈசனும், புண்ணிய பாவமும் பொய் என்றே கொள்வர். ஆணும் பெண்ணும் ஒன்றுபட்டுச் சேர்கையால் உலகம் முழுதும் தோன்றின என்று நிலை நாட்டுவர்.

விரும்பலர் ஆகி ஒழுக்கங்கள் துறந்தார்
மெய்ம்மையும் செம்மையும் விட்டார்
இரும்பயன் ஆன அறிவுமாய்ந்து உள்ளார்
இடம்படா மனத்தினோடு இசைந்தார்
பெரும்பழி ஆன தொழில்களே புரிவார்
பிழைப்புவாய்ப்பு ஒன்றுஅறி யாதார்
அரும்பகை ஆய்இவ் உலகினை எல்லாம் (8)
அழிப்பதன் பொருட்டுஅவ தரித்தார்.

அசுரத் தன்மை உடையோர் விரும்பாதவர்களாய் ஒழுக்க நெறிகளை நீக்கி விட்டனர் சத்தியத்தையும் செம்மையையும் நீக்கி விட்டனர். பெரும்பயன் தருகின்ற அறிவினை இழந்து விட்டனர். அற்பப் புத்தியோடு உள்ளனர். பெரும்பழி தரக் கூடிய செயல்களையே செய்வர். இலாப நட்டங்கள் ஒன்றையும் அறியாதவர். அரிய பகைவர்களாய் அனைத்து உயிர்களையும் அழிக்கவே தோன்றினர்.

நிறைவுஇலாக் காம போகம் தன்னையே நிறைக்க வேண்டி
மறைவுஇலா மானத் தோடு மதங்களை மருவி நின்றும்
குறைவுஇலா மயக்கத் தோடு கோபத்தை அடைந்து நின்றும்
பொறைஇலா விரதம் பூண்டு பொய்த்தவம் புரியா நிற்பர். (9)

முழுமை தராத இன்பங்களில் இச்சை வைத்து அதனை முழுமை ஆக அனுபவிக்க வேண்டி மறைவு இல்லாத மானம், மதம் முதலியவைகளைப் பொருந்தி நின்றும், குறைவு இல்லாத அறியாமையோடு வெறுப்பு அடைந்தும், செய்யத் தகாத விரதங்களைக் கடைப்பிடித்தும் பொய்யான தவங்களையே செய்வர்.

இறந்துபோம் அளவும் எய்தாப் பொருளையே எண்ணா நிற்பார்
மறந்தும்ஓர் பொருள்வேறு இல்லை வருபயன் அன்றி என்பார்
சிறந்தபோ கங்கட்கு ஆகத் தீமையால் பொருளைச் சேர்ப்பார்
பிறந்துபேர் ஆசை ஆய பாசத்தால் பிணிக்கப் பட்டார். (10)

அசுரத் தன்மை உடையோர் இறந்து போகும் காலம் வரை அடையாத பொருள்களையே எண்ணி நிற்பர். அனுபவிக்குமாறு தோன்றிய இன்பங்களை அல்லாமல் மறந்தும் கூடத் தர்மம் என்றாவது மோட்சம் என்றாவது வேறு ஒரு பொருள் இல்லை என்பார். பூமியில் பிறந்து பேராசையாகிய கயிற்றினால் கட்டுண்ட அசுரர் ஆயினோர் மிகுந்த சிற்றின்பங்களை அனுபவிப்பதற்கு என்றே அநியாய வழியில் பொருள்களைச் சேர்ப்பர்.

இப்பொருள் அடைந்தோம் வேறு பொருள்இனி அடைவோம் என்றும்
இப்பகை செகுத்தோம் வேறு பகைஇனிச் செகுப்போம் என்றும்
துய்ப்பவர் எம்மில் துய்க்க வல்லவர் இல்லை என்றும்
ஒப்பவர் எம்மின் மிக்கார் உளர்கொல்என்று உணரா நிற்பர். (11)

இப்பொருளை இவ்வழியினால் இப்பொழுது அடைந்தோம் என்றும், இதனை விடச் சிறந்த வேறு பொருளை நாம் விரைவில் அடைவோம் என்றும், இந்தப் பகைவனைக் கொன்றோம், இனி வேறு பகைவனைக் கொல்வோம் என்றும், பொருள்களை அனுபவிப்பவருள் எம்மைப் போல் அனுபவிக்க வல்லவர் இல்லை என்றும், எமக்குச் சமம் ஆனவரும், என்னைவிட மேலானவரும் இவ்வுலகில் இருக்கின்றார்களோ என்றும் எண்ணிக் கொண்டிருப்பர்.

இனம்வலி இன்பம் பெற்றோம் எம்மின் மிக்கார்கள் இல்லைத்
தனம்மிக உடையேம் என்று தம்மையே வியவா நிற்பார்
மனமகிழ் யாகம் செய்வோம் மழையெனக் கொடுப்போம் என்று
தினம்அவை தோறும் சிந்திப் பதுஅலால் செய்வது இல்லார். (12)

மக்கட் பெருக்கமும் வலிமையும் இன்பமும் அடைந்து இருக்கின்றோம், செல்வம் மிக உடையவராய் இருக்கின்றோம், எம்மைக் காட்டிலும் மேலானவர் ஒருவரும் இலர் என்று தம்மையே வியந்து நிற்பர். மனம் மகிழும் படியாக யாகம் செய்வோம், மேகம் போலத் தானம் வழங்குவோம் என்று நாள் தோறும் எண்ணுவது அன்றி வேறு எதனையும் செய்யார்.

தொடக்குஅறல் இல்லா நினைவுஎனப் பட்ட
சூழலைப் பற்றியே சுழல்வார்
அடக்கஅரிது ஆய மயக்கம்என் கின்ற
வலைஉளே அகப்பட்டு நின்றார்

உடற்குடில் வாழ்வாம் புல்நுனிப் பனிநீர்
உலர்ந்திடின் உயிர்நடுக்கு எய்திக்
கடப்பரிது ஆய நரகம்என் கின்ற
கடல்களில் வீழவே கடவார். (13)

பந்தம் நீங்குவதற்குக் காரணமாக இல்லாத அநேக விதமான நினைவுகள் என்று முன்னர்ச் சொல்லப் பட்ட சூழலைப் பற்றியே சுழன்று நிற்பவரும், அடக்குதற்கு அரிய மோகம் என்கின்ற மாய வலைக்கு உள்ளே அகப்பட்டு நிற்பவரும், உடலாகிய சிறிய வீட்டின் வாழ்நாள் ஆகிய புல்லின் நுனியில் உள்ள பனி நீரானது எமன் ஆகிய வெய்யிலால் வற்றிடின் உயிர் நடுக்குற்று இறந்து, கடப்பதற்கு அரியதான தீய நரகங்கள் என்னும் கடல்களிலே வீழக் கடவர்.

வியந்துதங் களையே மேலாப் பார்த்துமெய்ம் மாந்தர் தம்மை
நயந்துகொண் டாடல் இல்லார் நல்லவை செய்தார் என்று
பயன்தொடர்ந்து உரைத்தற்கு ஆகப் பாடிய பழைய நூல்கள்
இயம்பிய படிசெய் யாதே யாகங்கள் இயற்றா நிற்பார். (14)

அருச்சுனா, அவ்வசுர இயல்புடையோர் தங்களைத் தாமே, அனைத்துக் குணங்களோடும் கூடிய மேலானவர்கள் என்று மதித்து, உண்மையான ஞானிகளை விரும்பி மதித்துப் பாராட்ட மாட்டார். பயன் கருதி நல்ல யாகங்கள் முதலியவற்றைச் செய்தவர் என்று பிறர் போற்றும்படி பழைய வேதங்கள் சொல்லிய முறைப்படி செய்யாமல் வேறு வகையில் யாகங்களைச் செய்வர்.

மன்னிய களிப்பொடு வலியும் காமமும்
துன்னியான் எனும்பெரு மயக்கம் சேர்ந்துளார்
என்இயல் பினைத்தமில் யாவர் மாட்டிலும்
அன்னியம் எனக்கொடு பொறாமை ஆக்குவார். (15)

நிலைபேறு உடைய மகிழ்ச்சியும், வலிமையும், காமமும் நிறைந்து, நான் என்னும் அகங்காரம் ஆகிய மயக்கம் கொண்ட அசுர இயல்புடையோர் தம்முடைய உடல்களிலும், புதல்வர்கள் ஆகியோர் உடல்களிலும் இருக்கின்ற பரம்பொருள் ஆன என்னுடைய இயல்பினை வேறாகக் கருதிக் கொண்டு பொறாமையை உண்டாக்குவர்.

மற்றவர் தம்மை இந்த மானுடர் ஆனோர் யார்க்கும்
கொற்றவ கீழ்ஆ னோரைக் கொடுமையால் அரவுஒப் பாரை
அற்றம்இல் இடும்பை சேரும் ஆசுர யோனி ஆய
புற்றுஅவை தோறும் யானே புகப்புக விழுத்து கின்றேன். (16)

அரசன் ஆன அருச்சுனா, இம்மனிதர் ஆனோர் யாவர்க்கும் கீழ் ஆனோரை, கொடூரத் தன்மையால் பாம்பு போன்றவரும் ஆகிய அசுரரைச் சோர்வு இல்லாத துன்பங்கள் பொருந்தி நிற்கும். அசுரப் பிறவிகள் ஆகிய புற்றுகள் தோறும் அடிக்கடி புகுத்தி நானே செலுத்துகின்றேன்.

இவ்வகை ஆசுர யோனி அடைந்தோர்
மெய்வகை ஆம்அறிவு இன்மையி னாலே
நைவர்கள் தீநர கக்கதி தோறும்
உய்வகை இன்றி உழன்று திரிந்தே. (17)

இந்தப்படி அசுர யோனியை அடைந்த மனிதர் உண்மையான விவேக ஞானத்தை அடையும்படிக்கு இல்லாமையால் பிழைப்பதற்குக் காரணமான வேத நெறியை அடையாமல், முன் அடைந்ததனினும் தீய நரகத்தில் சுழன்று திரிந்து வருந்துவர்.

ஒருவன் நசிக்க இயற்றுவது என்றும்
அருநர கத்தில் அடைப்பது தானும்
வரும்வழி மூன்றுஉள மற்றுஅவை தம்மை
ஒருமுறை கூறி உணர்த்திடு வன்கேள். (18)

ஒரு மனிதனை எப்பொழுதும் தீய யோனிகளை அடையும்படி செய்வதும், எப்பொழுதும் கடத்தற்கு அரிய நரகத்திலே அடைவிப்பதும் ஆக வருகின்ற வழிகள் மூன்று உள்ளன. அவை மூன்றையும் முறைப்படி உனக்கு ஒருமுறை கூறி உணர்த்துவேன் கேள்.

காதலின் ஆகிய காமம் உலோபம்
கோதுஉற வேசுடு தீநிகர் கோபம்
ஆதலி னால்இவை மூன்றும் அகன்றார்
வேதனை தீர்பெரு வீடு விளைந்தார். (19)

விஷய ஆசையால் உண்டான காமமும், உலோபமும், குற்றத்தோடு சுடுகின்ற தீக்குச் சமம் ஆன குரோதமுமே ஒருவனுக்கு நரகத்திற்கும் நாசத்திற்கும் காரணமாம். ஆதலினால் இம்மூன்றினையும் நீக்கியோர் அனைத்துத் துன்பங்களும் இல்லாத வீடு பேற்றை விரும்புபவர் ஆவார்.

கூறின நூல்வழி சேர்குறி பேணாது
ஏறின ஆறுசெய் வார்இக லோகம்
வேறுஇயல் ஆர்பர லோகம் விளைக்கும்
பேறுஇன ஆனவை பேறு பெறாரால். (20)

இவர் இவர்க்கு இது செயல் என அறிவித்த நூல் வழிகளில் சேரும் எண்ணத்தைச் சேர விரும்பாது நீக்கி, மனத்துக்கு ஏற்ற வழியில் செல்பவர் இவ்வுலகமும், இதற்கு வேறான இயல்பு பொருந்திய மேல் உலகமும் உண்டாக்கக் கூடிய நலன்கள் ஆகிய பயன்களையும், இதனால் கிடைக்கும் வீடுபேற்றையும் அடைய மாட்டார்.

ஆதலின் அனைத்தும்அறி கைக்குவழி ஆன
வேதம்முதல் நூல்அவை விதித்தநெறி யாலே
ஏதம்நினை யாதுஉன்வினை யேஇசைக என்றான்
பூதம்முதல் ஆனவை பொறுத்துஅருளு கின்றான். (21)

பூதம் முதலான உலகம் அனைத்தையும் தம்மிடத்தே தரித்து இருக்கும் கண்ண பெருமான் அருச்சுனனை நோக்கி, முற்கூறிய காரணத்தால் செய்யத் தகுந்ததையும் தகாததையும் அறிவதற்கு வழியான வேத இதிகாச வடிவான சாத்திரங்கள் சொல்லிய வழியிலே குற்றம் கருதாமல் உனக்கு உரிய போர்ச் செயல்களில் நீ ஈடுபடுவாயாக என்று அருளினார்.

பதினாறாவது தேவாசுர சம்பத்து விபாக யோக அத்தியாயம் நிறைவுற்றது.

# பதினேழாவது குணவிகார அத்தியாயம்

உண்டு மீள ஒளித்துஉலகு யாவையும்
கண்டு காப்பவன் கட்டுரைத் திட்டதே
கொண்டு பார்த்தன்அக் கொண்டல்வண் ணன்தனைத்
தொண்டு கூறிப் பணிந்துஇது சொல்லுவான். (1)

உலகு அனைத்தையும் திருவமுது செய்து மறுபடியும் படைத்துக் காக்கும் கண்ணன் முன் உறுதி படக் கூறி அருளியதையே சந்தேகமாகக் கொண்டு அருச்சுனன் அந்த மேக வண்ணனான கண்ணபிரானிடம் உமது அடிமை என்று சொல்லி வணங்கி இதனை விண்ணப்பம் செய்வான் ஆயினன்.

வேத மேமுதல் நூல்விதி இன்றியே
காத லால்உல கோர்செயும் காரியம்
ஏதம் ஆம்குணம் மூன்றினும் ஏதுஎன
ஓத மாக்கடல் வண்ணனும் ஓதுவான். (2)

வேதம் முதலான சாத்திர விதிகளைக் கைவிட்டு அன்புடன் உலகில் உள்ள மனிதர்கள் செய்யும் யாகம் முதலிய செயல்கள் குற்றம் உடையனவான சத்துவம் முதலான மூன்று குணங்களிலும் எது என்று அருச்சுனன் கேட்கப் பெருங்கடல் வண்ணம் உடைய கண்ணபிரான் அதற்குப் பதில் கூறத் தொடங்கினார்.

யாவர்கள் ஆசைப் பாடும் இயம்பிடில் இயம்பப் பட்ட
மூவகைக் குணமும் ஆகி அல்லது முடிந்து நில்லா
மேவரும் அவற்றின் ஆய வேறுபாடு அவற்றை எல்லாம்
காவல தெரியக் கூறக் கேள்எனக் கழறல் உற்றான். (3)

அரசனான அருச்சுனா, அனைத்து மானிடரின் சிரத்தைகளின் வேறுபாடு முழுவதையும் சொன்னால் சாத்துவிகம், இராசசம், தாமசம் என்று சொல்லப் பட்ட மூ வகைக் குணங்களும் ஆகி நிற்குமே தவிர வேறு ஒன்றாக முதிர்ந்து நில்லாது. பொருந்துதற்கு அரிய அக்குண வேறுபாடுகளால் உண்டாகிய சிரத்தை வேறுபாடுகள் முழுவதையும் உனக்குத் தெரியுமாறு கூறுகிறேன் கேள் என்று அருளிச் செய்யத் தொடங்கினான்.

சாத்துவிகர் தேவரையே சரண்புகுவர் தாமதர்கள்
காத்தல்புரி வனபேயும் பூதமுமாக் கடைப்பிடிப்பர்
ஏத்தரிய குணம்இவற்றில் இராசதமாம் குணம்உடையோர்
ஆத்தர்என இயக்கரையும் அரக்கரையும் அடைகுவரால். (4)

சாத்துவிக குணம் உடையோர் அக்குணம் உடைய தேவர்களையே சரண் அடைவர். தாமச குணம் உடையோர் தம்மைக் காப்பவர்கள் பேயும் பூதமும் என உறுதியாகக் கடைப்பிடிப்பர். போற்றுதற்கு உரிய சத்துவம் முதலான குணங்களில் ரஜோ குணம் உடையவர் தம்மைக் காக்கத் தக்க கடவுள் என்று இயக்கரையும், அரக்கரையும் அடைவர்.

அடங்கிடல் அகங்காரம் ஆதி இன்றியே
இடம்படு நூல்களின் இயல்பது இன்றியே
உடம்பையும் உயிரையும் மாய்க்கும் மாதவம்
தொடங்கினர் அசுரயோ னியினில் தோன்றினார். (5)

*அகங்காரம், வஞ்சனை, காமம், வெறுப்பு, பலம் என்னும் இவை அடங்காதவர்களாய், விசாலமாகப் பொருந்திய சாத்திர விதிகளை அனுசரிக்காமல், உடம்பையும், உள்ளிருந்து அனுபவிக்கும் சீவனையும் வீணான விரதம் முதலிய வற்றினால் மெலிவிக்கும் கோரமான தவத்தினைச் செய்ய முயல்பவர் அசுரரே ஆவர்.*

உண்பன யாகம் ஆரும் உறுதவம் தானம் என்ன
ஒண்பட உரைத்த நான்கும் ஓர்ஒன்று மூன்றுஆய் நின்ற
பண்படு குணங்க ளாலே கேள்எனப் பற்று வீடு
நண்பொடு பகையும் இல்லான் முறையினால் நவிற்றல் உற்றான். (6)

*பற்றும், வீடுபேறும், உறவும், பகையும் இல்லாத கண்ணன் அனைத்து உயிர்களும் விரும்புகின்ற உணவும், யாகமும், அனைவராலும் செய்யப் படுகின்ற தவமும், தானமும் என்று விளங்கக் கூறிய இந்நான்கும் அமைந்த குணங்களாலே ஒவ்வொன்றும் மூவகையாய் நின்றன. அவற்றைப் பற்றிக் கேள் என்று முன் சொன்ன முறைப்படியே சொல்லத் தொடங்கினான்.*

சத்துவ குணத்தோர் உண்டி உரைத்திடில் அழகு சார்ந்து
தித்தித்த சுவைய ஆகி நெய்த்துச்சிக் கெனவு சேர்ந்து
வத்தித்து வலிநோய் இன்மை அறிவுநல் ஆயு இன்பம்
வத்திக்கச் செய்யும் இந்த உணவுகள் மடங்கல் அன்னாய். (7)

*போரில் சிங்கத்தை ஒத்த அருச்சுனா! சத்துவ குணத்தோருடைய உணவைப் பற்றிச் சொன்னால், மனத்தின் ஆவலைத் தூண்டும் படியான அழகு பொருந்தி, இனிய சுவைகளை உடையனவாய், நெய்ப்பசை உடையனவாய் உடலோடு சேர்க்கும் தன்மை கூடி, உடலை வலிமை உடையதாய் ஆக்கி, நோய்களை நீக்கி, அறிவையும், நீண்ட வாணாளையும், இன்பத்தையும் பெருகும்படி செய்யும் இயல்புடையன.*

இப்படி அன்றி வேறுஆம் இராசதர் உணவு கேட்கில்
கைப்பன புளிப்பு உவர்ப்புக் கூர்ப்பன கடிய எய்து
நெய்ப்பயில் நெருப்புப் போலச் சுடுவனஇ வற்றி னாலே
மெய்ப்படு நோயும் நெஞ்சத்து இடும்பையும் விளைவ வேலோய். (8)

*வேற்படையை உடைய அருச்சுனா, இப்படிப்பட்ட உணவு அல்லாமல் இவற்றிற்கு வேறு ஆகிய இராசதர்க்கு விருப்பமான உணவுகளைப் பற்றி நீ கேட்டால், கைப்பனவும், புளிப்பனவும், உவர்ப்பனவும், உறைப்பனவும், கொடிய வெம்மையான நெய்யுடன் கூடிய நெருப்பைப் போல் சுடுகின்றவைகளும் ஆகிய இவ்வுணவுகளால் உடலிலே தோன்றிய வாத, பித்த, சிலேட்டுமம் முதலிய தாதுக்களின் செயலால் உண்டான நோயும், அதனாலே நெஞ்சிலே துன்பமும் விளைவனவாம்.*

ஆசினை அடைந்த நெஞ்சின் தாமதர் உணவு கேட்கின்
ஊசின பழஞ்சோறு எச்சில் உம்பர்பூ சனைக்குஆ காமை
ஏசின வெந்துஇ லாத இனையன இவற்றி னாலே
காய்சினம் முதலாய் உள்ள துயர்எலாம் விளைவ கண்டாய். (9)

அருச்சுனா, வெறுப்பு முதலான குற்றங்களை அடைந்து உள்ள தாமதர்களுக்கு விருப்பமாய் உள்ள உணவைப் பற்றிக் கேட்டால், ஊசிப் போன பழஞ் சோறு, எச்சில் படுத்தியன, தேவர்களின் வழிபாட்டிற்கு உதவாத உணவுகள், விலக்கப் பட்ட மாமிசம் முதலியன, அக்கினியில் பக்குவம் ஆகாத உணவுகள் ஆகிய இப்படிப்பட்ட உணவுகளாம். இவற்றினாலே பிறரை வெறுக்கும் கோபம் முதலாய் உள்ள துன்பங்கள் முழுதும் விளைவனவாம்.

செயத்தகு வனஎன்று அல்லால் சேர்பயன் சிந்தி யாதே
தயக்கநூல் முறைசெய் யாகம் சாத்திகம் சார்இ யாகம்
பயத்தையே வேண்டி ஆதல் பலர்புகழ் வேண்டி ஆதல்
இயற்றுறும் யாகம் எல்லாம் இராசத யாகம் ஆமே. (10)

அடையும் பயன்களை விரும்பாமல் தவிர, அவசியம் நம்மால் செய்யத் தக்கன என்று மனத்தில் உறுதி செய்து கொண்டு, சாத்திர முறைப்படி செய்கின்ற யாகங்கள் சாத்துவிகத் தன்மை கொண்ட யாகங்கள். சுவர்க்காதி பயன்களைக் கருதியாவது, பலர் நம்மைப் புகழ வேண்டும் என்று எண்ணியாவது செய்கின்ற யாகங்கள் முழுதும் இராசத யாகங்கள்.

நூல்படும் நெறியும் இன்றி நுனித்தஅவ் வினையின் மேலோர்
தாற்பரி யமுமே இன்றித் தக்கமந் திரமும் இன்றி
ஏற்பவர்க்கு ஈதல் இன்றி இயற்றுறு கின்ற யாகம்
தார்ப்பொலி கின்ற மார்பா தாமத யாகம் ஆமே. (11)

அழகு தரும் மாலையை உடைய அருச்சுனா, சாத்திரங்களில் கூறிய விதியும் இல்லாமல், அந்த யாகத் தொழிலில் நுண்ணிய தேர்ச்சி மிக்க முனிவர்களின் விளக்கமும் இல்லாமல், முறையாகச் செபிக்கக் கூடிய மந்திரங்களும் இல்லாமல், வந்து இரப்பவர்க்குக் கொடுக்கும் தானங்கள் இல்லாமல் செய்த யாகங்கள் ஆகியன தாமத யாகங்களாம்.

தீக்குலாம் வேலினாய் தவத்தின் செய்கைதான்
வாக்கினால் பேசுதல் மனத்தினால் ஆக்குதல்
ஆக்கையால் இயற்றுத லாய்இ ருப்பது
நோக்கினால் இவற்றினை நுனித்துக் கூறுவாம். (12)

தீயைப் போல ஒளி விடும் வேலுடைய அருச்சுனா, தவத்தின் தொழில் ஆனது வாக்கால் பேசுதலும், மனத்தினால் எண்ணுதலும், உடலால் செய்தலும் என்று மூவகையாய் உள்ளது. அறிவினால் இம்மூவகைக் காரணங்களால் உண்டாகும் தவங்களை நுட்பமாக ஆராய்ந்து கூறுவோம்.

தீர்த்த யார்க்கும் செவிக்குஇனிது ஆயின
வார்த்தை மாமருந் தேஎனல் ஆவதுஆம்
ஓர்த்து மெய்ம்மொழி கூறுதல் ஓதுதல்
வார்த்தை யால்பண்ணும் மாதவம் ஆவதே. (13)

பரிசுத்தமான அருச்சுனா, அனைவரது காதுகளுக்கும் பிரியமான மாண்பு பொருந்திய அமுதமே என்று சொல்லக் கூடிய சொல்லும், ஆராய்ந்து உண்மையைப் பேசுதலும், வேதத்தை ஓதுதலும் வாக்கால் செய்யும் மாதவம் என்று சொல்லப்படுகின்றது.

தெளிவுஇல் நெஞ்சைத் தெளியப் பிடித்தலும்
களிசெ யும்உளத் தைக்களி மாற்றலும்
குளிர்வுஇ லாமை உளத்தில் கொளாமையும்
எளிதின் மானத மாதவம் என்பதே. (14)

தெளிவு இல்லாத மனத்தைத் தெளியும்படி ஆன்ம சிந்தனையால் வசம் ஆக்குதலும், உலக விசயங்களில் சென்று செருக்கு அடைந்த மனத்தின் செருக்கை மாற்றுதலும், கொடூரத் தன்மையை உள்ளத்தில் கொள்ளாமையும் அரிய மானச (மனத்தால் செய்யக் கூடிய) தவம் என்று சொல்லப் படுகின்றது.

தலைமை அந்தணர் தேவர் குரவர்பால்
மலைதல் இன்றி வழிபடு வாழ்க்கையும்
கொலைது றத்தலும் காமம் குறைத்தலும்
தலைவ காயத் தவம்எனப் பட்டதே. (15)

அரசனான அருச்சுனா, ஒழுக்க சீலராக விளங்கும் அந்தணரிடமும், தேவர்களிடமும், தந்தை, தாய், ஆச்சாரியன் முதலியோர் இடத்தும் மயக்கம் இல்லாது வழிபடுகின்ற செல்வமும், பிற உயிர்களைக் கொல்லாமையும், தகாத காமத்தை நீக்கலும் ஆகிய இவை உடலினால் செய்யப்படும் தவங்கள் எனப்படுகின்றன.

தீத்தவமும் வடிவேலோய் செப்பியஇம் மூன்றாலும்
சாத்துஉலகம் மகிழ்வுஎய்தச் செய்கின்ற அருந்தவத்தில்
ஆர்த்துவரும் பயன்வேண்டாது ஆகின்ற அரும்தவம்தான்
சாத்துவிக தவம்என்று சாற்றுவது தக்கோரே. (16)

நெருப்பைப் போல் கூரிய வேலை உடைய அருச்சுனா, முன் கூறிய வாக்கு, மனம், உடல் ஆகிய இம்மூன்றாலும் செய்யக் கூடிய உலகமானது மகிழ்வு அடையுமாறு செய்கின்ற அரிய தவங்கள் அளிக்கின்ற பயன்களை விரும்பாமல் செய்கின்ற அரிய தவம்தான் சாத்துவிக தவம் என்று மேலோர்களால் சொல்லப் படுகின்றது.

வசைஇல்தவம் உடையர்என மானுடர்கொண் டாடுகைக்கு
நசையினொடு பொருள்பெறவும் செய்கின்ற நற்றவத்தை
விசயஉனக்கு உரைசெய்தேன் மிகப்பெரியோர் செய்திடினும்
இசையஅறி மற்றுஇதனை இராசதம்ஆம் தவம்என்றே. (17)

அருச்சுனா, குற்றம் இல்லாத நல்ல தவத்தினை உடைய சாது என்று மக்கள் போற்றும் பொருட்டும், ஆசையோடு செல்வம் முதலிய பொருள்களைப் பெறும் பொருட்டும், செய்கின்ற நல்ல தவத்தை மிகவும் மேன்மை உடையோர் செய்தாலும் இதனை இராசதமாம் தவம் என நீ சம்மதித்து அறிய வேண்டி இதனை உனக்கு அருளிச் செய்தேன்.

பேதைமையை மிகஉடைத்துஆய்த் தன்உயிர்க்கும் பிறஉயிர்க்கும்
ஏதம்உறு பெரும்துயரும் கேடுமே இயற்றுவதுஆய்
ஆதவனும் பனியும்உழன்று ஆற்றுகின்ற அரும்தவம்தான்
தாதுஅலரும் நெடுமுடியாய் தாமதம்ஆம் தவம்ஆமே. (18)

பூந்தாதுகள் நிறைந்த பூமாலையை அணிந்த நீண்ட முடியை உடைய அருச்சுனா, அறியாமை மிக உடையதாய்த் தனக்கும் பிறருக்கும் குற்றம் மிகுந்த பெரிய துன்பத்தையும் அழிவையுமே தருவதாய், சூரிய வெப்பத்தினாலும், பனியின் குளிர்ச்சியாலும் உடல் வருந்திச் செய்கின்ற அரிய தவமானது தாமதம் ஆகிய தவமாம்.

முன்செய்கா ரியப்பொருட்டும் இன்றியே முடித்துஇதனால்
பின்புஒருநற் பொருள்விளையும் என்பதுவும் பேணாதே
நன்குஉடைய காலத்தே நல்இடத்தே நல்லவர்க்குத்
தன்பொருளைக் கொடுக்கும்அது சாத்துவிக தானமே. (19)

முன்னர் தனக்கு ஒரு காரியம் செய்ததன் பொருட்டும் இல்லாமலே தானத்தை முடித்து, இந்தத் தானத்தினால் பின்னர் மறுமையில் வீடுபேறு, பசு, புதல்வர்கள் போன்ற ஒப்பற்ற நல்ல பொருள்கள் உண்டாகும் என்பதையும் விரும்பாமலேயே, நன்றாக உள்ள காலத்தில், நல்ல இடத்தில் நல்லவர்க்கு பொன், அன்னம், பூமி, பசு முதலிய பொருள்களைக் கொடுக்கும் அதுவே சாத்துவிக தானம்.

கொண்டுசெயத் தகும்கருமம் எனும்குறிப்புஒன்று இன்றியே
பண்டுசிலர் செய்ததற்காப் பரிவொடு பண்ணினவும்
உண்டுஇதனால் மேல்விளைவுஎன்று உணர்வோடிச் செய்வனவும்
எண்திசையும் நிறைபுகழ்ஆய் இராசதமாம் தானமே. (20)

எண் திசையும் நிறைந்த புகழை உடைய அருச்சுனா, இந்தச் செல்வம் முதலியவற்றைக் கொண்டு அவசியம் நாம் செய்யத் தக்க செயல் இது என்னும் கருத்து ஒன்றும் இல்லாமலேயே முன்பு சிலர் தமக்கு உதவி செய்தமைக்காகப் பதில் உதவியாக அன்புடன் செய்தனவும், இவ்வாறு தானம் செய்வதனால் மறுமைப் பயன்கள் உண்டாகும் என்றும், அறிவானது சுவர்க்காதிப் பயன் கருதி இங்கு செய்வனவும் இராசச தானமாம்.

வாயாதது ஒருபொருளை வழங்காத காலத்தே
ஏயாத நிலத்துஇடையே இழிந்தகுலத் தவர்களுக்கே
ஆயாத அறிவினொடும் அப்பிரியத் தொடும்கொடுத்தல்
சாயாத பெருந்திறலோய் தாமதமாம் தானமே. (21)

அழியாத வலிமை உடைய அருச்சுனா, தனக்கு நியாயமாகக் கிடைக்காத ஒரு பொருளை, பொருந்தாத காலத்தில், பொருந்தாத இடத்தில் இழிந்தவர்க்கே அறியாமையால் பிரியம் இன்றிக் கொடுக்கும் தானமே தாமச தானம்.

ஒப்புஅரிது ஆய உண்டியோடு யாகம்
உறுதவம் தானம்என்று உரைத்த
அப்படி எல்லாம் அறிவகை உனக்கும்
உரைத்தனன் அடைய மற்றுஐயா
மெய்ப்படி யாமற்று இவற்றினைச் செய்து
வீடுபேற்று உயர்நெறி ஆவது
எப்படி என்னில் அதனையும் உனக்குத்
தெரிவகை உணர்த்துவன் கேள்நீ. (22)

அருச்சுனா, குண வேறுபாட்டால் ஒன்றற்கு ஒன்று சமன் இல்லாத உணவுடன் யாகம், பொருந்திய தவம், தானம் என்று பெரியோர்களால் கூறப்பட்ட அந்த வகை எல்லாம் அறியும் படியாக உனக்கு உரைத்தேன். வேதத்தில் உள்ள படியும் பெரியோர் சொன்ன படியும் இராசச தாமத குணங்களுக்கு வேறான சாத்துவிகமான யாகம், தவம், தானங்களைச் செய்து வீடுபேற்றிற்கு உரிய வழி ஆனது எவ்விதம் என்று நீ கேட்டால் அதனையும் உனக்குத் தெரியும்படி உணர்த்துவேன். இனி நீ கேட்பாயாக.

ஓம்என் கின்ற தனிஎழுத்தும் உரைத்தற்கு அரிய தற்பதமும்
தாமம் கமழும் தார்மார்பா சத்துஎன் கின்ற தனிப்பதமும்
ஆம்என் கின்ற இவைமூன்றும் அறிவின் பெயர்மற்று இவற்றாலே
யாம்முன்பு உணரும் மறைமறையோர் யாகம் தோன்றிற்று எனஅறிவாய். (23)

மணம் கமழும் பூமாலை அணிந்த மார்பை உடைய அருச்சுனா, ஓம் என்கின்ற தனி எழுத்தும், உரைத்தற்கு அரிய தத் என்னும் சொல்லும், சத் என்று கூறுகின்ற ஒப்பற்ற

சொல்லும் ஆகிய இம்மூன்று பதங்களும் பரப்பிரம்மத்தின் பெயர்களாம். இவற்றால் மறையோரும், நாம் முன்னமே அறிந்த வேதமும், செயல் வடிவான வேள்வியும் தோன்றிற்று என அறிவாய்.

ஓம்என்று உரைத்தே வினைசெய்வார்
வீடுஉற்ற வர்வீடு உறும்அவர்கள்
தாம்முன்பு உரைத்த தற்பதத்தை
உரைத்தே செய்வர் சத்துஎன்றே
யாம்என் கின்ற யாகம்முதல்
மூன்றில் திதியும் அவற்றுஇனமும்
காமர் வினையின் மேலும்அது
கழறு கிற்பார் கதிர்வேலோய். (24)

ஒளி விடுகின்ற வேலை உடைய அருச்சுனா, "ஓம்" என்னும் ஒலியை உச்சரித்தே வீடுபேறு அடைந்த ஞானிகள் தானம் தவம் முதலான செயல்களை நிரந்தரமாகச் செய்வர். வீடுபேறு அடையும் படியான தகுதியை உடைய முமுட்சுக்கள் முற்கூறிய "தத்" என்ற பதத்தை உச்சரித்தே தவம் தானம் வேள்வி முதலான செயல்களைச் செய்வர். வேள்வி, தவம், தானம் முதலியவை நிலைத்தலும், அதற்கு அனுகூலமான செயல்களும் "சத்" எனவே கூறப்படுகின்றன. அன்றியும் திருமணம் முதலான மங்களச் செயல்களிலும் "சத்" என்னும் பெயரைப் பயன்படுத்துவர்.

காதலால் இந்தப் பதங்கள் மூன்றினையும்
கற்றுஉணர்ந் தவர்கள்தம் கருத்தால்
ஓதல்ஆம் வகையால் உரைத்தலால் தவமும்
தானமும் முதலிய ஒழியார்
ஆதலால் இந்தப் பதங்களை உரைத்தே
வினைசெயத் தகுவதுஎன்று உரைத்தான்
தீதுஇலா உலகம் தன்உளே உதிப்பத்
தேவகி திருவயிற்று உதித்தோன். (25)

குற்றம் இல்லாத உலகம் சச்சிதானந்த மயமான தன்னிடத்தில் உதிக்கத் தான் தேவகியின் திருவயிற்றில் பிறந்தவனான கண்ணன், ஞான நூல்களைக் கற்று அவற்றின் பொருளை உணர்ந்த ஞானிகள் அன்பினால் ஓம், தத், சத் என்ற இப்பதங்கள் மூன்றனையும் அவற்றின் பொருளோடு ஓதி உச்சரிக்கும் காரணத்தால் தானம், தவம், வேள்வி முதலியவற்றைப் பொருட்படுத்தாமல் விட மாட்டார். ஆதலால் பரப்பிரம்மத்தின் பெயர்களான இவற்றைச் சொல்லியே தத்தமக்கு உரிய செயல்களைச் செய்வது தக்கது என்று அருளிச் செய்தனன்.

பதினேழாவது குணவிகார அத்தியாயம் நிறைவுற்றது.

# பதினெட்டாவது சஞ்சேப அத்தியாயம்

ஏகமே கருதுவார் இதயமே விளைவதுஓர்
போகமே உலகில்ஓர் பொருவுஇலா ஒருவனே
நாகமே அமளியாய் நளினமே மலர்வதுஓர்
மேகமே பணிஎனா விசயன்மேல் வினவுவான். (1)

திருப்பாதங்களும், திருக்கரங்களும், திருஉந்தியும் ஆகியன தாமரை மலர்கள் போல் விளங்க, ஆதிசேடனாகிய படுக்கையின்மேல் வீற்றிருக்கும் கருமேகம் போன்றவனே, பிரம்மம் ஒன்றென உன்னையே தியானிக்கும் யோகிகளின் இதயத்தினுள் விளைகின்ற ஒப்பிலா ஆனந்தமே, உலகிலே தனக்கு உவமை இல்லாத ஏகனே, மேலும் எனக்கு விடை அளித்திடுக என்று விசயன் வேண்டினான்.

சந்நியாசம் ஆவதும் தகும்தியாகம் ஆவதும்
என்நியாயம் ஆகஎம் பிரான்இயம்புக என்னவே
வன்னிவாயு வானம்ஆகி மண்ணும்நீரும் ஆகியோன்
தொன்மைஆம் பொருள்தொகைத் திறம் சொலத் தொடங்கினான். (2)

சந்நியாசம் என்று சொல்லப் படுவதும், செய்தற்கு அரிய தியாகம் என்று சொல்லப் படுவதும் எத்தன்மையன? உள்ளபடி எமது கடவுளே சொல்லுக! என்று அருச்சுனன் கேட்க, வானம், காற்று, நெருப்பு, நீர், மண் ஆகிய பஞ்சபூத வடிவான பகவான் முன்பகுதிகளில் உரைத்தருளிய சந்நியாசம், தியாகம் ஆகியன பற்றித் தொகுத்துச் சொல்லத் தொடங்கினான்.

காமம்என்றி டும்பலன்செய் கன்மம்ஆன யாவையும்
தாம்அடங்க வேஇகத்தல் சந்நியாசம் ஆவதுஇங்கு
ஏமம்இன்றி எவ்வினைப் பயன்கள்ஆன யாவையும்
தீமைஎன்று அறத்துடைத்து இருத்தல்தியாகம் ஆவதே. (3)

மனிதர்களின் ஆசைகள் என்று சொல்லப்படும் சுவர்க்கம், மக்கட்பேறு முதலிய பயன்களைத் தருகின்ற செயல்கள் அனைத்தையும் முழுவதும் விட்டு விடுதலே சந்நியாசம். இங்கு யாதொரு மயக்கமும் இன்றி எல்லாக் கர்மங்களின் பயன்கள் அனைத்தையும் தீமை என்று முழுவதுமாக நீக்குதலும் தியாகமே.

தீங்குஇயற்று கின்றதீ வினைத்திறங்கள் போலவே
ஈங்குஇயற்று கின்றநல் வினைத்திறங்கள் யாவையும்
ஆங்குஇயற்றல் இன்றிவிட்டு இருத்தலே அருத்தமாச்
சாங்கியத்தை ஓதிடும் தவத்துஉளோர் உரைப்பரால். (4)

தீமைகளைச் செய்வனவான பாவ வினைகளின் தன்மைகளைப் போலவே இங்கே செய்யப்படுவனவான புண்ணியச் செயல்களின் தன்மைகள் அனைத்தையும் செய்யாது விட்டு இருத்தலே சந்நியாசம் தியாகம் எனப்படும். இவ்வாறு ஞான சாத்திரம் கற்ற தவஞானிகள் கூறுவர்.

ஞானகார ணங்கள்ஆத லால்யாகம் நல்தவம்
தானமோடு இகத்தலைத் தகாமைகூறு வார்உளர்
ஆனகா ரணத்தினால் அறிந்துஅடங்கி னார்க்குஅலால்
ஈனம்ஆகும் ஏனையோர்க்கு இவற்றைவிட்டு இருத்தலே. (5)

ஞானம் பெறுதற்கு உரிய காரணங்களாக விளங்குவதால் யாகம், தவம், தானம் ஆகிய செயல்களின் தியாகம் தகாதது என்று கூறுவாரும் உள்ளனர். அவ்வாறு கூறும் காரணத்தினால் அறிய வேண்டுவதை அறிந்து அடங்கினவர்க்கே கிடைக்கும் அல்லாமல், இவற்றை விட்டு விட்ட மற்றையோர்க்குக் கிடைக்காது. மேலும் இழிவு ஆகும்.

தியாகம் மூன்று வகைப்படும் செப்பக்கேள்
யாக மும்தவம் தானமும் என்றஇவை
மயால்அ றுக்கும் மனத்தினை ஆதலால்
அயாஉ ரைக்கில் விடுகை அடாததால். (6)

அருச்சுனா, தியாகம் மூவகைப்படும். சொல்லக் கேள். யாகம், தவம், தானம் என்று சொல்லப்படுகின்ற இவை பயனை விரும்பாத மனிதரின் அந்தக்கரண மயக்கத்தைப் போக்கும். ஆதலால் சொல்லில், கர்மங்களைப் பரித்தியாகம் செய்தல் கூடாது. அது பொருந்தாது.

என்ன செய்வது எனில்இவ் வினைகளால்
பின்னை எய்தும் பெரும்பயன் ஆவது
தன்னை விட்டுச் செயத்தகும் என்பது
முன்னை யோர்க்கும் எனக்கும் முடிவரோ. (7)

பின் எந்த விதத்தில் வேள்வி தவம் முதலியவற்றைச் செய்ய வேண்டிய தக்கோர், செய்ய வேண்டும் என்று நீ கேட்டால், இந்தச் செயல்களால் மறுமைக்கண் அடைகின்ற வீடுபேறு முதலிய பலன்களையும் விடுத்துச் செய்யத் தகும் என்பது முன்பிருந்த ஞானியருக்கும், பரம்பொருளான எனக்கும் விரும்பத் தக்க கொள்கையாகும்.

நித்தம் ஆய வினையின் நெறியினை
மத்தர் போல ஒருவன் மயக்கினால்.
பித்தன் ஆய்விடு கின்றஅப் பெற்றியைச்
சித்த தாமதத் தியாகம்என் கின்றதே. (8)

புகழுடைய அருச்சுனா, நித்தியமாகிய கர்ம வழியை உன்மத்தரைப் போல ஒருவன் அஞ்ஞானத்தினால் பித்தனாகித் தியாகம் செய்து விடுகின்ற அத்தன்மையைத் தாமசத் தியாகம் என்கின்றது.

மெய்வ ருத்தம்உண்டு என்று விடுவதுஇங்கு
ஐயம் இன்றி இராசதத் தியாகம்ஆம்
கைவ ரும்பலம் ஆசைகை மாறவே
செய்வ செய்வது சத்துவத் தியாகமே. (9)

நித்தியக் கடமைகளைச் செய்வதால் உடல் வருத்தம் உள்ளது என்று அவற்றைத் தியாகம் செய்வது இங்கே சந்தேகம் இல்லாமல் இராசசத் தியாகம் என்று சொல்லப்படுவது. மறுமைக்கண் சித்திக்கின்ற வீடுபேறு முதலிய பயனும் ஆசையும் நீங்கும்படி தியாகம் செய்து, செய்யக் கூடிய நித்தியக் கடமைகளைச் செய்வது பெரியோர்களால் விரும்பப்படும் சாத்துவிகத் தியாகம்.

யாதின் மாட்டினும் ஐயம்ஒன்று இன்றியே
தீதுஇல் ஞானியும் தியாகியும் ஆனவன்
கோதுஇல் இன்பமும் துன்பமும் கூர்வினை
மீது வேண்டல்வேண் டாமையும் வீடுமால். (10)

வேதத்தில் சொல்லப் பட்ட விதி முறைகளுக்கு உள்ளே யாதொன்றன் இடத்தும் சந்தேகம் சிறிதும் இல்லாமலேயே, குற்றமற்ற தத்துவ ஞானியும் சாத்துவிகத் தியாகியும் ஆன மனிதன், குற்றம் இல்லாத இன்பமும் துயரமும் மிகுந்த செயல்களில் முறையே வேண்டுதலும், வேண்டாமையும் விட்டு இருப்பான்.

யாக்கை யோடும் இசையில் இருவினை
நீக்கல் ஆவன அல்ல நிலத்திடை
வீக்கம் ஆய வினைப்பயன் வீடினார்
போக்க லாவினை யாவையும் போக்கினார். (11)

இப்பூமியின் கண்ணே ஒருவர் உடலுடன் கூடி இருப்பார் ஆகில் புண்ணிய பாவம் என்னும் இருவினைகளும் நீக்கப்பட இயலாதன. இக்காரணத்தினால் பந்தத்திற்கு ஏதுவான செயலின் பயனைத் தியாகம் செய்தவர்களே, தியாகம் செய்யக்கூடாத செயல்கள் அனைத்தையும் தியாகம் செய்தவர் என்றே சொல்லப் படுவர்.

இன்னா தனவும் இனியனவும் இரண்டும் கூடி இசைந்தனவாய்
முன்னா நின்ற வினைமூன்றும் அவற்றால் வந்த முடிபொருளும்
பொன்ஆ னதுவும் பணியும்போல் இருக்கும் இந்தப் பொய்மெய்யை
உன்னா தவர்க்கே உள்ளதுஇவை உணர்ந்தோர்க்கு உளவாய் உதியாவால். (12)

பாவமும், புண்ணியமும், அவை இரண்டும் கலந்ததாய் வருவதும் ஆன மூவிதச் செயல்களும் அவற்றால் உண்டான வேண்டாமை, வேண்டுதல், இரண்டும் கலந்தமை ஆகிய பயன்களும், பொன்னும் நகையும் போல் காரிய காரண வடிவங்களாக இருக்கும். இந்த மூவகையும் மாயாசாலம் போன்ற உடலுக்கு உண்டானவை, ஆன்மாவே மெய் என்று உணராதவர்களுக்கே உரியது. ஆன்மாவை மெய் என்று உணர்ந்த துறவியருக்குக் கர்மங்கள் அழிந்து போனமையால் அவர்களுக்குத் தோன்றாவாம்.

ஓங்கிய உலகினில் உயர்ந்த நன்மையும்
தீங்கின வாம்வினை யாவும் செய்தற்குச்
சாங்கிய நூலிலே உரைத்த சாதனம்
ஈங்குஇவை ஐந்தையும் எடுத்துக் கூறுவாம். (13)

உயர்வான இந்த உலகத்தின் கண்ணே மேன்மை வாய்ந்த புண்ணியமும், தீ வினையாகிய பாவங்கள் அனைத்தும் செய்வதற்கு வேதாந்த சாத்திரத்தில் கூறிய சாதனங்களாகிய இவை ஐந்தையும் இங்கே நீ அறியுமாறு எடுத்துக் கூறுவோம்.

இருப்பிடம் ஆம்உடம்பு இயற்றும் ஆர்உயிர்
கருத்தினை முதலிய கரணம் காற்றினால்
விருப்பொடு வருந்தொழில் இவற்றின் மேல்அருள்
அருத்தம்ஆம் தெய்வம்ஒன்று ஆக ஐந்துஅரோ. (14)

இருப்பிடம் ஆகிய பருவுடலும், வினைகளைச் செய்யும் அகங்கார வடிவான கர்த்தாவும், மனம் முதலிய பல விதமான கருவிகளும், பிராண வாயுக்களால் விருப்பத்தோடு வேறு வேறாக வரும் தொழில்களும், இவைகளுக்குப் பொருள்களைத் தருகின்ற தெய்வங்களின் அருள் ஒன்றும் ஆக இவ்வைந்தும் செயல்களின் காரணங்களாம்.

வாக்கினால் ஆதல்மெய் மனத்தி னாதல்தம்
யாக்கையால் ஆதல்இவ் உலகில் யாவரும்
வீக்குவார் சிலையினாய் வினைஇரண் டில்ஒன்று
ஆக்குநாள் இங்குஇவை ஐந்தும் வேண்டுமால். (15)

பகைவர் ஆற்றலை அழிக்கும் வில்லுடைய அருச்சுனா, சொல்லினால் ஆவது, உண்மையான மனத்தினால் ஆவது, தமது உடலினால் ஆவது, இவ்வுலகின்கண் உள்ள மனிதர் யாவரும் புண்ணிய பாவம் என்னும் இருவினைகளில் ஒன்றைத் தொடங்கும் பொழுது இங்கே முன் சொல்லிய ஐந்து காரணங்களும் வேண்டும்.

இவ்வகை யேவரும் வினைஇ ரண்டையும்
மெய்வகை ஆகயான் அன்றி வேறுஇலை
செய்வகை யான்எனச் சிந்தை மேயினான்
உய்வகை உணர்கிலான் உணர்வு மாய்ந்துஉளான். (16)

முன்னர்ச் சொல்லியபடி உண்டாகின்ற வினை (பாவ புண்ணியம்) இரண்டையும் செய்யும் தன்மை உடையவன் உண்மையில் ஆன்மாவாகிய யானே அன்றி வேறு ஒருவரும் இல்லை என்று அறிந்து நிற்பவன், தான் பிழைக்கும்படி அறியான். ஏனெனில் குருவினாலும் சாத்திரத்தினாலும் உண்டாகும் ஞானம் இன்மையால் அறியாமல் உள்ளான்.

யாவன் ஒருவன் தன்உடம்பை
யான்என்று இருக்கும் இயல்புஒழிந்தான்
யாவன் ஒருவன் தன்கரணம்
யாதுஒன் றோடும் விழைதல்இலான்
ஆவன் அவன்இவ் உலகத்தை
அடையக் கொன்றான் ஆயினும்ஓர்
பாவம் இல்லை அவன்கொன்ற
பழியும் இல்லை பார்மன்னா. (17)

அருச்சுனா, எந்த ஒரு மனிதன் தன் உடலை யான் என்று எண்ணி நிற்கும் இயல்பில் இருந்து நீங்கினவனோ, எவன் ஒருவன் தன்னுடைய அந்தக் கரணம் எவ்வகையான செயல்களோடும் பற்று இல்லாதவன் ஆவனோ, அவன் இவ்வுலகை முழுவதும் அழித்தாலும் ஒரு பாவமும் இல்லை. அவன் அவ்வாறு கொன்றமையால் உண்டாகும் நிந்தையும் இல்லை என்பதைக் காண்பாய்.

அறிவும் அறியப் படும்பொருளும்
அறிவான் ஒருவன் தானும்ஆய்
நெறியில் வினைகள் விதிக்கின்ற
விதியின் நிலைமை நிற்பதுதான்
செறியும் கருமம் செய்வானும்
செய்தற்கு உரிய கரணமும்ஆய்க்
குறியில் வினைகள் முடிவுஇருப்பது
இன்னும் சிலயாம் கூறக்கேள். (18)

அறிவும், அறியப்படும் பொருளும், அறிபவன் ஒருவன் தானுமாய் இம்மூன்று வழியில் வினைகளை விதிக்கின்ற விதியின் இயல்பு ஆனது நிற்கின்றது. பொருந்தும் கர்மமும், செயல்களைச் செய்பவனும், அவ்வாறு செய்வதற்கு உரியனவான கருவிகளும் ஆன இம்மூவகைக் குறியில் செயல்கள் யாவும் முடிந்துள்ளன. மேலும் சிலவற்றைப் பற்றி நீ அறிவதற்காக நான் இன்னும் கூறப் போவதை நீ கேள்.

ஆன்ற அறிவும் கருமமும்அக்
கருமங் களைஆக் கிடுவானும்
ஊன்ற உணரும் புத்தியொடு
திருதி என்ன உரைப்பனவும்
தோன்ற விளையும் இன்பமும்முன்
சொன்ன குணத்தின் தொடர்பாலே
மூன்று வகையாம் ஒரோஒன்றுஇங்கு
அவற்றின் திறம்நான் மொழியக்கேள். (19)

மாட்சிமை பொருந்திய அந்தக்கரண அறிவும் (விருத்தி ஞானமும்), வேள்வி முதலான செயல்களும், அக்கருமங்களைச் செய்பவனும், அழுத்தமாக அறிகின்ற ஞானமும், (தைரியம்) (திருதி) என்று சொல்வனவும், அதனால் தோன்றும் இன்பமும், முன்னர்ச் சொன்ன சத்துவம், இராசசம், தாமசம் என்னும் முக்குணங்களின் தொடர்பாலே ஒவ்வொன்றும் மூன்று வகையாகும். இங்கே அவற்றின் தன்மைகளை நான் அருளிச் செய்கிறேன். நீ கேட்பாயாக.

நன்றாய் ஞானத் திரள்ஆகி
நாநா விதம்ஆய் விரிந்துஎங்கும்
பொன்றா நின்ற பூதங்கள்
தோறும் பொன்றாப் பொருள்ஆகி
ஒன்றுஆய் நிற்பது ஒன்றினைஅப்
படியே உணரும் உணர்வுஅதனை
அன்றுஆம் என்னார் சாத்துவிக
ஞானம் எனவே அமைப்பாரால். (20)

ஆனந்தமாய், ஞானத் திரட்சியாய், எவ்விடத்தும் பலவிதமாய் விரிந்து அழிகின்ற பூதங்கள் அனைத்திலும் அழியாத பொருள் ஆகி நிலைத்து இருக்கும் படியான ஒன்றாகிய ஆன்மாவை, அவ்வாறே உணரும் ஞானத்தைச் சாத்துவிக ஞானம் அன்று என்று சொல்ல மாட்டார். சாத்துவிக ஞானம் எனவே விதிப்பர் பெரியோர்.

ஊனப் படும்இவ் உடல்தோறும்
உள்ள பொருளை உணராதே
ஈனப் படக்காண் கின்றதுஇரா
சதம்ஆம் ஞானம் அதுஅன்றி
ஞானத் திரள்ஆய் நின்றதைஓர்
உடம்பின் இடையும் நாட்டிடைஓர்
தானத்து இடையும் அடங்கக்காண்
பதுதா மதம்ஆம் ஞானமே. (21)

ஒன்றற்கு ஒன்று குறைபாடாகக் காணப்படும் இவ் உடல்கள் தோறும் விரிந்து இருக்கின்ற ஆன்மாவை உணராமல் இன்ப துன்பங்களின் வேறுபாட்டினால் உடல்கள் தோறும் வேறு வேறாகக் குதர்க்கமுடைய மனிதரால் அறியப்படும் ஞானம் இராசத ஞானம். அங்ஙனம் அறிவதும் அன்றி, ஞானத் திரட்சியாய் விரிந்து பரந்துள்ள ஆன்மாவை ஓர் உடம்பின் செயலிலும், ஓர் ஊரில் ஒவ்வொரு இடத்திலும் முறையாகக் காண்பது மாத்திரமே ஆன்மா, இதனைப் பார்க்கிலும் ஓர் ஆன்மா இல்லை என்று இவ்வாறு அறியப்படும் ஞானமே தாமத ஞானம்.

வீதல்இல் பற்று மேலோர் வினைப்பயன் வேண்டல் வேண்டாக்
காய்தல் ஒன்று இன்றிச் செய்யும் கருமம்சாத் துவிக கன்மம்
ஆய்வரும் பலத்தி னோடும் அகங்கர மத்தி னோடும்
ஏய்தரும் கருமம் எல்லாம் இராசத கருமம் ஆமே. (22)

பற்று இல்லாமல் பயனில் விருப்பம் இல்லாமல், விருப்பு வெறுப்பு ஆகிய இவற்றுள் ஒன்றும் இல்லாமல் செய்கின்ற கேடு இல்லாத தவம், தானம், யாகம் முதலான நித்தியச் செயல்கள் சாத்துவிகக் கருமம் என்று சொல்லப்படும். இனி வரும் சொர்க்கம் முதலான பலன்களின் மேல் விருப்போடும், முன் சொன்ன அகங்காரத்தோடும் தொடங்கப்பட்ட இச்சைக்கு உரிய கர்மங்கள் எல்லாம் இராசத கருமம் என்று சொல்லப்படும்.

குலைபெறும் பற்று மேலோர் கூறிய நீதி யோடும்
கலைதெரிந்து உணர்ந்து மெய்ம்மை கடைப்பிடி யாமையார்க்கும்
அலைவுஉறும் கேடு நாசம் வலிஇவை அவிவே கத்தால்
தலைதவச் செய்வது எல்லாம் தாமத கருமம் ஆமே. (23)

தான் நடுங்கும்படி செய்கின்ற பற்றோடும், உயிர்கள் வருந்தும்படி தோன்றும் நஷ்டமும், அழிவையும், தனது வலிமையும் ஆகிய இவற்றை மேலோர் சொல்லிய நியாயத்தோடும், நூல்களை நாடி ஆராய்ந்து உள்ளபடி உண்மையாய்க் கடைப்பிடிக்காது அஞ்ஞானத்தால் பெருமை குறையும்படி தொடங்குகின்ற செயல்கள் அனைத்தும் தாமத கர்மம் என்று சொல்லப்படும்

பற்றும்ஆங் காரம் தானும் பழுதுஅறத் துறந்து யாவும்
உற்றுஎழு முயற்சி யோடு நிலைமையி னோடும் ஒன்றி
எற்றும்ஓர் இழவு பேற்றில் துன்பம்ஈது இன்பம் என்று
சற்றும்ஓர் சலிப்புஇ லாத தலைவன்சாத் துவிகன் என்பான். (24)

கர்ம பலத்தில் விருப்பமும், ஆங்காரமும் குற்றம் இல்லாது நீக்கி, அனைத்துக் கர்மங்களிலும் பொருந்தி எழுகின்ற முயற்சியோடும், உறுதியோடும் பொருந்தி என்றும் ஓர் நஷ்டம், இலாபங்களில் இது துன்பம் என்றும், இது இன்பம் என்றும் எண்ணி ஒரு சிறிதும் சலிப்பின்றி உள்ள கர்த்தா எவரோ அவனே சாத்துவிகன் என்று சொல்லப் படுபவன்.

வினைப்ப யன்தனை வேண்டலும் வேட்கையும்
எனைத்துஇ டாமையும் தூய்மைஇ லாமையும்
நினைப்பின் வாட்டமும் நீடு மகிழ்தலும்
இனைத்தின் வாழ்வர் இராசத மாந்தரே. (25)

கர்ம பலன்களை விரும்புதலும், புதல்வர்கள் முதலானோர் இடத்தில் விருப்பமும், ஏதாவது ஒன்றை ஒருவருக்குக் கொடாத உலோபத் தன்மையும், தூய்மை இன்மையும், துன்பங்களுக்காக மனத்திலே வாட்டமும், மிகுந்த மகிழ்ச்சியும் ஆகிய இவ்விதத் தன்மைகளோடு கூடி வாழ்பவர் யாவரோ அவரே இராசத மாந்தர் என்று சொல்லப்படுபவர்.

மனம்ஒ ருக்கலும் வான்கலை நூல்களைத்
தனம்எ னக்கொடு கற்கலும் தக்கவர்
இனம்ம கிழ்த்தலும் இன்றி முடிப்பதுஓர்
தினம்மு டித்திடார் தாமதம் சேர்ந்துஉளார். (26)

செய்யத் தகுந்த கர்மங்களில் மனம் செல்லும்படி அடக்கலும், பெருமை மிக்க ஞான நூல்களைச் செல்வம் என எண்ணிக் கற்றலும், பெரியோர் கூட்டம் மகிழும்படியான

வணக்கமும் ஆகிய குணங்களில் ஒன்றும் இல்லாமல், ஒரு நாளில் முடிக்கத் தக்க செயலைப் பல நாள்களிலும் முடிக்க இயலாதவர் தாமதர் என்று சொல்லப்படுபவர்.

ஈனம் அற்ற துறவறம் இல்லறம்
ஞானம் பற்றொடு நல்வினை தீவினை
ஆன அஞ்சுவ அஞ்சத் தகாஎனத்
தான்அ றிந்தது சத்துவ புத்தியே. (27)

இழிவு அற்ற துறவறம் இப்படிப் பட்டது இல்லறம் இப்படிப் பட்டது, இப்படிப் பட்டது வீடுபேறு, இப்படிப் பட்டது பந்தம், இது நல்வினை, இது தீவினை, இவை அஞ்சத் தக்கவை, இவை அஞ்சத் தகாதவை என்று இவைகளை உள்ளபடியே அறிந்து கொண்ட புத்தி எதுவோ அது சத்துவ புத்தி ஆகும்.

தருமம் பாவம் தனக்குச் செயத்தகும்
கருமம் செய்யத் தகாத கருமங்கள்
அருமை யால்அறி யாத அறிவதே
இருமை ஆய இராசத புத்தியே. (28)

தருமத்துடன் அதர்மத்தையும், தனக்குச் செய்யத் தக்கது, செய்யத்தகாதன ஆன செயல்களையும் அருமையாக உள்ளபடி அறியாத அறிவானது சந்தேக வடிவான இராசச புத்தி என்று சொல்லப்படும்.

பாவம் ஆகத் தருமத்தைப் பார்த்தலும்
ஆவது ஆம்என்று அடாதது நோக்கலும்
தீமை செய்கின்ற சிந்தனை தீங்கிலே
போவது ஆவதும் தாமத புத்தியே. (29)

பாவமாகத் தருமத்தைப் பாவித்தலும், செய்யத் தகாத செயல்களைச் செய்யத் தகுந்தது என்று எண்ணுதலும், துன்பத்தைத் தருகின்ற சிந்தனை ஆனது பிற தீங்கான அனைத்து விசயங்களிலும் செல்லுதலையும் உடையது தாமச புத்தி என்று சொல்லப்படும்.

மனம்செ யும்தொழில் மன்உயி ரின்தொழில்
இனம்செய் இந்தியம் செய்தொழில் என்றஇவை
கனம்செய்து ஏறிலும் கண்டுபொ றுத்தலும்
சினம்செ யாமையும் சாத்திக திருதியே. (30)

மனத்தினால் செய்கின்ற செயல்கள், நிலைபேறுடைய பிராணன் செய்யும் செயல்கள், கூட்டம் ஆகிய இந்திரியங்களினால் செய்யும் செயல்கள், எனப்படும் இச்செயல்கள் சுமையாக அதிகரித்தாலும் கண்டு பொறுத்துக் கொள்ளுதலும், கோபம் கொள்ளாமையும், சாத்துவிக உறுதி என்று சொல்லப்படும்.

பண்ணிக் காமம் தரும்பயன் கைக்கொள்வான்
எண்ணித் தாங்கும் திருதி இராசதம்
கண்ணில் சோகம் களிப்புஉறக் கம்பயம்
நண்ணித் தாங்கும் பொறைதமம் நாளுமே. (31)

ஆசையினால் சொர்க்கம் முதலான பயன்களை அடையும் பொருட்டு அவைகளுக்குக் காரணமான தர்மங்களைச் செய்து தர்ம்ம், காமம், பொருள் ஆகிய இம்மூன்றுமே தமக்கு அவசியமாகச் சேர்க்கத் தக்கன என்று எண்ணி அவைகளைப் பொருந்தி நிற்கும்

உறுதி ஆனது இராசதம் ஆகும். புத்தியில் சோகம், களிப்பு, உறக்கம், பயம் இவைகளை எப்பொழுதும் விடாமல் பொருந்தி, தரிக்கும் உறுதி ஆனது தாமத உறுதி ஆகும்.

துன்பம் ஆய்விடம் போன்று தொடக்கத்தில்
இன்பம் ஆகி விளைவுஇடம் யாவர்க்கும்
அன்ப ஆர்அமு தேஎனல் ஆவதுஆம்
என்ப சாத்து விகம்தரும் இன்பமே. (32)

அன்பனான அருச்சுனா, யாவருக்கும் தொடக்கத்தில் அதாவது ஞான, வைராக்கிய, தியான, சமாதிகளின் தொடக்க காலத்தில் நஞ்சைப் போலத் துன்பம் ஆகி, பக்குவம் அடையும் போது இன்பம் ஆகி அரிய அமுதம் என்று சொல்லத் தக்கது சாத்துவிக இன்பம் என்று யோகிகள் சொல்லுவர்.

பொருத்தம் ஆய்ப்புல னோடு பொறியிலே
அருத்தம் ஆய்எழுந்து ஆர்அமுது என்னலாய்
விருத்தம் ஆய்முடி வில்விடம் ஆகியே
இருத்தல் ஆகும் இராசத இன்பமே. (33)

இந்திரியங்களுடன் விஷயங்களின் பொருத்தத்தால் அனுகூலமாய் எழுந்து அரிய அமுதம் என்று சொல்லுவதாய், இன்பத்தின் முடிவில் வெறுப்பாய் நஞ்சு போல் பயன் இன்றி இருக்கும் சுகம் இராசத இன்பம் ஆகும்.

தொடர்உ றக்க மயக்கொடு சோம்பினால்
படஉ தித்ததுஆய்ப் பண்ணும் பொழுதினும்
கடன்வி ரைந்து முடிந்தகா லத்தினும்
இடர்வி ளைப்பது தாமத இன்பமே. (34)

தொடரும் தூக்கம், மயக்கம், சோம்பல் என்னும் இவைகளால் பொருந்துமாறு தோன்றினதாய் ஆரம்ப காலத்திலும், விரைவாக முடிந்த காலத்திலும் தனக்குக் கடனாக மோகத்தைச் செய்யும் சுகமானது தாமச இன்பம் ஆகும்.

இந்தஇயற் கையின்ஆம்இக் குணங்களைவிட் டவர்இல்லை
அந்தணர்க்கும் அரசர்க்கும் வணிகர்க்கும் சூத்திரர்க்கும்
தந்தம்இயற் கையஆய குணம்மூன்றின் தன்மையினில்
வந்தவினைத் திறம்அவற்றை உரைப்பன்கேள் முடிமன்னா. (35)

முடி அணிந்த அருச்சுனா, முன்னர் சொல்லப் பட்ட இயற்கையின் தன்மையினால் உண்டான இந்தச் சாத்துவிகம், இராசதம், தாமசம் என்னும் மூன்று குணங்களை விட்டவர் இல்லை. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியோரும் தத்தம் சுபாவங்களால் உண்டாகிய சத்துவம் முதலான முக்குணங்களின் தன்மையினால் தோன்றும் கருமங்களின் கூறுபாடுகளை இனி அருளிச் செய்வேன் கேட்பாயாக.

கறைசெய்ஐம் புலன்களைக் கரணம் நான்குடன்
துறைதுறை அடக்கலும் தவமும் தூய்மையும்
பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமும்
மறையவர் தொழில்என வகுக்கப் பட்டதே. (36)

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் உட்கரணங்கள் நான்குடன் குற்றத்தை உண்டாக்குகின்ற ஐம்புலன்களையும் அவ்வவற்றிற்கு உரிய இடங்களில் அடக்கிச் செய்கின்ற சமதமங்களும், மூவித தவங்களும், உடல், அந்தக்கரணம் ஆகியவற்றின் தூய்மையும், பிறர்

செய்யும் அவமானத்தைக் கூடப் பொறுத்துக் கொள்ளும் தன்மையும், நூலறிவும், அதனால் உண்டாகும் விஞ்ஞானமும் அந்தணர்களின் இயல்பான தொழில்கள் என்று சாத்திரங்களில் வகுத்துச் சொல்லப் படுகின்றன.

**தலைமையும் கொடையொடு தறுகண் ஆண்மையும்**
**நிலைமையும் கீழ்ப்படா நெஞ்சின் நீட்டமும்**
**கொலைபயில் போர்களில் புறங்கொ டாமையும்**
**சிலைமலி தோளினாய் அரசர் செய்கையே. (37)**

வில் பொருந்திய தோளை உடைய அருச்சுனா, தலைமைத் தன்மையும், கொடைக் குணமும், எவர்க்கும் அஞ்சாத ஆண்மைத் தன்மையும், தைரியமும், மேலான மன உறுதியும், கொலைத் தொழில் மிகுந்த போர்களில் தோற்று ஓடாமையும் ஆகிய இவை அரசர்களின் செயல்கள்.

**உழுதொழில் பசுக்களை ஓம்பல் வாணிகம்**
**வழுவுஅறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்**
**பழுதுஅற இவர்களைப் பாது காத்தலே**
**விழுமிய தொழில்கள்வே ளாளர்க்கு என்பவே. (38)**

பூமியைப் பயிருக்காக உழுதலும், பசுக்களைப் பாதுகாத்தலும், வணிகத்தைக் குற்றம் இன்றி முறைப்படி செய்தலும் ஆகிய இவைகளே வணிகர்களின் இயல்பான வாழ்க்கை ஆகும். அந்தணர், அரசர், வணிகர் என்னும் முக்குலத்தாரையும் குற்றமறப் பாதுகாப்பதே வேளாளருக்குச் சிறந்த செயல்கள் என்று கூறுவர்.

**தீரா வகைதம் செயலே செயவே**
**நாரா யணன்ஆம் முதல்நா யகனுக்கு**
**ஆரா தனைஆம் அதனால் அவனே**
**வாரா வழிஆம் வரமே தருமால். (39)**

விடாதபடி முன் சொன்ன தத்தமக்கு உரிய செயல்களையே கடைப்பிடிக்க, அதுவே நாராயணனாம் முதல் நாயகனுக்கு ஆராதனை ஆகும். அதனால் அந்த நாராயணனே பிறவா நெறி ஆகிய பெருவரத்தைத் தருவான்.

**அல்லா வினைதான் அழகாய் வரினும்**
**செல்லார் பெரியோர் அவைசெய் வதனில்**
**தொல்லார் குலமே தொடரும் தொழிலே**
**பொல்லா எனினும் செயலே பொருளே. (40)**

தமக்கு உரியன அல்லாத பிறகர்மங்கள் ஆனவை எவ்விதக் குற்றமும் இல்லாது செய்ய வருமாயினும், அவை அச்சத்துக்கு உரியவை ஆதலால் பெரியோர் அவ்வழிகளில் செல்லார். அவற்றைச் செய்வதைப் பார்க்கிலும், தொன்று தொட்டுக் கடைப்பிடித்து வரும் அரச குலத்திற்கே உரியன ஆகிய போர் முதலிய செயல்கள் பொல்லாதன எனினும், உறவினர்க்குத் துன்பம் தருவன எனினும் அவற்றைச் செய்ய வேண்டுவது தர்மமே.

**கனைஎரி புகையோடு அன்றிக் காணமுன் படாமை போல**
**வினைகளும் குற்றம் தன்னை விட்டுஇரா ஆத லாலே**
**அனையஎன்று இகழ்தல் ஆகாது அடுத்தகா ரியங்கள் தம்மை**
**நினைவரும் தருமம் என்று செய்கையே நீதி எல்லாம். (41)**

சத்தத்துடன் ஒளிர்கின்ற நெருப்பானது புகையோடு அன்றி எதிரே காணப் படாமை போல, அனைத்துச் செயல்களும் குற்றங்களை விட்டு விடாமல் அவற்றுடன் கூடி உள்ளன. ஆதலால் அவற்றைக் குற்றம் உடையன என்று கருதித் தூய்மை அற்ற அஞ்ஞானிகள் விடுதல் கூடாதாம். தத்தமக்கு உரிய செயல்களை நினைத்தற்கு அரிய தருமம் என்று எண்ணி அனைத்தையும் கடைப்பிடிப்பதே நியாயம் ஆகும்.

வெல்லப்பட்ட மனத்தினன்ஆய் வேறு ஒன்றினையும் வேண்டாதே
அல்லல்படுக்கும் உடல்பற்றும் அறவேஅறுத்தான் வினைஅடைய
செல்லச்செல்ல அறுத்தான்ஆம் அதனால்சித்தம் முடிவுஆகச்
சொல்லப்பட்ட கரணங்கள் நான்கும்தூய்தாய் விடும்அன்றே. (42)

அனைத்தையும் வென்ற மனத்தினை உடையவனாய், அதனால் வேறு ஒன்றினையும் வேண்டாமல் துன்பத்தை உண்டாக்கும் தேகத்தின் பற்றும் முழுமையாய் நீங்கும்படி விட்டு விட்டவன், தன் கர்மங்கள் அனைத்தும் நீங்கும்படி விட்டு விடுவான். அந்தச் சந்நியாசத்தால் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனப்பட்ட உட்கருவிகள் நான்கும் தூய்மை ஆனவனாய் ஆகி விடுவான்.

சொன்னகரணம் அவைநான்கும் தூய்தாய்விட அத்தூய்மையினால்
உன்னஅரிய பெரும்பொறையை உடையன்ஆகும் அப்பொறையால்
இன்னல்செய் யும்பொறிஐந் தும்இராகத்துவே டம்எனும்இரண்டும்
மன்னதன்னை நலியாமை மாற்றும்அவற்றை மாற்றினால். (43)

அருச்சுனா, முன்னர்ச் சொல்லிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் உட்கருவிகள் நான்கும் தூய்மையாகி விட அத்தூய்மையினால் அவன் கருதுதற்கு அரிய பெரும் பொறுமையை உடையவன் ஆவன். அந்தப் பெருமை உடைய பொறுமையால், ஞான நிட்டைக்குத் துன்பம் செய்கின்ற பொறி ஐந்தும், விருப்பு வெறுப்பு என்று சொல்லப் படுகின்ற அவ்விரண்டனையும் தன்னை வருத்தாமல் நீங்கும்படி விட்டு விடுவான் அப்படி விட்டுவிட்டால்.

காடும் மலையும் மலைமுழைஞ்சும்
கடுமா முதல நலிவுஇல்லா
ஓடும் புனல்ஆறு உள்ளிட்ட
இடமே உறையு ளாக்கொண்டு
தேடும் பொருள்ஒன்று இன்றியே
சிறிதே உண்டு சென்றுஎங்கும்
ஆடும் மனம்வாய் மொழியாக்கை
அடங்கப் பெறுமால் அவன்ஐயா. (44)

அருச்சுனா, காடும், மலையும், மலைக் குகையும், கொடுமையான விலங்குகள் முதலியன துன்பம் தருதல் இல்லாத நீர்மிகுந்து ஓடும் நதிகள் உள்ள இடமுமே தங்கும் இடமாகக் கொண்டு, தேடத் தக்க பொருள்கள் ஒன்றின் மேலும் ஆசையின்றி உறுதியோடு, சிறிதளவே உண்டு, எல்லா இடத்திற்கும் செல்லுகின்ற மனம், வாய் மொழி, உடல் ஆகியன அடங்கப் பெறுபவன் ஆவான்.

சொன்ன இவைபோய் அடங்கிடவே
தோன்றும் களிப்பும் காமமும்முன்பு
என்னது யான்என் கின்றதுவும்
எரிபோல் வெகுளி யொடுவலியும்

உன்னல் தவிர்ந்து சாந்திபெறும்
சாந்தி பெறவே ஓர்இடத்தும்
பின்னம் அடையாது ஒன்றுஆகி
நின்ற பொருளின் போர்உருவாம். (45)

மேற்சொல்லிய மனம், வாக்கு உடல் ஆகியன அடங்கின போது தோன்றும் களிப்பும், ஆசையும், முன்னர் உள்ள யான் எனது என்னும் மமதைகளும் தீ போலத் தகிக்கும் கோபத்தையும், பகையும் ஆகிய இவற்றை நினைப்பதை விட்டு விட்டு அமைதி அடைவான். அப்படி அமைதி அடையவே யாதோர் இடத்தும் வேறுபாடின்றி ஒன்று ஆகி நின்ற பிரம்மத்தின் பேர் உருவமாய் விளங்குவான்.

அந்த உருஆ னவன்பின்னை யாதே வரினும் அழிவுஉறான்
இந்த உலகத்து உயிர்க்குஎல்லாம் ஒத்தே இருக்கும் ஈங்குஇவனும்
பந்தம் அறவிட்டு எனைஅறியும் பத்தி பெறும்அப் பத்தியினால்
சிந்தை இடையே எனைத்தெளியும் அதனால் எனையே சேருமால். (46)

அந்தப் பிரம்ம வடிவமானவன், தேக அபிமானம் இல்லாமையால் எது வந்தாலும் துன்பம் அடையான். இவ்வுலகில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் ஒத்தே இருப்பான். இத்தகைய ஞான நிட்டை உடைய துறவியும் பந்த வடிவான வாசனை முழுமையும் நீக்கி, பரம்பொருளான என்னை அறிவதற்கு உரிய பத்தியை அடைந்து, அதன் மூலம் சித்தத்தின் கண்ணே பிரம்மமான என்னை உள்ளபடியே அறிவான். அதனால் அவன் என்னை அடைந்தவன் ஆவான்.

என்னைப் பற்றிக் கொடுநின்றே
எல்லா வினையும் இயற்றினால்
பின்னைப் பிறவாப் பெரும்பதம்என்
அருளி னாலே பெறும்கண்டாய்
நின்னைத் தொடரும் வினைஎல்லாம்
என்னை நினைந்தே செயில்வினைகள்
தன்னைக் கடத்தற்கு அருந்துன்பம்
எல்லாம் கடக்கத் தகுதியால். (47)

பிரம்மமான என்னைப் பற்றி நின்று எல்லாச் செயல்களையும் செய்து வருவான் ஆயின் அவன் பின்னர் எனது அருளினால் மீண்டும் பிறவாத பதத்தை அடைவான். ஆதலால் அரசனான உனக்குத் தொடர்புடைய போர் முதலான செயல்கள் எல்லாம் எனக்கே அர்ப்பணம் என்று செய்வாய் ஆகில் அனைத்துச் செயல்களையும் அதனைக் கடத்தற்குக் காரணமான சம்சார துக்கங்கள் முழுவதையும் நீ கடத்தற்கு உரியவன் ஆவாய்.

ஒன்றிய மனத்தி னாலே யான்உரைக் கின்ற உண்மை
நன்றுஇதுஎன்று உணராய் ஆயின் நாசமே அடைதி மற்றுஈது
அன்றியும் அரசர்க்கு எல்லாம் அடுத்தகா ரியம்ஆய் உள்ள
வென்றியை அடையா நிற்கு வேறுஇனி விளைவ கேளாய். (48)

ஒன்றிய மனத்தினோடு பரம்பொருளான நான் அருளிச் செய்த உண்மையான வாக்கியப் பொருளை நல்லது என்று எண்ணிக் கடைப்பிடிக்காது போனால் நீ நஷ்டமே அடைவாய். இஃது அன்றியும் அரசர்களுக்கு எல்லாம் பொருந்திய செயலாய் உள்ள பகைவரை வெல்லும் வெற்றியை விரும்பாத உனக்கு வேறு இனி ஏற்படும் துன்பங்களையும் கேட்பாயாக.

விரைசெய் தார்மன்ன வேண்டலை ஆயினும்
கரைசெய் மாயையும் கால்உற ஆழ்த்திடும்
அரசர் தம்குணம் ஆகிய ஆண்மையே
புரைசெய் வாள்அமர்க் கேபுகு விக்குமால். (49)

மணம் பொருந்திய மாலை அணிந்த அருச்சுனா, உறவினர்களுடன் சேர்ந்து செய்யும் போரினை நீ விரும்பவில்லை ஆயினும், அரசர்களுக்கு உரியது என்று வரையறை செய்யப்பட்ட மாயை யுத்தத்தில் உன்னைக் காலால் அவசியம் அழுத்தும். அரசர்களுக்கு உரிய ஆளுந் தன்மையே வாட்படை கொண்டு செய்யும் போரில் கணப்பொழுதில் செலுத்தும்.

பொறிகள் உள்நின்று அவற்றின் புணர்ப்புஎலாம்
அறிய ஆட்டினன் போல்ஆக் கைகள்தொறும்
மறைவில் நின்றுதன் மாயையி னால்வினைக்
குறிகள் செய்விப்பன் ஈசன்என் றேகொள்வாய். (50)

மரத்தினால் செய்யப்பட்ட பொம்மைகளின் உள்ளே மறைந்து நின்று அவற்றுடன் தொடர்பு உடையனவான கை, பாதம், கன்னம் முதலியவற்றின் செயல்கள் முழுவதையும் உலகினர் அறிய ஆட்டி வைக்கும் பொம்மலாட்டக்காரன் போல மறைந்து இருக்கும் ஈசனும் உடல்களைச் சார்ந்த இதயங்கள் தோறும் மறைந்து நின்று தன் மாயையினால், அவ்வுயிர்களின் எண்ணங்களைச் செய்விப்பான் என்பதை நீ உன் மனத்திலே கொள்க.

வேறுஅப் பால்ஒரு வர்க்கும் விளம்புதல்
மாறப் பட்ட பொருளின் வகைஎலாம்
கூறப் பட்டது உனக்குஇக் குறிகளை
ஏறப் பார்த்துஉனக்கு ஏறிய வாசெய்வாய். (51)

வேறு ஒருவருக்கும் இனி உபதேசிப்பதைத் தவிர்க்கப்பட்ட மந்திரம், யோகம் முதலானவற்றின் ஞானப் பொருள் எல்லாம் உனக்கு எனது கருணையினால் கூறப்பட்டது. இவற்றை நன்றாக விசாரித்து உன் விருப்பப்படி செய்வாயாக.

தீதுஅகலாது எனஉளவோ இவன்வேண்டில் எனத்தேறி
ஓதலினால் நினைத்தலினால் எனைப்போக்கி ஒன்றுஅறியாய்
ஆதலினால் யாவர்களும் அறியாத ஒருபொருளைக்
காதலினால் உனக்குஇன்னும் உரைக்கின்றேன் கடைப்பிடிநீ. (52)

இறைவன் அருள் செய்தால் நீங்காத தீமைகள் என்று உண்டோ? என்று உறுதி செய்து கொண்டு ஓதுவதாலும், மனத்தினால் நினைத்தலாலும் பரம்பொருளான என்னைத் தவிர்த்து வேறு ஒரு தெய்வத்தை நீ அறிய மாட்டாய். ஆதலினால் எவராலும் அறியப் படாத ஒப்பற்ற ஒரு பொருளை அன்பு கொண்டு உனக்கு இன்னும் கூறுகின்றேன். நீ மனத்தில் உறுதியாகக் கடைப்பிடிப்பாயாக.

என்னையே நினைந்துஎழஉன் மனத்தினைஎன் னிடையேவை
என்னையே நினைந்துஇருநீ மற்றுஎனக்கே பூசனைசெய்
என்னையே குருவாக்கொள் எப்போதும் இதுசெய்யில்
என்னையே வந்துஅடைதி இதுமெய்யே இதுமெய்யே. (53)

அருச்சுனா, நீ என்னையே நினைத்து எழுமாறு உன் மனத்தை என்னிடத்தே பக்தி கொள்வதாக வைத்து எப்பொழுதும் என்னையே சிந்தனை செய்து நிற்பாய். என்பால்

உனக்குச் சிறந்த பக்தி உண்டாக எப்பொழுதும் என்னையே வழிபடக் கடவாய். பரம்பொருளான என்னைச் சற்குருவாகக் கொண்டு அடியவர்க்கு உரிய நெறியில் வழிபடுவாய். எப்பொழுதும் இதனைச் செய்து வந்தால் பரம்பொருளான என்னை நீ அடைவாய். இது சத்தியம், இது சத்தியம்.

இருவேறு வகைஆய வெவ்வேறு வினைகளையும்
மருவேன்என்று அறவிட்டு மாயையினால் மறைப்புஅரிய
ஒருஎனையே பற்றுதிஅப் பற்றினால் உனைப்பிறவிக்
கருவேலை கடந்துஏறக் கைதருவேன் கதிர்வேலோய். (54)

ஒளி மிக்க வேலுடைய அருச்சுனா, தர்மம், அதர்மம் என்னும் இரண்டு கூறுபாட்டினை உடைய வெவ்வேறான கர்மங்களையும் இனிச் சேர மாட்டேன் என்று அவற்றை முழுமையாய் விட்டு விட்டு, மாயையால் மறைத்தற்கு அரிய என்னையே தஞ்சம் அடைக. அதனால் பிறவிப் பெருங்கடலைத் தாண்டிக் கரை ஏறும்படி உனக்கு அருள் செய்வேன். ஆதலால் நீ சோகத்தை நீக்கிவிடு.

மற்றுஉனக்குச் சொல்லியஇம் மறைப்பொருள்மா தவம்இலர்க்கும்
குற்றம்அறுத்து அறிவுஅருளும் குருவழிபாடு இலாதவர்க்கும்
செற்றமனச் சழக்கர்க்கும் எனைநினையாத் திறத்தவர்க்கும்
அற்றம்அறத் தெரிந்துஉரைக்கை அடாதுஎன்றே அறிகண்டாய். (55)

அருச்சுனா, உனக்கு உபதேசித்த இம்மறைப் பொருள்களைப் பெரிய தவம் இல்லாதவர்க்கும், அனைத்துக் குற்றங்களையும் நீக்கிப் பெரிய ஆன்மாவுடன் ஒன்று உவக்கும் ஆனந்தத்தை உபதேசித்து அருளுகின்ற குருவினை வழிபாடு செய்யாதவர்க்கும், வெறுப்பான மனம் கொண்ட அறிவிலிகளுக்கும், என்பால் அன்பு இல்லாதவர்க்கும் அச்சம் நீங்குமாறு உபதேசித்தல் பொருந்தாது என்பதை நீ அறிக.

எல்லாப் பொருட்கும் பரம்ஆம்இப்
பொருளை என்அன் பர்க்குஇசையச்
சொல்லால் தெரிவிப் பவர்என்பால்
அன்பு துன்னி எனைஅடைவர்
நல்லார் களின்மற்று எனக்குஇனிய
நன்மை செய்கின் றாரும்அவர்
அல்லா தவர்இப் பொழுதும்இலை
மேலும் அவர்கள் உளர்ஆகார். (56)

அனைத்து மறைபொருள்களிலும் மிக இரகசியமான இந்த மறைபொருளைப் பரம்பொருள் ஆகிய என்னுடைய அடியவர்களுக்கு மனத்திலே பொருந்தும்படி தன் வாக்கால் போதிப்பவர் என்பால் அன்பு கொண்டு என்னை அடைவர். நல்ல மனிதர்களுக்கு உள்ளே எனக்கு இனிய நன்மைகளைச் செய்கின்றவரும் அவரே. இக்கீதையை என் அடியவருக்கு உபதேசியாதவர் இக்காலத்திலும் என்னை மகிழ்ச்சிப் படுத்துகின்றவராக இல்லை. இனி மேலும் அவர்கள் என்னை மகிழ்ச்சிப் படுத்துகின்றவர்கள் ஆக மாட்டார்.

ஏய இருவோம் பேசியஇவ்
அறநூ லினையே எடுத்துஉரைப்பான்
ஆய ஞான யாகத்தால்
எனையே ஆரா திக்கின்றான்

மேய பொறாமை தனைவிட்டு
விருப்பால் இதனைக் கேட்பானும்
தீய வினைகள் அறவிட்டுத்
தேவர் உலகம் சேருமால். (57)

நாம் இருவரும் பொருந்த விவாதித்த அறவடிவமான இக்கீதையைக் குருமுகமாகக் கற்று முறையாகப் படிக்கும் மானிடன் எல்லா வேள்விகளிலும் சிறந்ததான ஞான வேள்வியால் பரம்பொருளான என்னையே வழிபடுகின்றான். பொறாமைகளைக் கை விட்டு விருப்பமுடன் இதனைக் கேட்பவனும், அனைத்துப் பாவங்களையும் விடுத்துப் புண்ணியர்கள் அடையும் உத்தம உலகங்களை அடைவன்.

என்னது மொழியி னால்யான் இயம்பிய ஞானத் தாலே
மன்னவ உனக்கு வந்த மயக்குஎலாம் கெட்ட தோயான்
சொன்னஇப் பொருள்கள் எல்லாம் துணிந்தனை கொல்லோ என்று
நல்நகை கூர நின்று நாயகன் அருளிச் செய்தான். (58)

மன்னனே, அருச்சுனா, நான் உரைத்த கீதை ஞானத்தாலே உனக்கு அஞ்ஞானத்தால் ஏற்பட்ட மயக்கம் எல்லாம் கெட்டனவோ? என்னால் உரைக்கப் பட்ட இப்பொருள்களை எல்லாம் ஒருமனத்தோடு ஏற்றுக் கொண்டாயோ? என்று புன்னகையோடு நின்ற கண்ணன் வினவினான்.

மன்னவஎன் மாயமது சூதமறை நாலின்
முன்னவ மொழிந்ததிரு வாய்மொழிக ளாலே
என்னகுறை உண்டுஇனி எனக்குஎன இயம்பித்
தன்அகம் மகிழ்ந்துஇவை தனஞ்சயன் உரைப்பான். (59)

மன்னவனே, என் மாயவனே, மதுசூதனா, நான்கு வேதங்களையும் தோற்றுவித்தவனே, நீர் உரைத்து அருளிய சிறந்த சொற்களால் உம் அடிய்வனான எனக்கு எக்குறையும் இல்லை எனக் கண்ணனிடம் கூறி அருச்சுனன் தன் மனம் மகிழ்ந்து மேலும் சொல்லத் தொடங்கினான்.

வையம்முழுது உண்டதிரு வாய்மலர் திறந்திட்டு
உய்யஅடி யேன்முன்உரை செய்தஉரை யாலே
ஐயமொடு மோகம்அற விட்டுஎன் அறிவு உற்றேன்
செய்வதுஇனி உன்றன்அரு ளின்செயல்கள் அன்றோ. (60)

உலகம் முழுவதையும் உண்ட உமது திருவாய் திறந்து நான் பிழைக்கும் பொருட்டு முன்னே அருளிச் செய்த கீதையினாலே அனைத்துச் சந்தேகங்களும், மயக்கமும் நீங்கும்படி ஒழித்து நான் ஆன்ம ஞானம் பெற்றேன். இனி என் உயிர் உள்ளவரை நான் செய்வது அனைத்தும் உம் அருளால் செய்யும் செயல்கள் அன்றோ.

பைஅரவி லேஇனிது பள்ளிஅமர் வோனே
வையமும்இவ் வையம்அதில் மன்உயிர்கள் யாவும்
செய்யும்வகை உற்றதுசி தைத்தல்அது தானும்
மெய்தெரியில் நீமுன்விளை யாடும்வகை அன்றோ. (61)

படத்தை உடைய ஆதிசேடன் என்னும் பாம்பின் மேல் இனிதாகப் பள்ளி கொள்பவனே, நீ அநாதி காலம் தொட்டு உலகங்களையும், இவ்வுலகில் உள்ள நிலைபேறுடைய உயிர்கள் அனைத்தையும் உண்டாக்கவும், அழிக்கவும் ஆகிய இவற்றை உண்மையாக ஆராய்ந்தால் அது உன் விளையாட்டின் தன்மை அல்லவா?

அணித்தகைய சோதிஅம லாஉன்அரு ளாலே
கணித்தல்அரிது ஆயபிற விக்கடல் கடந்தேன்
பிணித்தபெரு மாயைமயல் கெட்டதுபி ரானே
பணித்தபணி அல்லது செயத்தகுவது உண்டோ. (62)

அழகிய பெருமை மிக்க சோதியே, குற்றம் இல்லாதவனே, உன் அருளால் அளவிடுதற்கு அரிய பிறவிக் கடலைக் கடந்தேன். தொன்று தொட்டு என்னைப் பிணித்த பெருமாயையால் உண்டான மயக்கம் கெட்டது. என் தலைவனே, நீர் இட்ட கட்டளையே அல்லாமல் வேறு செய்யத் தக்க பணி எனக்கு உண்டோ?




பிணித்த பிறவிப் பெருந்தளையைப்
பெயர்த்துஎன் பெரும்பே தைமைநோயைத்
தணித்த அரசே எனக்குத்தான்
தகுமே ஆகத் தகாதுஆகத்
துணித்த திறல்வான் போரினையே
தொடங்கு கென்று நீஇங்குப்
பணித்த பணியான் செய்வன்எனப்
பார்த்தன் அவனும் உடன்பட்டான். (63)

தொன்று தொட்டு எனைப் பிணித்து வந்த பிறவியாகிய பெரு விலங்கினை அறுத்து, என்னுடைய பெரிய அறியாமை ஆகிய நோயைத் தணித்த இறைவனே, எனக்குத் தக்கது, தகாதது எதுவெனக் கருதி நிச்சயித்த வலிய பெரும் போரினைத் தொடங்குக என்று தாங்கள் இங்கே இட்ட ஆணையை நான் செய்யக் கடவேன் என்று அருச்சுனனும் சம்மதித்தான்.

மாதவனும் தனஞ்சயனும் தங்களிலே மகிழ்ந்துஉரைத்த
ஓதரிய பொருளினைநீ உணர்ந்தவாறு எங்ஙன்எனில்
வேதவியா தன்னுடைய மெய்அருளை மிகஉடையேன்
ஆதலினால் அறிந்தனன்வேறு அறியலாம் வகைஉண்டோ. (64)

கண்ணனும், அருச்சுனனும் தங்களுக்குள் மகிழ்ந்து சொல்லிக் கொண்ட ஓதுதற்கு அரிய பொருளினை, சஞ்சயரே நீ அறிந்தவழி எப்படி என்று கேட்பீர் ஆகில் வேத வியாசனுடைய மெய் அருளை உடைய நான் அக்காரணத்தினால் அவர்களின் உரையாடலை உணர்ந்தேன். அவனுடைய அருள் அன்றி வேறு வகையால் நான் உணர இயலுமோ?

அப்பொருளை நினைதோறும் அற்புதம்ஆம் அகமகிழ்வும்
மெய்ப்புளகும் வரும்அவன்தான் இருக்கின்ற வகைவிரித்த
ஒப்பரிய திருக்கோலம் உணர்தோறும் உணர்தோறும்
செப்பரிய பெருங்களிப்புஎன் சிந்தைஉளே திகழுமால். (65)

அப்புண்ணிய வடிவான அற்புதமான உரையாடலை நினைக்குந் தோறும், நினைக்குந் தோறும் அதிசயமான மன மகிழ்ச்சியும் உடல் புளகமும் அடிக்கடி வருகின்றன. அக்கண்ணபிரான் தான் எல்லாமாக இருக்கின்ற தன்மையை அருச்சுனனுக்கு விரித்துக் காட்டிய மிக அற்புதமான விசுவ ரூபத்தை நினைக்குந் தோறும் நினைக்குந் தோறும் சொல்லுதற்கு அரிய பெருமகிழ்ச்சியானது அடிக்கடி என் மனத்துள் தோன்றுகின்றது.

எஞ்சல்இலாப் பொருள்அனைத்தும் இப்படியே புகுந்ததுஎனச்
சஞ்சயன்அன்று எடுத்துஉரைத்து நூற்றுவர்க்கும் தாதையோய்
வஞ்சனையே கண்ஆக வாழ்கின்ற மற்றவர்க்குப்
பஞ்சவரே வலியவர்என்று இவ்வண்ணம் பகர்வுஉற்றான். (66)

கண்ணனும், அருச்சுனனும் உரையாடியதால் உண்டான குற்றம் அற்ற கீதையின் பொருள் முழுதும் முன் சொன்ன வியாசபகவான் அருளினாலே நான் அறியத் தோன்றியது என்று கூறிய சஞ்சயன் துரியோதனாதியரின் தந்தை ஆகிய திருதராஷ்டிரனை நோக்கி, பிறரை வஞ்சிக்கும் வஞ்சனையையே கண்ணாகக் கொண்டு வாழும் உமது பிள்ளைகளைக் காட்டிலும் பாண்டவரே வலியவர்கள் என்று பின்னும் இவ்வாறு சொல்லத் தொடங்கினான்.

திருஅறம் நீதி செயம்புகழ் எல்லாம்
மருவரு மாயைசெய் மாதவன் வாய்மை
தருமம் விடாத தனஞ்சயன் என்னும்
இருவரும் நின்ற இடத்தன என்றான். (67)

திருமகளும், அறமும், நீதியும், வெற்றியும், புகழும் ஆகிய இவை அனைத்தும் பொருந்துதற்கு அரிய மாயையை உண்டாக்கும் கண்ண பெருமானும், சத்தியத்தையும், அறத்தையும் விட்டு நீங்காத அருச்சுனன் என்னும் இருவரும் நிற்கின்ற இடத்தில்தான் உள்ளன என்று சஞ்சயன் திருதராட்டிரனிடம் கூறினான்.

என்ற பொருள்திறம் இப்படி ஏயாக்
குன்றம் எடுத்துஅருள் கொண்டல் பணிப்பான்
வென்ற புலத்து வியாதன் விரிப்பான்
நின்ற வருக்குஇது நேர்பட அற்றோ. (68)

என்று நான் மொழிபெயர்த்த கீதையின் மறைபொருள்களை இப்படி ஒருவராலும் எடுக்க இயலாத குன்றத்தைக் குடையாக எடுத்த மேக வண்ணனாகிய கண்ணனே சொல்ல வல்லவன். பின்னர் இதனைச் சுலோகங்களால் விளக்க வல்லவர் வேத வியாசரே. அவரைத் தவிர மற்றவர்கள் இப்படிச் செம்மையாக மொழி பெயர்க்கவும் பாடவும் இயலுமோ?

வேதநூல்களின் முடிவினை வியாதனின் பின்னாள்
ஓதமாக்கடல் உலகில்உண் டாக்கிய உரவோன்
கோதுஇலாநெறி உணர்ந்தகோவிந்தமா முனிவன்
பாததாமரை பற்றிவீட்டு இன்பமே படைத்தான். (69)

வேத நூல்களின் முடிவினை வேத வியாசருக்குப் பிற்காலத்தில், அலைகளை உடைய பெருமை மிக்க கடல் சூழ்ந்த இவ்வுலகில் உண்டாக்கிய அறிஞர், குற்றமற்ற மரபு வழியை உணர்ந்த கோவிந்த மா முனிவனின் பாதத் தாமரைகளை முறைப்படி பற்றி வீட்டின்பத்தை யாவர்க்கும் உண்டாக்கிய சங்கர பகவத்பாதர்.

ஆற்றுஇயல் வழுவிய புலன்கள் ஐந்தையும்
பாற்றிய சங்கர பகவற் பாதன்என்று
ஏற்றிய பெயரினான் அருளி னால்யான்
சாற்றினன் இப்பெரும் தரும நூலையே. (70)

வேத நெறியில் இருந்து தவறிய ஐம்புலன்களையும் தம் பாஷ்ய ஞானத்தால் நீக்கிய ஸ்ரீ சங்கர பகவத்பாதர் என்று ஆன்றோரால் உயர்த்திச் சொல்லப்பட்ட திருப்பெயரை உடைய குருவின் அருளால் யானும் இப்பெரிய தரும நூலான கீதையை மொழி பெயர்த்தேன்.

**பதினெட்டாவது சஞ்சேப அத்தியாயம் நிறைவுற்றது.**

**பரமார்த்த தரிசனம் என்னும் பகவத்கீதை மூலமும் உட்பொருள் விளக்கம் என்னும் உரையும் (கூடார்த்த தீபிகை) நிறைவுற்றது.**

OOO



கோவிலூர் ஆதீனம்
சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்



சீர்வளர்சீர்
மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்
கோவிலூர் ஆதீனம்